உ

சிவமயம்.

கமலமாமுனிவர் அருளிச்செய்த

சாமுத்திரிகா லட்சணமென்னும்

ஹஸ்த

# இரேகை சாஸ்திரம்.



மூலமும் - உரையும்.

ம-௱-௱-ஸ்ரீ, கணிதநூற்புலவர்

மார்க்கலிங்கசோதிட ரவர்களால்

உரையெழுதப்பட்டு

டி. சாரதா புத்தகசாலை தலைவர்,

**த. துரைசாமி முதலியார்.**

அவர்களால்

சென்னை.

புவனேஸ்வரி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1928.



நெ. 23, பாளையப்பன் தெரு, மிண்ட் போஸ்டு, சென்னை.

உ

சிவமயம்.

# ரிஜிஸ்டர் காபிரைட்.



இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில், ம-ா-ா-ஸ்ரீ, சிறுமணவூர் கண்ணப்ப முதலியார் பாரியாள் சொர்ணம்பாள், கமலமாமுனி இரேகை சாஸ்திரம் மூலமும் உரை என்னும் இப்புஸ்தக காப்பிரைட் சுதந்திரத்தை எனக்கு விக்கிரையம் செய்து விட்டபடியால் இதை 1897-வது வருஷத்திய 25-வது ஆக்டு 20-வது பிரிவு 6-வது விதியின் பிரகாரம் இந்நூலை பிரான்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும், காரைக்காலிலும், காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது ஆகையால் இந்நூலுக் குடையவராகிய டி. சாரதா புத்தக சாலை தலைவர், த. துரைசாமிமுதலியார் அவர்களின் உத்திரவின்றி பிறர் இதைப் பதிப்பித்தலும், இதை வேறுபாஷையில் மொழி பெயர்த்தலும் அல்லது இதிற்கண்டிருக்கிற பாகங்களை அச்சிடுதலும் கூடாது அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

இப்படிக்கு,

த. துரைசாமி முதலியார்.

---

## சுத்தப்பதிப்பு சோதிட புத்தகங்கள்.

| | |
|---|---|
| சாதக சிந்தாமணி | 2—0—0 |
| சாதகாலங்காரம் மூலம் | 0–12—0 |
| ௸ மூலம்-உரை | 1—8—0 |
| விநடி பஞ்சபக்ஷி சாஸ்திரம் மூலமும்-உரையும் | 1—4—0 |
| கமலமாமுனி ரேகைசாஸ்திரம் மூலமும்-உரையும் | 1—0—0 |
| போகர் பஞ்சபட்சி மூலமும்-உரையும் | 0–14—0 |
| அகஸ்தியர் பஞ்சபக்ஷி மூலமும்-உரையும் | 0–12—0 |
| அகஸ்தியர் ஞானசாநூல் மூலம்-உரை | 0—4—0 |
| பெரிய வருஷாதி நூல் | 0—8—0 |
| மணிகண்ட கேரளம் | 0—6—0 |
| வால்மீகர் ஆரூடசாஸ்திரம் 150-பாடல் மூலம்-உரை | 0—8—0 |
| சகாதேவ சாஸ்திரம் | 0—4—0 |

---

உ

முருகக்கடவுள் துணை.

ஹஸ்த

# இரேகை சாஸ்திரம்.

## மூலமும்-உரையும்.



### முதற்காண்டம்.

—(✿)—

### காப்பு.

ஆதியெனும் பராபரத்தின் கிருபைகாப்பு
அன்பான மனோன்மணியாள் பாதங்காப்பு
சோதியெனும் பஞ்சகர்த்தாள் பாதங்காப்பு
சொற்பெரிய கரிமுகனுங் கந்தன்காப்பு
நீதியெழுமூலகுரு முதலாயுள்ள
நிகழ்த்தரிய மாமுனிவர் பாதங்காம்பு
வாதியெனும் பெரியோர்கள் பாதங்காப்பாக
வழுத்துகிறேனிரேகையின் மார்க்கங்கேளே

இ-ள் ஆதிபரம்பொருளாய் விளங்காநின்ற பரமசிவனது கிருபையைப் பெறும்படியாகக் காப்பாகவும் மனோன்மணியின் பாதகமலங்கள் காப்பாகவும் பஞ்சகர்த்தாக்களின் பாதங்காப்பாகவும் சொல்லுதற்கரிதாகிய யானைமுகத்தையுடைய விநாயகருடன் கந்தசுவாமியின் பாதகமலங்கள் காப்பாகவும் நீதியாக விளங்கும் மூலகுருவினோடு முதலாயுள்ள முனிவர்களின் பாதங்காப்பாகவும் பெரியோர்களின் பாதங் காப்பாகவுங் கொண்டு சொல்லத் தொடங்கினேன் இரேகையினுடைய மார்க்கங்கள் கேளும் எ-று. 1

கேளடா தலையோட்டின் மூட்டைப்பார்த்து
கேவலமாய்த்தலையெழுத் திதென்பார்மாந்தர்
தாளடா தமதுகையி லெழுத்தாமைந்தா
தவறில்லை சாமளையின் கடாட்சத்தாலே

வள்ளடாசிவசுப்பிர மண்ணியர்தானே
மலையமுற்ற குறமுனிக்காய் வழுத்தினர் பார்
ஆளடாவதிற்சிறிதே தெரிந்தமட்டும்
அவனியோர்க் குரைத்திட்டே னுதிகாப்பே

இ-ள் தலைமண்ணைட்டயோட்டின் மூட்டைப்பார்த்து அதை மூட்டென்றறியாமல் கேவலமாகத்தானே தலையெழுத்திதுதானென்று உலகிலுள்ள மாந்தர்கள் புதல்வரேதவிர தமது கரத்தினிடமாக விளங்கும் எழுத்தையறியார்கள் அப்படியறியாதார்க்குச் சாமளையின் கடாட்சத்தினல் சிவசுப்பிரமணியக்கடவுள் கிருபைகூர்ந்து அகத்தியமாமுனிவருக்கு அருளிச்செயதவற்றில் அதிற்சிலது தெரிந்தமட்டும் அவனியிலுரைத்தேன் பல்லோர் மகிழும்படியாக ஆதியின் காப்பாம் எ-று. 2

## உபாச தேவதையின் துதி

ஆதியெனும் பாராபரத்தின் பொருளேதாயே
அம்பிகையே பராசத்தி கவுரியம்பாள்
சோதியெனு மனோன்மணியே ரிமையமுக்கன்
துலங்குகின்ற வுத்தமியே சுயம்பாய்நின்ற
நீதியெனும் பரஞ்சுடரே நீலிசூலி
நீணிலத்தி னின்னையல்லாற் தெய்வமுண்டோ
வாதியெனும் வாலைபரமே வரியே நீல
வர்னவிழிப் பெண்ணரசாம் வஞ்சிநீயே

இ-ள் ஆதி பாராபரபொருளாய் விளங்கியதாயும், அம்பிகையாகியும், பராசத்தியாகியும், கவுரியாகியும், அம்பாளாகியும் சோதியாகியும் மனோன்மணியாகியும், உமையவளாகியும் முக்கண்ணியாகியும் துலங்காநின்ற உத்தமியே சுயம்பாய்நின்ற நீதியே பரஞ்சுடரே நீலியே சூலியே இப்பூதலத்தில் நின்னையல்லால் வேறு தெய்வமுண்டோ ஆதியெனும் வாலைபரமேஸ்வரியே நீலம்போன்ற வர்னவிழிகளை யுடையதாயே எ-று. 3

வஞ்சியெனுங் கொஞ்சுகிளி வாலைத்தாயே
மாதாவேயாதிசத்தி வடுகிமாரி
அஞ்சினேனின்பாத பதுமத்திற்கே
ஆணியே பூரணியே யபிராமித்தாயே
நெஞ்சினிலே நின்பாத நினைத்தேனம்மா
நேரிழையே யாரமிர்தே நினதுபாதம்
பஞ்சைகள்போல் ரிஷிகளெல்லா மஞ்சலிப்பார்
பத்தினியே யுத்தமியே யகங்கூர்வாயே.

இ-ள் வஞ்சியெனும் வடிவினையுடையாளாகியும் கொஞ்சுகின்றக் கிளியைப்போன்ற மொழியினுடைய வாலைத்தாயே எவ்வுயிர்க்கு மாதாவாகிய சத்திதாயே வடுகியேமாரியே அஞ்சினேன் உன்னுடைய பாத

பதுமத்திற்கே ஆரணியே பூரணியே யபிராமித்தாயே எனது நெஞ்சில் நின்பாதத்தை நினைந்தேன் அம்மணியாரமிர்தே உனது பாதத்தைப் பஞ்சைகள் போல் ரிஷிகளெல்லாம் அஞ்சலிசெய்வார்கள் பத்தினியாகிய ஓ அம்மையே உத்தமியே யகங்கூர்வா யம்மணி எ-று. 4

இரேகை விபரம்.

அகமான சுண்டிவிர லாம்பல்ரேகை
ஆறுவரை மூன்றுவரை யமர்ந்துநிற்கும்
சகமான நுனிகளெல்லாங் குவண்டைபாண்டில்
தனிப்பெறவே சுழிகளுடைச் சார்பதாகும்
மகமான புள்ளடிகண் மால்விந்தென்னும்
மகத்துவமா மூக்கோண வட்டக்கீற்றும்
பகமான கார்க்கோடன் பகைவன்ரேகை
பற்றியதா னேர்க்கீறு படர்ச்சிமாலே

இ-ள். அகமெனும் உட்புறமாகச் சுண்டுவிரலில் ஆம்பல்ரேகை ஆறுவரை மூன்றுவரைகளாகத் தோன்றிநிற்கும் அவ்விரலின் நுனிகளில் குவண்டைபையைப்போலும் வட்டமாக சுழிகளுடையதாகவிருக்கும் புள்ளடிகண் மால் விந்து என்னும்ரேகையானது மூக்கோணமாகவும் வட்டமாகவும் கீற்றுண்டாகி விளங்கும் கார்க்கோடன்ரேகையும் அதற்குப்பகைவன் ரேகையான கருடன் ரேகையும் நேர்க்கீற்றாகப் படர்ந்திருக்கும் எ-று 5

மாலையென்ற கபாலவிந்து மணிகள்ரேகை
மகத்தான மால்விரலில் வட்டம்போலாம்
ஆலையென்ற விடக்காத்தில் வலக்காத்தில்
அணிவிரலிற் புள்ளடிக ளெட்டேயாகும்
காலையென்ற சங்கனுடையப் பந்தனங்கள்
தனித்திருக்குந் திருவையென்ற ரேகைதானும்
வாலையென்ற வணிக்கண்டம் புள்ளடிகளென்ன
வாயுவிந்து மூன்றுண்டு சுழிதானென்றே

இ-ள், மாலையென்றுச் சொல்லும்படியாகிய கபாலவிந்து மணிகள் ரேகைகள்மால்விரலில் வட்டவடிவாகத் தோன்றும் வலக்காத்திலும் இடக்காத்திலும் உள்ள அணிவிரலில் புள்ளடிபோல் எட்டுரேகைதோன்றும் சங்கனுடைய ரேகைகளுடன் சேராமல் தனித்திருக்கும் திருவையென்ற ரேகையானது, வால்மீக பந்தனரேகையானது வணிகண்டம் புள்ளடியென்ன அதில் வாயுவிந்தரேகை மூன்றுண்டு சுழியொன்றுண்டு எ-று 6

ஒன்றான காாக்கோடன் கவுபுனமூங்கெண்டை
உயரவந்த ரேகையது நான்குண்டாகும்
நன்றானபேர்சுண்டன் வைவந்தனிரெண்டு
நாகரேஷன்ரேகை கீற்று நான்கு

வன்றான வாள்பரிதி கடோற்கசன் ரேகை
வாள்போன்று விரலெல்லா மேறிநிற்கும்
கன்றான பசுரேகை விடக்கண்ரெண்டு
கைநடுவே சதுர்கோணங் கலக்குமாலே

இ-ள். ஒன்றாகிய கார்க்கோடன் கவுபுனன் கெண்டையெனும் உயர்வாகிய ரேகையின் வரைநான்குண்டாம் சுண்டன்வைவந்தன் என்னும் ரேகையின் வரையிரண்டாகும் நாகரேஷன் ரேகையின் கீற்றுநான் காகத்தோன்றும் வாள்பரிதிகடோர்கசன் என்னும்ரேகையானது வாள் போல் விரல்களின் மீதெங்கும் ஏறிநிற்கும் பசுரேகை விடக்கன்ரேகை இவைகளிரண்டும் காத்தின் நடுவே சதுர்கோணமாகக் கலந்து கூடி நிற்கும் காண்பாய் எ-று. 7

மாலையென்ற மால்விரலிற் சம்பாரி
மயேந்திரம்போ லேறிநிற்கு நேர்கீறாகக்
காலையென்ற கோசரங்க ளாறிரண்டு
கண்டித்த கார்க்கோடன் குறுக்கேகோணம்
வாலையென்ற மயங்கிருதி காப்பிலியின்பேர்
வால்போலச் சிறுகீறு யைந்துண்டாகும்
தலையென்ற வட்டகெஜ மிரண்டுரேகை
தாளத்தின் மேலேதான் சுய்யம்ரெண்டே.

இ-ள். மாலையென்ற மால்விரலினில் சம்பாரிரேகையானது மயேந்திரம்போலும் ஏறிநிற்கும் நேர்க்கீறாகவும் கோசரங்கள் ஆறு இரண்டாகத்தோன்றும் கார்க்கோடன் ரேகையானது குறுக்கே கோணம்போல் விளங்கும் மயங்கிருதி காப்பிலியென்னும் பெயருடைய ரேகையானது வால்போல் சிறுகீற்றாக ஐந்துண்டாகும் அட்டகஜமென்னும் மிரண்டு ரேகையானது விரல்களின்மீது சுழி இரண்டாகத் தோன்றி விளங்கும் 8

ரெண்டான ரேணுகைதா னான்குமூன்று
ரேகைசிறு கீறதுதா னிரம்பவுண்டு
உண்டான குறுவகைகள் புள்ளடிகளென்ன
உண்டதுதான் கணக்கில்லை தள்ளிப்போடு
வன்றானகேசரியுங் கேந்திரந்தொட்டு
வலக்கீறு யுள்ளவெல்லாங் கணக்கேயாகும்
நன்றான நான்முகனுக்குமையாள் சொன்ன
நான்மறைகளொக்குமது நாட்டக்கேளோ

இ-ள் இரேணுவகையென்னும் ரேகைக்கு வரைகள் நான்குமூன்றதாகும் அதில்ரேகைகள் சிறுகீற்றாக நிறைந்திருக்கும் இன்னமும் குறுவரைகள் புள்ளடியென உண்டாகியவைகள் கணக்கில்லையாதலால் அதனைத் தள்ளிப போடவேண்டும் அன்றியும் கேசரியும்கேந்திரமுந் தொட்டு வலக்கீற்றாக விருக்கின்றவைகள் யாவும் கணக்கில் சேர்த்துக் கொள்ளவேண்டும் நன்றாகத்தானே நான்முகனுக்கு உமையாள்சொன்ன நான்மறைக் கொப்பானவிதை நாட்டக்கேளும் எ-று. 9

# இரேகைகளின் விபரம்.




உள்ளங்கையிலிருக்கப்பட்ட ரேகைகள்.

# இரேகைகளின் விபரம்


மணிக்கட்டுரேகை


மச்சரேகை

தலைரேகை


வேதரேகை


திரிகோணரேகை


அஷ்டகோண ரேகை


திரிசூலரேகை


டமரரேகை



வேல்ரேகை


கத்திரேகை


கன்னரேகை


மகரரேகை.

தாய்ரேகை


சூலரேகை.

பிதுர்ரேகை





ஆயுள்ரேகை


கோவுரேகை

வித்தியாரேகை

தனரேகை


வீட்டுரேகை


தனுசுரேகை


குடைரேகை


கோதுமையரேகை


சித்திரரேகை


அன்னரேகை


துவஜரேகை


தேவாலயரேகை


செடிரேகை


தடாகரேகை

# இரேகைகளின் விபரம்.



ரதரேகை



கமலரேகை

பாணரேகை



புஷ்பரேகை



சந்தானரேகை

அலகுரேகை



கூட ரேகை



நாற்கோண
ரேகை.



கலசரேகை



தராசுரேகை



எழுத்தாணி ரே
கை



அஸ்வரேகை



ஆனைதலைரேகை



கிரகரேகை



கஜரேகை



அங்குஸரேகை

குண்டலரேகை



பாவலிரேகை



சந்திரரேகை



சங்குரேகை



விஷமசதுர்



சூரியரேகை



யோனிரேகை



விரல்சக்கிரம்
ரேகை



பல்லக்குரேகை



கங்கணரேகை



ஆட்டுதலைரேகை



பர்வதரேகை





# இரேகைகளின் விபரம்.


நேத்திரகேகை


கெதரேகை


பெருவிரல் சக்கரம் நடுவிரல்கணுவிரலி லிருக்கப்பட்ட எவரேகை

நாற்கோணரேகை


ஆள்காட்டி விரல் சக்கரம்

கைவிரல் கணுவிரலி லிருக்கப்பட்ட எவரேகை

நீட்டுகீத்து ரேகை


நடுவிரலிலிருக்கும் சங்கு எவரேகை

நீட்டுகீத்து ரேகை


பவுததிரவிரல் சக்கரம்

நீட்டு கீத்துரேகை

ஆயுள்ரேகை


சிறியவிரல் சக்கரம்.

நீட்டுகீத்து ரேகை.

உள்ளங்கை இடப்பக்க ரேகை

புத்திரரேகை.

உள்ளங்கை வலப் பக்கம் ஸ்திரீ சின்ன ரேகை

சிபசுவஸ்திக ரேகை

நாட்டுகின்ற சுழிகளெட்டு அன்னரேகை
நலமான மயேந்திரந்தான் பனிரெண்டப்பா
கூட்டுகின்ற கிரீடியெட்டு தலைவனுக்கு
குறித்துரைப்பேன் ஐவிந்த மாறதாகும்
வாட்டுகின்ற சக்கரமுங் குலிசரேகை
வாள்குடோரி சங்குசக்கிரங்குலிசமாமே
தாட்டுகின்ற பால்பசரி சடவன்சாடி
தகிகண்டி சிகண்டி யெனும் ரேகைதானே

இ-ள் நாட்டியவாறு சுழிகளெட்டும் அன்னரேகையாகும் மயேந்திரம் பன்னிரண்டாகும் கிரீடியெட்டாகும் தலைவன்நான்கர்கும் ஐவிந்தம் ஆறாகும் சக்கரமும் குலிசரேகையான இவையிரண்டு இன்னும் வாள்குடோரிசங்கு சக்கரம் குலிசம் பால் பசரி சடவன்சாடி கண்டி சிகண்டியெனும் வழங்கிய ரேகைகளாகும். எ-று.

ரேகையெனுந்தாமரையின் குலிசஞ்சங்கு
நிகழ்ந்தவகை யாறுண்டு மூன்றுகோணம்
தாகவிடல் கார்க்கோடன் சமாலிசூலி
சார்பதத்தன் காப்பிலியன் சடாரிவீண்டன்
தோகைவிடன் மயிற்சாய லேழுபுள்ளி
தோல்விடவி நால்வரைகள் குறுக்கேயாகும்
ஆகவிட லெட்டிரண்டு முக்கவரின்ரேகை
ஆய்ந்துசொன்ன ரேகையினறிவைப்பாரே

இ-ள் மேற்கண்ட ரேகைகளில் தாமரை குலிசம், சங்கு, இவைகட்கு வகையாறும் மூன்றுகோணமாகத் தோன்றும் கார்க்கோடன், சமாலி, சூலி, சார்பதத்தன் காப்பிலி கடாரிவீண்டனெனும் ரேகைகளின் குறியெவ்விதமிருக்குமெனில் மயிலினுடைய வாலில் தோன்றிய கண்சாயலாக விருக்கும் எழு புள்ளிகளென வறியவும் அதில் நாலுவகைக்குறுக்காகவேறி நிற்கும் ஆகவிரல்கள் பத்துகளிலு முள்ள முக்கவரின் ரேகைகளை ஆய்ந்துச் சொன்ன ரேகையினுடைய அறிவைப்பாரும் எ-று. 11

## மயேந்திர ரேகையின் பலன்

பாரென்ற மயேந்திரந்தான் மூன்றுண்டானால்
பக்குவமா மவன்றிசையைப் பண்பாய்ச் சொல்வேன்
நேரென்ற வவன்பிறவி யாறுகெர்ப்பம்
நிகழ்த்துமவ னவமாசம் பிறவியாகும்
கூறொன்ற சிறுகுடியிற் பிறந்தமைந்தன்
குறிப்பாக மாலையிட்டுப் பிறந்தானப்பா
சாரென்ற குழவிபிதா வீட்டிலேதான்
சண்டையிட்டு மேற்கிலவன் போயிருப்பான்தானே.

இ-ள் பாரென்னும்யேந்திர ரேகையானது மூன்றுண்டாகில் அவன் நிசையைச் சொல்வேன் கேட்பாயாக. இவன் பிறவியாறு, கெர்ப்பத்தில் ஒன்பது மாதமிருந்துப் பிறந்தோனாகும்; சிறுகுடியில் பிறந்தவன் மாலையிட்டுவந்தவன் இக்குழயியின் பிதா வீட்டில் சண்டையிட்டு மேற்குத் திசையாகப் போயிருப்பான் எ-று. 12

இருக்கவே யிவன்பிறந்த நாலாமாண்டில்
இல்லமதிற்றீவிழுந்து வறுமைப்பட்டான்
பருக்கவே தாய்தந்தை மனிதர்மக்கள்
பக்குவமா யூர்த்துவதிசை யோடுவார்கள்
திருக்கவே பிதாவினிட யோகந்தன்னைத்
திரட்பரிசு பொருள்பணங்க டேடுவான்பார்
தருக்கவே தாய்மாமனுடந்தைப் பெண்கள்
தன்பிறவிப் பெண்குழந்தைச் சாவத்தானே

இ-ள். இருக்கினும் இவன்பிறந்த நாலாம் வருஷத்தில் வீட்டில் தீயானதுப்பற்றி யெரியும் அதனால் வறுமை யடைகுவன் இவனை யீன்ற தாய்தந்தை மனிதர் மக்கள் யாவரும் தாங்கள் வாழும்படியான வூரைவிட்டு ஊர்த்துவதிசை யோடு வார்கள் அப்படிக்கோடினும் இவனுடைய தகப்பனுக்குண்டாகும் யோகத்தினால் திரண்டபரிசு பொருள் பணம் இவைமுதலானதுந் தேடுவான் தாயுடன் பிறந்த மாமனுடைய பெண்களும் தன்னுடையப் பிறவியாகிய பெண்குழந்தையும் மணமாகும் எ-று- 13

ஆகுமடா விவனுக்கு வயதோர்பத்தில்
அரிதான மார்வந்து தயங்கினன்பார்
வாகுமடா பதினறி லவன்தோஷங்கள்
வந்துதான் றீருமடா வகையதாக
ஏகுமடா பதினெட்டாம் வயதின்மைந்தன்
இயலாக குடோரிகெண்ட நீராலுந்தான்
தோகையெனுஞ் சப்தமிரண்டு வயதின்மைந்தன்
சொற்பெரிய மாதாவு மிறப்பாளென்னே

இ-ள். ஆகினும் இவனுக்கு வயது பத்தில் வைசூரியானதுகண்டு தயங்கி நிற்பான் வயது பதினறில் நவக்கிரகதோஷ மனுகிதீரும் வயது பதினெட்டில் குடோரியினாலும் நீரினாலும் கண்டம் சம்பவிக்கும் வயது பதினலில் இவனுடைய தாயார் மரணமாகுவாள் எ-று. 14

என்னவே யிவனுக்கு யோகவாழ்க்கை
இடாாக வந்ததென்றே யியம்புவாய்கே
சொன்னதோ ரிருப்பத்தோ ராண்டிலேதான்
சுகமாக வேள்வியது முடியுமப்பா

கண்ணியதோர் யோகமதாற் பணமும்வீடும்
காசினியிலாச்சுதடா கனமாய்த்தானே
உன்னியதோ ரிவனுக்கு வயதோமைந்தா
உகந்துநான் சொல்லிவிட்டேனெழுபதாமே

இ-ள். என்னும்படியாக இவன்றனக்கு யோகவாழ்க்கைகள் யாவும் இடராக வந்தணுகுமெனச் சொல்லவேண்டும். அன்றியும் இருபத்தாறு வயதில் இவன்றனக்கு விவாகமானது நடக்கும்வாய்க்கும்படியான மனையாளினால் யோகமுண்டாகி பணமும் வீடும் காசினிமீதுப் பெற்று வாழ்வன் கனம்பெறுவன் இவன் தனக்கு வயது எழுபதாகும் எ-று. 15

## சுசிவர்ன சம்பராரி ரேகைகளின் பலன்

ஆமெனவே சுசிவர்னன் சம்பராரி
ஆறுவரை யிருக்குமெனி லவன்பலன்கேள்
தாமெனவே முப்பத்தாறுண்டுக்குள்ளே
தலைமகன்றானிறந்திடுவான் வியாதியாலே
போமெனவே பதினெட்டாம் வயதின்மைந்தா
பொல்லாத ராஜபகை யுண்டுகண்டாய்
வேமெனவே பதினாறும் வயதின்மைந்தா
வீட்டினிலே யனல்வீழு மெனச்சொல்வாயே

இ-ள் சுசிவர்ணசம்பராரி என்னும் ரேகை ஆறுவரை யிருக்குமாகின் அதன் தனக்குப் பலன் சொல்வேன் கேட்பாயாக தனக்கு வயது முப்பத்தாறில் தலைமகன் வியாதியினால் மறிப்பன்பதினெட்டாம் வயதில் பொல்லாப்பாகிய இராஜபய மணுகும் பதினாறும் வயதில் தன்னுடைய வீட்டில் தீபானது விழும் எ-று. 16

சொல்லவே யின்னமொரு சுருதிமைந்தா
சொற்சூத்திர மின்னமுமொன் றுண்டுகேளாய்
நல்லவே யிவன்பிறந்த நாலாமாண்டில்
நன்மாரி கண்டமொன்று வந்ததப்பா
அல்லவே யிவன்பிறந்த வாறுமாண்டில்
அடைவாகப் பிதாவுந்தான் றனமெடுத்தான்
ஒல்லையிலா நாய்கடிக்கு மாடுபாயும்
ஓதமுள்ள ரோமமிவ னுடலிலாச்சே.

இ-ள். மேற்சொல்லியதில் இன்னமொரு சுருதியின் சூத்திரமானதைச் சொல்வேன் யாதெனில் இவனேன் பிறந்த நாலாம் வருஷத்தில் மாரியினுடைய கண்டம் வந்தகண்டு ஆறும்வருஷத்தில இவனுடைய தகப்பன் தனப்புதைய லெடுப்பான் அதுவுமன்றி இவனை நாய்கடிக்கும் மாடுபாயும் ரோமமானது இவனுடைய தேகம் ஆகியந் தமும்நீட்சியாக விருக்கும் எ-று 17

ஆச்சப்பா நாற்பத்தாறுண்டுக்குள்ளே
அருள்பெருகும் புதுமனைதா னெடுப்பான்பாரு
வாச்சப்பா வோர்பெண்ணாற பணமுங்காசும்
வந்துமே கூடுமென்று வகையாக்கூறு
பேச்சப்பா வவன்பததா றுண்டிலேதான்
பிரியமாய்ப் பூமியது வாங்குவான்பார்
காச்சப்பா மயேந்திரமுந் தானுண்டானல்
கண்டதொரு பிள்ளைகளோ ராறுண்டாமே

இ-இ ஆயினும் இவன்றனக்கு வயது நாற்பத்தாறில் அருளான தும் பெருகும் புதிய மனையானது வெடுப்பன் ஓர் பெண்பாலினல் பணமுங்காசும் வந்துசேரும் ஐம்பத்தாறும் வயதில் பூமியானது வாங் குவன் இதனோடு மயேந்திர ரேகையானது இருக்குமாகின் பிள்ளைகள் ஆறுண்டாகும் எ-று. 18

உண்டான பிள்ளைகளி லாணேநான்காம்
உற்பாதபெண்பிள்ளை யிரண்டுண்டாகும்
நன்றாகக் குழவியைந்தே நிலைக்குமப்பா
நயமாகக் கருணையுண்டாய் நடந்துகொள்வார்
குன்றும லிவன்பிறந்த ஆதிவாரம்
குற்றமில்லா விரேவதியிரண்டாங்காலாம்
மன்றான மேடமே காதசியிற்றானே
வரிசையாய்ப் பிறந்ததிவன் வண்மைகூறே

இ-ள் மேற்கூறிய பிள்ளைகளில் ஆண்நான்கும் பெண்ணிரண் டும் பிறக்கும் அதில் நிலைப்பது ஐந்தாகும் அவர்கள் கருணையுள்ளவர் களாக நடந்துக்கொள்வார்கள் இவன் பிறந்தது ஞாயிற்றுக்கிழமை யாகும் இரேவதி நட்சத்திரத்தில் இரண்டாங்காலாகும் இராசியோ மேடமாகும் திதியோ ஏகாதசியாம் இத்தியாதிகூடிய நாளிற்பிறந்தவி வன் வண்மைகூறுவரம் ஏ-று. 19

கூறுவோ மோராறுபத் தைந்தாமாண்டில்
குற்றமுண்டு வியாதியாற் கண்டமுண்டு
பேறான பெண்ணாலே வந்தசாபம்
பிரதிஷ்டை யீசனுக்குப் பேணிச்செய்தால்
தீருமே பிணிதீர்ந்த பின்னேரைந்தில்
தீர்க்கமாய்ப் பிணியின்றி யிருந்துமைந்தா
ஆரவே குழவிகட்கு விவாகஞ் செய்து
அன்னவனும் வாழ்ந்திருப்ப னௗவாய்கூறே

இ-ள் கூறுவோ மின்னமுங் கேட்பாயாக இந்நோன் பிறந்த அறு பத்தைந்தாம் வயதில் குற்றமாகிய வியாதியும் கண்டமும் பெண்பா லால் வந்த சாபமும் வத்தணுகும் அது தீர்வதற்கு சிவபெருமானைப்

பூசித்துவரில் அவை நீங்கிப்பிணி முதலானதுந் தீர்ந்து பின்னால் எழு பதுவயது வரையிலும் தீர்க்கமாக விருந்து பிள்ளைபெண்களுக்கும் விவாக முதலானதுஞ் செய்துவைத்து பின்பு மரணமடைகுவன் எ-று. 20

## மயேந்திரரேகை மூன்றின்பலன்

கூறவே மயேந்திரந்தா னுண்டானால்
குணமாக வதன்பலனைக் கூறக்கேளாய்
நேரவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நிச்சயமாய்ச் சொல்வதற்கு நிலைமைமைந்தா
காரவே யிவன்றனக்குக் காதன்மைந்தர்
கண்டிதமாய்ப் பதினோர் பேராவாரப்பா
பார்தனிலே மைந்தர்களிலிவனேமைந்தன்
பக்குவங்கே ளிரேவதையின் முதற்காலன்றே

இ-ள். கூறும்படியாயெ மயேந்திர ரேகையானது நான்குண்டாகில் அதன் பலனைச் சொல்வேன் கேட்பாயாக இவன் பிறந்த யோக வாழ்க்கையாவும் கூறுகின்றதற்கு நிலைமையாகும் அதாவது இவன் தனக்கு காதலரெனு மைந்தர் பதினோறுபெயர்கள் பிறப்பர் அதில் இவனே பாரிலுள்ள மைந்தர்களுக்கெல்லாம் மைந்தனுகும்பக்குவமாகிய இரேவதி நட்சத்திரம் முதற்காலில் பிறந்தோனாகும் எ-று. 21

சாலென்ற விவன்பிறவி யிருமனைக்குள்
கருணைசேர் கீழ்வாசன் மேல்வாசலாகும்
காலென்ற கதிரவனு ருதயந்தன்னில்
நலமாகப் பூமியைப்பார்த்துவந்தான்
பாலென்ற விவன்பிதாவுக் கிவனேமைந்தன்
பக்குவமா யிவனுக்குப்பாலனொன்றே
ஓலென்ற விவன்றனக்கு மக்கண்மூன்றும்
உதவியில்லை பிஞ்சுற்போ யுதவுமொன்றே

இ-ள். மேற்கூறிய வண்ணம் இவன் பிறந்தது இருமனையாகும் அதற்குள் கீழ்மேல்வாசலாக விருக்கும் இவன் சூரியோதயத்திற்கு பூமியைப்பார்த்து பிறந்தவன் இவன் பிதாவிற்கு இவனேமைந்தனுகும் இவனுக்கு பாலன் ஒன்றேயாகும் மூன் மக்கள் விளங்கினும் அவைகள் பிஞ்சிற்றுனே மரணமடைந்து உதவியாவது ஒன்றேயாகும் எ-று. 22

ஒன்றான கார்த்திகையிற் கெற்பமானால்
ஓகோ வாறுநாள் கெற்பமாகி
உண்டான விவன்பிறந்த மனையிற்றனும்
உறுதியுள்ள செல்வனுமா உயர்ச்சியுண்டாம்

கொண்டான விவன்பிறந்த வேழமாண்டு
குடிமனையும் வீடேகக் கூறலாகும்
நன்றான பதின்மூன்றின் மாரியோகம்
நலமுள்ள வுடற்பிறவி நாதனுமே.

இ-ள் உதவிய அப்பாலன் கார்த்திகையிற் கெர்ப்பமாகி பத்து மாதமுஞ் சென்று இவன் பிறந்தமனையிற்றானும் செல்வமானதுபெருகி உயற்சியுண்டாகும் இவன்பிறந்த ஏழாம் வருடத்தில் குடியிருக்கும் மனைவியும் வீடும் ஏகும் பதிமூன்றாம் வருடத்தில் மாறி யோகமுடன் உடன்பிறவியானதுகளுக்கெல்லாம் நாதனாகுவன் எ-று. 23

நாமென்ற விவனுக்குப்பொன்னிறைம்
நலமாகக் கையிருப்புத் தரிப்பனாகும்
மேமென்றெ மூன்றிடத்திற் குடியிருப்பான்
வெகுமுதல்களிவன் கையிலிருக்கும்பாராய்
பதினறுபேராகக் கூறிமறித்து ஒருத்தன் என்றமை
யால்பத்துபேர் அற்பாயுளான புத்திராகக்கொள்க
வாமென்ற வாலைசக்கரத்தின் பூசை
வரிசையாய் நடத்துவன்காண் மனதுவந்து
ஆமென்ற விவன்கரும மறக்கையாகும்
அப்பனே கேள்வியதோ ரேழிலாச்சே

இ-ள் மேற்கூறியவண்ணம் நாதனாகி பொன்னாரமும் பூண்பன் கையிருப்புள்ளோனாக விருப்பன் மூன்றுவிடத்து குடியானது யிருப்பன் வேணதோர்முதல் கையிலிருக்கும் அன்றியும் பதினறுபேராகக் கூறிமறிக்கு ஒருத்தனென்றமையால் பத்துபேர் அற்பாயுளானபுத்திராகக்கொள்கவேண்டும் இவன் வாலையினுடையப் பூசையைவரிசையாக நடத்துவன் மனமானதுக் கூர்ந்து இவன் தனக்கு விவாகம் ஏழாம் வயதிலாகும் கருமம்யாவும் மறைக்கையாகும்.

ஆச்சுதடா கெண்டாந்திர நாளுண்டாகும்
அப்பனேபதினேழி நீறிற்கெண்டம்
போச்சுதடா விருபத்தெட் டாண்டிலேதான்
பொல்லாத கிரகமென்ற ராகுதோஷம்
வாச்சுதடா ரோகமுந் தானிவன் றனக்கு
வண்மையாய் வந்ததென்று வகையாய்க்கூறு
பாச்சுதடா பரதனிட மைந்தனை
பழனிமலை வேலவனற் பலியாதன்றே.

இ-ள் ஆச்சென மேற்கூறியதோடு கெண்டம் நாளுண்டாகும் அதினும் பதினேழாம் வயதில் நீரினல் கெண்டம் நேரும் இருபத்தெட்டாம் வயதில் கொடுமையாகிய இராகுதோஷம் வந்ததனுகும் அதினல் ரோகமானதுப்பெருகும் இவை பாமசிவனுடைய புத்திராகத்தோன றிவிளங்கியப்பழனிமலை வேலனர் காட்சியாகத் தப்பிவிடும்பலியாது எ-று.

25

பலிதமென்ற மயேந்திரன்தான் நான் குண்டானல்
பக்குவமாம் வயதுதா னெழுபத்தைந்தாம்
பொலிவென்ற விவனுக்குப் புத்திரசாபம்
புனைமையா லிவனுக்கே யற்பசாபம்
குலிவென்ற முதற்பிறவி தன்னிலேதான்
கூர்மையாய் வந்ததென்று கூறலாகும்
ஒலிவென்ற விவனுடனே பிறந்தபெண்ணே
உதவுவாள் பொருள்களைத்தா னுண்மைதானே.

(இ-ள்) பலிதமென்ற மயேந்திரரேகையானது நான்குண்டாகியிருக்குமாகின் அவனுக்குவயது எழுபத்தி ஐந்தாம். அன்றியும் இவன் தனக்குப் புத்திரசாபம். இவைகள் முதற்பிறவியிலேயே வந்து வாய்த்ததென்று கூறலாகும். இப்போது இவனுடன் பிறந்த சகோதரியானப் பெண்ணானவள் பொருளுதவி செய்து வருகுவாள் உண்மையாகத்தானும் எ-று. 26

தானமெனு மிவனுக்குப் பொருளதாகத்
தலைவனென்று பெற்றிடுவான் ருட்டியன்றன்
ஞானமெனும் விநோதவித்தை செய்வானப்பா
நாலுபேர்க் குடற்பிறப்பாம் பெண்ணைக்கொள்வான்
வானமெனு மிக்குழவிக் கிருபத்தெட்டாம்
வயதுதனில் வியாதியினல் வருமேகெண்டம்
ஊனமெனும் பதினன்காம் வயதின்மைந்தன்
உடலெல்லாஞ் சிட்டைவிழுந் தொழுவான்பாரே.

(இ-ள்) தானமாகத்தானும் இவன் பொருளனைத்தையும் தலைவனாகயிருந்து தாட்டிகனாகப் பெருகுவான், ஞானமார்க்கங்கள் பேசுவான், விநோதமாகிய வித்தைகள் செய்வான் நாலுபேர்களுடன் பிறந்தபெண்ணைக்கொள்வன் இக்குழவிக்கு இருபத்தெட்டாம் வயதில் வியாதியினல்கெண்டம்வரும் பதினாலாம் வயதில் தேக மாதியந்தமும் கொட்டையானது விழுந்தெழுவான்.

## மயேந்திரரேகை நான்கின்பலன்.

பாரென்ற மயேந்திரந்தா னன்குண்டானல்
பக்குவஞ் சொல்வனிது பரிந்துகேளு
காரென்ற விதியரக்கன் கார்க்கோடந்தான்
கருநாவு வினவுவித்தை யிருந்துசெய்வான்
பேரென்ற விவன்வீட்டில் வீரமாற்றிப்
பிரிவாக விருக்குமுதல் வியாங்கேளு
காரென்ற சன்னியாசி யுபதேசத்தால்
தானினைந்த குமரனையு மறந்தான்பாரே.

(இ-ள்) பார்க்க மயேந்திரரேகை நான்குண்டாகில் அதின் பலனை சொல்வேன் கேட்பாயாக. அரக்கன் கார்க்கோடன் கரு

நாவு இவைகளைக்கொண்டு வித்தைகள் செய்வான் இவனுடைய வீட்டில் வீரமாற்றிப் பிரிவாக விருக்கும் விபரத்தைக்கேளும் இவன் சந்நியாசியின் உபதேசத்தினால்தான் சதாகாலமும் நினைந்து வந்த குமரனையும் மறந்தான் பாரும் எ-று. 28

பாரென்ற குமரனிட காணிக்கைசர்க்கரை
  பாலிக்க மறந்திட்டான் கருப்பனாலே
தேனென்ற மலைமேலே வாழுந்தெய்வஞ்
  சிந்தனையாற் பரவசந்தான் றருவேனென்றாள்
வானென்ற வயதிலே வாலைபூசை
  வண்மையாய்ச் செய்தொழிலின் றப்பிதத்தால்
ஆரென்ற குழவிகட்கு மிவனுக்கப்பா
  ஆனதொரு தொழின்முறைகண் முடக்கும்பாரே.

(இ-ள்) பாரென்றபடிமேற்கூறி குமாரனுக்குச் செலுத்தும் காணிக்கையும் சர்க்கரையும்கொண்டுபோய்செலுத்த மறந்தான் அதுயெதனாலே யெனில் கருப்பனெனும் தேவதையினால் மலையின் மீது வாழும் தெய்வத்தின் சிந்தனையாலும் பரவசம் தருவே னென்னும் அதில் வாலைபூசைசெய்யும் தப்பிதத்தினாலும் குழவி கட்கும் இவனுக்கும் செய்யும்படியானத் தொழின் முறைகள் யாவும் முடக்காகினவாம் எ-று. 29

பாரெனவு மில்லறமுங் குடியுமைந்தா
  பக்குவமாய் மூன்றினுக்கும் பாவமாச்சு
காரெனவுந் தலைமுறைதான் மூன்றுக்கப்பா
  காட்சிபெற ஓர் தந்தைக் கோர்சேயாகும்
சீரெனவு மிக்குழவி நாற்பத்தொன்றில்
  சிலைப்பரவும் பிதாவுக்கு மரணமன்றோ
தீரெனவுங் கோத்திரத்தி லுடையார்மெத்த
  செப்புகிறே னிவன்கையி லேரேகையாறே.

(இ-ள்.) பார்க்க இன்னமும் இல்லறமும் குடியும் இவை சுற்றினுக்கும் பாவமானது நேர்ந்தது தலைமுறை மூன்றுக்கும் ஓர் தந்தைக்கோர்சேயாகத்தான் விளங்கும் அப்படி விளங்கியயிக் குழவிக்கு நாற்பத்தொருவயதாக நடக்குங்கால் பிதாமரணமாவான் இன்னோனுடையக் கோத்திரத்திலுடையார்கள் மெத்தவுண்டு ஆகினும் சொல்வேன் இவன்கையில் ரேகையாறுண்டாகில் கேளும் எ-று. 30

ஆரியதோரிக் குழவிக் கன்பாந்தாரம்
  அப்பனே பெற்றமக ளாறுஞ்சாவாம்
கூறியதோர் குழவியுடைக் கையைக்கண்டு
  குறித்தறிந்து சாபத்தின்:குறைவுதீர்ப்பாய்

பாறியதோர் பெற்றபிள்ளை நிலைக்குமப்பால்
பரிகாரஞ் செய்ததனுற் பாவம்போச்சு
கூறியதோர் பெற்றபிள்ளை வம்சத்தோடு
கொல்லுமடா பாவத்தின் வரலாறுகாணே.

(இ-ள்) மேற்கூறியவண்ணம்ரேகையாறுள்ள இக்குழவிக்கு அன்பான தாரம் வந்து வாய்க்கும் அவள் பெற்றமகள் ஆறும் மரணமாகும் கூறியபடிக் குழவியின் கையைக்கண்டு குறியறிந்து சாபத்திற்குறையைத்திர்க்க அப்பால் பெறும்படியானப் பிள்ளைகள் நிலைக்கும் பரிகாரஞ் செய்வதினுல் பாபமானதுபோகும் அல்லது பெற்றபிள்ளையானது வமிசத்தோடு கொல்லும் ஆதலால் பாவத்தின் வரலாறுக்காண்பாய் எ-று. 31

ஆறிலே ரெண்டுநீ கம்மிசெய்து
அன்பான குமரனை நீயறிந்துபோற்று
சீறிலே வயதிவனுக் கெழுபத்தைந்தாம்
செப்பினேன் ருமதோ ரறுபத்தாகில்
காறிலாறுங் காண்ட மெட்டாம் பாட்டின்
கணக்குகளி னுர்கண்டமுதற் கருத்தாய்ச்சொல்வேன்
பாரிலே முனிவர்களுந் தேவற்போற்றப்
பக்குவங்கள் சொல்கிறேன் பண்பாய்க்கேளே.

(இ-ள்.) மேற்கூறியரேகை ஆறில் இரண்டுக் கம்மிசெய்து அன்பானமனதோடு குமரனை யறிந்து போற்ற வயது எழுபத்தைந்தாகும். அதில் அறுபத்தாறில் ஆறுங்காண்டத்தில் எட்டாவதுபாட்டின்கணக்கோடு இதன்பலனைச்சொல்வேன் இப்பாரின்கண்முனிவர்களும்தேவர்களும்போற்றப் பக்குவமாகச்சொல்லுகின்றேன் பண்பாய்க்கேளும் எ-று. 32

கேட்கவே மயேந்திரந்தா னுன்குண்டானல்
கேவலமா யிரேகைகளின் மார்க்கஞ்சொன்னேன்
நாட்களுக்குமராசிகட்குஞ் சேராரேகை
நலமாகக் கண்டதனைத் தள்ளிமைந்தா
வாட்கவே மயேந்திரந்தா னைந்துரேகை
வளமாக விருப்பதென்ருல்வகையைக்கேளாய்
கோட்களொன்று மில்லையடா குணமுண்டாகும்
கூறுவோ மதன்விபரங் கூறக்கேளே.

(இ-ள்.) மயேந்திரரேகை நான்குண்டானல் அதிற்கேவலமாகிய ரேகைகளின் மார்க்கஞ் சொன்னேன் அன்றியும் நாட்களுக்கும் இராசிகளுக்கும் சேராத ரேகையைக்கண்டு தள்ளிப்போட்டு மயேந்திரரேகை ஐந்திருக்குமாகின் அதின் வகையைக் கேளும் அதற்கு கோட்களொன்றும் சம்பந்தமில்லை குணமாகும் அதின் விவரங்கூறுவேன் கேளும் எ-று. 33

## மயேந்திரரேகை ஐந்தின்பலன்.

கேளடா மயேந்திரந்தா னைந்துண்டானால்
கீறுபுள்ளி மூன்றுண்டி ரண்டுரேகை
வாளடா வவன்பிறவி பாஞ்சாலந்தான்
வரிசையுள்ள வேழான கெர்ப்பமாச்சு
தாளடா விவன்பிறவி யேழுபேரும்
தங்கைமார் மூன்றுண்டு தயவாய்தானே
பாழடா வொன்றுமில்லை கனவானப்பா
பாக்கியங்கள் பெற்றிடுவான் பண்பாய்த்தானே.

(இ-ள்) மயேந்திரரேகை ஐந்துண்டாகின் அதின் பலன் சொல்வேன் கேட்பாயாக அன்றியும் கீறுபுள்ளியானது மூன்று இரண்டு ரேகை அதனுடனிருக்கில் அவன்பிறவி பாஞ்சாலனாகும் ஏழாம்நாளில் கெற்பந்தரித்தவன் இவன் பிறவியேழாகும். அதில் தங்கைமார்கள் மூன்றுபேருகும். கெடுதியானது ஒன்றுமில்லை கனவானாகுவன் பாக்கியங்கள் பெறுவன் எ-று. 34

தானமெனு மிவன்பிறவி யைந்தாம்பிள்ளை
தாட்டியர்கண் முன்பிறந்தா ரப்பாகேளாய்
வானமெனு மிவன்பிறந்த வில்லறந்தான்
வாழ்க்கையுள்ள விருமனையிற் றென்பார்வீட்டில்
கானமெனும் மிவன்பிறந்த மூன்றுநாளில்
கட்டழகி பாட்டியவ ளிறப்பாள்பாராய்
ஞானமெனு மிவன்பிறந்த மாதமொன்றில்
நாகசர்ப்பம் வீட்டிலேதான் தொட்டிலாச்சே

(இ-ள்.) மேற்கூறியபடி இன்னோன் ஐந்தாவதுப் பிள்ளையாகும் இவன்முன் பிறந்தோர்கள் தாஷ்டீகர்களாக விருப்பர், இவன் பிறந்த இல்லமானது வாழ்க்கையுள்ள இருமனையில் தென்பால் வீட்டில் இவன் பிறப்பன்; இவன்பிறந்த மூன்றுநாளில் பாட்டியானவள் மரணமாவாள் இவன்பிறந்த ஓராம்மாதத்தில் வீட்டிலுள்ள தொட்டிலில் நாகசர்ப்பம் சயனித்திருக்கும் எ-று. 35

ஆச்சென்ற தொட்டிலிலே நாகம்வந்து
அடவாகப் படுக்கைகண்டு பயந்தாரப்பா
கோச்சென்ற குழவியைத்தான் கொல்லுமென்று
கொந்தவிட்டு குமாரனைத்தான் வணங்கினாரே
தாச்சென்ற குமரனுக்கு மனமிறங்கித்
தயவாக நாகசர்ப்ப மிறங்கிற்றப்பா
காச்சென்ற காட்சியதாய் சுப்பராயன்
கருணைவைத்து யோகவா னாயாகலாச்சே

இ-ள் ஆச்சென அப்பாலன் சயனித்திருக்கும் தொட்டிலில் நாக சர்ப்பமானதுவந்து பாலனுடையப் பக்கவில்படுத்திருக்கக்

கண்டுப் பயந்து குழவியைக் கொல்லுமென்று கூச்சலிட்டு குமார சுவாமியை வணங்கித்தொழுக அவர்க்கும் மனமிறங்கிக் கிருபைப் புரிய அந்த நாகசர்ப்பம் இறங்கிப்போயிற்று அதன் பின்பு காட்சியாக சுப்பராயன் கருணைவைக்க இவன் யோகவானுகலாகும்.

ஆச்சப்பா மாதிவாரம் ராகுதன்னில்
அன்பான நாழிகைதா னிருபத்தைந்தாம்
பேச்சப்பா சுக்கிரனும் ராகுவுச்சம்
பிரியமாய்த் தசமியிலே பிறந்தானப்பா
வீச்சப்பா மெய்யதுநொந் தேழுநாளாய்
வேதனையாற் பெற்றமைந்தன் விபரங்கேளாய்
காச்சப்பா விவனாலே வீட்டிலேதான்
கடாட்சித்தா ளிளையவளுங் கருணைகூர்ந்தே

இ-ள். மேற்கூடிய இப்பாலன் ஆதிவாரம் இரவில் நாழிகை யிருபத்தைந்திற்கும் சுக்கிரனும் இராகுவும் உச்சமாகவிருக்க இவன் பிரியமோடுதசமியில் பிறந்தோனாகும். இவன் தாயார் ஏழுநாள் கெர்ப்பவேதனைப்பட்டு பெற்ற மைந்தனிவனுடைய விபரங்களைக்கேளும் இவனாலே மனையில் லட்சுமிவந்து கடாட்சித்தாள் ஈ-று. 37

கருணையென்ற விவன்மாதா குளித்தவேழிற்
கட்டழகன் மதுபானஞ்செய்துக்கொண்டு
வருணையென்ற வடமுகமாய்த் தலையைவைத்து
வங்கணத்தான் முதற்சாமம் புணர்ச்சியாகி
திருணையென்ற விதபட லீலையாலே
திரட்கண்ட வாயுவங்கே யொதுங்கிற்றப்பா
அருணையென்ற கருவதனிற் குழவியாய்த்தான்
ஆண்பிள்ளை பிறக்கும்போ துயரமாச்சே

இ-ள். மேற்கூறியப் பாலனுடைய மாதாவானவள் தான் குளித்த ஏழாம்நாளில் அவளுடைய புருஷனானவன் மதுபான முண்டு வடக்கு முகமாகத் தலையைவைத்து முதற்சாமத்தில் புணர்ச்சியாகிய லீலை செய்யும்போது வாயுவானது வொதுங்கி கருவானதுதரிக்க அக்குழவியாண்பிள்ளையாகப் பிறக்கும்போது துயரமுண்டாயினவாம் எ-று. 38

ஆச்சடா விவன்பிறவி யழகியன்றுன்
ஐந்துமக்கள் பிறந்திடுவா ரிரண்டுசாவாம்
வாச்சடா தேவிமா ரிரண்டுபேராம்
கைம்பெண் சாதிகளுடனே வாழ்க்கையாகும்
பேச்சடா வயதொரு பத்தாகுமுன்னே
பிரபலங்க ளாகவே நடப்பான் மைந்தன்

கூச்சடா விவன்குடியிற் றனமோமெத்த
கொற்றவர்க டுயரமெல்லாம் நீங்கிற்றன்றே.

இ-ள். ஆயினும் இவன் அழகுடைய பாலனாகும். இவனுக்கு மக்கள் ஐந்துபேர்கள் பிறப்பர் அதில் இரண்டு மரணமாகிவிடும். இவனுக்கு தேவிமார்கள் இரண்டுபேரிருக்கினும் இவன் விதவைக ளுடன் வாழ்க்கையுடையோனாகுவன்; இவனுக்கு வயது பந்தாகு முன்னமே பிரபலமுடையவனாக நடப்பன் இவனுடையக் குடியில் தனமானது மெத்தவுண்டாயிருக்கும் இவனை யீன்றவர்கள் துயரமும் பந்துக்களுடைய துயரமும் அன்றே நீங்குமென்ப தாம் எ-று. 39

நீங்கிடவே யிவன்வயதோ ரிருபத்தாறில்
நிகழ்த்துகிறேன் பொல்லாத கண்டமப்பா
தாங்கிடவே ராகினிடத் தோஷத்தாலே
தகவில்லாத் தைந்துதிங்க ளலைவானப்பா
ஏங்கிடவே சிவன்பதத்தை வணங்கிக்கொண்டால்
ஏகுமடா வல்பிணியு மியம்பினேனான்
ஓங்கிடவே யிவன்வயதோ ரெழுபதுக்குள்
உத்தமன்றான் கண்டமட்டி லுயர்வுதானே.

இ-ள். மேற்கூறியபடி நீங்கினும் இவனுக்கு வயது இருபத் தாறில் சொல்லுதற்கரியப் பொல்லாதக் கெண்டம் வாய்க்கும். அதனோடு இராகுவினுடைய தோஷத்தினால் தகவில்லாமற் படிக்கு ஐந்துமாதம் அலைச்சல்பட்டுத்திரிகுவான்; அது நீர பரம சிவனுடையப் பாதத்தைதவணங்கித் தொழுதுவரில் தோஷமும் பிணியும் நீங்கிவிடும் இவன் வயது எழுபதுக்குள்ளாம் கண்ட வரைக்கும் உயர்வாகத்தான் எ-று. 40

வாவென்ற விவன்வயது பதினேழாண்டில்
தகைமையில்லா நாற்காற்றான் குத்தித்தள்ளும்
தானென்ற பதிமூன்று வயதிலேதான்
தாட்டவே சத்துருவான் மெலிவான்மைந்தன்
ஊனென்ற விருபத்தா றுகுமாண்டில்
உயரவே முறிந்து விழுவான்பாரு
கானென்ற நாட்டிலேதான் போகும்போது
கரடியிவன் மேல்விழுந்து பாயுமென்னே.

இ-ள். இவனுக்கு வயது பதினேழில் நாற்கால்ஜீவன் இவ னைக் குத்தித்தள்ளும், பதின்மூன்றும் வயதில் சத்துருக்களால் பாதைப்படுகுவன், இருபத்தாறும் வயதில் உயரத்தினின்று முறிந் துக் கீழேவிழுவான் அதுவுமன்றி இவன் காட்டின்வழியாகப் போகும்போது கரடியானது இவன்மேல் வந்து விழுந்துபாயும் அதினால் மெலிகுவான் எ-று. 41

என்னவே யிவன்வயது முப்பத்தாறில்
ஏந்திழையா டன்னாலே விலங்கில்வீழ்வான்
உன்னவே யிருபத்தா றாண்டிலேதான்
உற்பனமாய் வெடிமருந்தில் வேவானப்பா
பன்னவே யிருபத்தெட்டாண்டிலே தான்
பாலகனு நீராலே மெலிவானப்பா
கன்னவே கண்டமட்டின் மைந்தனுக்குக்
கருணையா லாச்சுதென்று கணிந்துகூறே.

இ-ள். என்ன அப்படிக்கு மெலிகினும் இவனுக்குவயது முப்பத்தாறில் ஸ்திரீயினால் துன்பமுண்டாகி விலங்கு பூண்பான், இருபத்தாறும்வயதில் வெடிமருந்தினால் வேகுவன் இருபத்தெட்டாம் வயதில் நீரினால்மெலிவான். இவைகள் கண்டமட்டினுமாச்சுதென்றுப்பாலனுக்குக்கருணையாகக் கூறுவாய் எ-று. 42

கூறியிவன் ரோகணியிற் செனனமானான்
குடிப்பான பொன்வார முச்சிதன்னில்
பாரியிவன் பதினன்காம் வயதிலொன்று
பாலகற்கு விவாகமது படியுமன்றே
தாரிலிவன் தானைகமுப்பத் தாறில்
தைரியங் கொண்டாடும் தாட்டிகனேயாவன்
தோர்வில்லா திருமனையுங் கட்டிவாழத்
தோன்றுதலே மங்கையிடத் துயரம்போமே.

இ-ள். கூறினும் இவன் உரோகணி நட்சத்திரம் வியாழக்கிழமை உச்சிவேளையில் ஜெனனமானவன், இவனுக்கு வயது பதிநாலில் விவாகமானதுமுடியும், பூமியின்கண் இவன்வயது முப்பத்தாறில் தைரியமுடைய தாட்டீகனாகுவன், தோர்வையான இரண்டுவீடானதும்கட்டிவாழ்குவன்; மங்கையினிடத் துயரமும்போம்.

போமென்ற விவனுக்குத் தாரம்ரெண்டு
புகழவே பெற்றபிள்ளை யைந்துண்டாகும்
காமென்ற விவன்மாதா முப்பத்தெட்டில்
கைம்முறையால் பரமபத மடைவாளப்பா
ஊமென்ற விவன்பிறந்த நாற்பத்தைந்தில்
உத்தமனு மிருந்திடுவா னுயர்வுதானே
காமென்ற விவன்வயதோ ரெழுபதுக்குள்
கைலைதனை யடைந்திடக் காரணமாமென்னே.

இ-ள். போயினும் இவன்றனக்குத் தாரமானது இரண்டாகும் இவை இரண்டிற்கும் சந்ததி ஐந்துண்டாகும்; இவனுடைய தாயார் முப்பத்தெட்டாம் வயதில் மரணமாகிவிடுவாள்; இவன் தனக்கு வயது நாற்பத்தைந்தில் தந்தையானவன் மரணமாவன். இவன் எழுபதுவயதுக்குள் கையிலைபதி போயடைகுவானெனக் கண்டுரைப்பாய் எ-று.

44

## மயேந்திரரேகை ஆறின்பலன்

காரணமா மயேந்திரந்தா ளுறுண்டானுல்
காட்சிசொல்வே னிவன்வாழ்வு கருணைகூர்ந்து
வாரணமா முனிவர்களு முமையாந்தாயும்
வகுத்துரைத்த கட்டளையின் வகையைக்கேளாய்
பூரணமா முமையவளை ரிஷிகளெல்லாம்
போற்றிசெய்தே யடிவணங்கிப் புலனைகேட்க
நாரணனு நான்முகனுங் கும்பமூர்த்தி
நாதாக்க ளனைவோரு நன்றுய்க்கேளே.

இ-ள். காரணமாகத்தானே மயேந்திரரேகையானது ஆறுண்டானுல் அதின் பலனைக்காட்சியாகச் சொல்வேன் கருணையானது கூர்ந்து வகுத்துரைத்தக் கட்டளையின் வகையைக்கேட்பீராக. பூரணமாகத்தானே உமையவளை ரிஷிகளெல்லாம் போற்றிசெய்தும் அடிபணிந்தும் புலன்களைக் கேட்கச் சொன்னவாறு இப்போது நாரணன் நான்முகன் கும்பமூர்த்தியோடு நாதாக்களாகிய அனைவர்களும் கேட்பீராகவும் எ-று. 45

கேட்கவே மால்விரலில் ரெண்டுகீறு
கேவலமாய் நான்குவரை சிறியபுள்ளி
ஆட்கவே வவன்கையிலே யிருக்குமாகில்
அன்பான யோகவா னறிந்துபாராய்
நாட்கவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நன்ருகச் சொல்லுகிறே னடிக்கேட்பாய்
வாட்கவே மைந்தனுந்தா னிடக்கண்சாயல்
வந்தவிவற் குடற்பிறப்போ ரேழுபேரே.

இ-ள். கேட்பீராக; மால்விரலினிடமாக இரண்டு கீறும் அதனுடன் கேவலமான நான்குவரையும் சிறியப்புள்ளியுமாக அவன் கையிலிருக்குமாகின் அவன் யோகவானுகும் அன்றியும் இவன் பிறந்த யோகவாழ்க்கையானது நன்ருகச் சொல்லிக்கொண்டு வருகின்றேன் கேட்பாயாக, இந்தப்பாலனுக்கு வடக்கண் சாயலாகத்தோன்றும் இவனுடன்பிறந்த உடன்பிறப்பு எழுபேரும்.

பேருடனே யிவன்பிறப்பு முன்னும்பின்னும்
பேணியேயாண்பிள்ளைகள் பிறப்பார்மைந்தா
காருடனே பிறந்திவன் றிங்களாகும்
சாட்சாதி யீஸ்வரனுஞ் சோதியாகும்
கூறுடனே யிவன்மாதா குளித்தவேழாம்
குவலயத்திற் கெற்பமதாய்க் கூறலாகும்
சீருடனே கருதரித்தவூரைவிட்டு
சிந்தனையாய் போனவிடம் பிறந்தான்றுனே.

இ-ள். மேற்கூறிய ஏழுபேரில் இவனுக்கு முன்னும் பின்னுமாகப்பிறந்தோராகும். அவை ஆண்பிள்ளைகளாகப் பிறக்கும் இவன் பிறந்தவாரம் திங்கட் கிழமையாகும்; சோதிநட்சத்திரம் இவனுடைய தாயார்குளித்த ஏழாம் நாள் இவன் கெர்ப்பமாகத் தரித்தோனாகும். சீராகத்தான் கருதரித்த ஊரைவிட்டுச் சிந்தனையாகப் போய் சேர்ந்த விடத்திற் பிறந்தபாலனாகும் எ-று, 47

பிறந்தமனை சிறுகூரை பிதாவுமில்லை
பின்னுமுன்னு மனிதரின்றிப்பிறந்தான்மைந்தன்
அரன்றுணையா லிவன்பிறந்த வேழாமாண்டில்
ஆத்தாளைக் கொன்றிடுவா னவனுந்தானும்
பரந்தானே யிவன்பின்னே பிறந்தமைந்தன்
பக்குவமாய்க் காலுடனே நயனமில்லான்
குறைந்தவிம் மைந்தனுக்குப் பெண்ணேபாட்டி
குற்றமில்லா விளையபிதாக் கூடுங்காதிலனே

இ-ள். அப்படிப் பிறந்தோர் அம்மனை சிறு கூரையாகும்; இவன் பிறக்கும்போது தகப்பனங்கில்லையாம்பின்முன்னறியா மனிதர்களிடத்திற் பிறந்த சேயாகும்; பரமசிவனுடையக் கிருபையால் பிறந்த யிப்பாலன் ஏழாம்வயதில் தாயாரைக் கொல்வன்; இவனுக்குப் பின்னாகப் பிறந்த பாலர்க்கு கால் முடனும் கண்ணில்லானாகும் எ-று. 48

காதிலாச் சிறுவன் முப்பத்திரண்டில்
கருணையாந் தலைவனுந் தானிறந்தானப்பால்
வீதிலா விவனுக்கிங் குரிமையில்லை
விருதாவின் மைந்தனுந்தா னலைவானப்பா
தீதிலா விவன்றன்னைப் பிடித்தே தானடத்தச்
செகதலத்தி லொருத்தரில்லை சிவனல்லாது
பூதலத்தி லிவன்பிறந்த பதினேழாண்டில்
புதல்வனிவன் வெகுதுயரத் தலைவன்றானே.

இ-ள். காதிலா இச்சிறுவன் வயது முப்பத்திரெண்டில் தலைவனாகிய தந்தை மரணமாகி விடுவன். அதன்பின்பு இவனுக்கு யாதொரு ஆதரவுமில்லாமல் விருதாவிற்றானே மைந்தனிவன் அலைகுவான். இவனைக்காப்பாற்ற பூமியிலொருவருமில்லை பரமசிவனல்லாது, பூமியின்மேல் இவன்பிறந்த பதினேழாம் வயதில் இப்பாலன் மெத்தவுந் துயரமானது கொண்டு அலைகுவன் எ-று.

அலைவதப்பா வனேகமாந் தொல்லைப்பட்டு
ஆதரவின் றுளங்கலங்கி மயங்கினான்பார்
நிலைவதப்பா விருபத்தா றாண்டிலேதான்
நீதிதள்ள மைந்தனுக்கு யோகமாகும்

அலைவதப்பா பதின்மூன்று மாண்டிலேதான்
அன்பான நீரதனாற் கண்டமாகும்
மலைவதப்பா விருபத்தெட் டாண்டிலேதான்
வல்பிணியாற் கண்டமொன்று வந்ததன்றே.

இ-ள். மெற்கூறிய வண்ணம் அலைவதோடு அநேகந்தொல்லையும் பட்டு தன்னையாதரிக்க ஒருவருமில்லாமல் மனமானது கலங்கிநிற்பன்; இருபத்தாறும் வயதில் இவன் தனக்கு யோகமானது வாய்க்கும்; அன்றியும் பதின்மூன்றும் வயதில் ஜலகண்டம் சம்பவிக்கும் இருபத்தெட்டாம் வயதில் பிணியினால் பெருத்த கண்டம் நேரும் எ-று.

50

அன்றான மயேந்திரந்தா னானுண்டானால்
அன்னவனு மியோகவா னவான்பாராய்
ஈன்றான விவன்வயது முப்பத்தாறில்
நலமுள்ள கன்னிகையைத் தானாடிச்சேர்வான்
குன்றான குமரனிட வுதவியாலே
குவலயத்திற் பிறந்துவந்தான் தேவனாகும்
பன்றான மனையழித்து நாற்பத்துமூன்றில்
பதியிலிவன் புதுமனையு மெடுப்பான்பாரே.

இ-ள். மயேந்திரரேகையானது நான்குண்டாகின் அதின் பலன் சொல்வேன் கேட்பாயாக: அவன் யோகவானாக விருப்பான் வயது முப்பத்தாறில்; கன்னியரைச்சேர்குவன் குமாரசுவாமியினுடைய வுதவியினாலே இப்பூமியின்கண் பிறந்துவந்த இவன்தேவனாகும். இவன் பழயமனையை அழித்து நாற்பத்திமூன்றுவயதிற்குமேல் இவன் வாழும்பதியில் புதுமனைக்கட்டி வாழ்வன் எ-று.

51

பாரடா விவன்வயதோ ரெழுபத்திரண்டு
பத்தனுக்குச் சக்கிரத்தின் கருவமைப்பு
சீரடா விவன் யாக்கையொருவனாகும்
சிவப்பிரமாய் நவக்குழந்தை பிறக்குமன்றோ
காரடா விவனைத்தா னரனுமம்மைக்
கடாட்சிக்கப் பிறந்தமைந்தன் கடவுள்பத்தன்
கூறடா வவனுக்குக் கிரகம்ரெண்டிற்
கொற்றவனும் உச்சமென்று கூறுவோமே.

இ-ள். மேற்கூறிய இன்னோனுக்குப் பார்க்கவயதோ எழுபத்திரண்டு, இப்பத்தனுக்கு சக்கரத்தின் கருவமைப்பாகும் இவனுடையயாக்கையோ ஒன்றாகும், இவனுக்கு சிவனருளால் ஒன்பது குழந்தைகள் பிறக்கும். இவனை அரனும் அம்மையும் கடாட்சித்து அவ்வரத்தினால் பிறந்தமைந்தனிவன். கடவுள் தனக்குப் பத்தனாகும் கிரகம்ரெண்டு உச்சமாகயிருக்கப்பிறந்தவனிவனாகுமென்று கூறுவாய் எ-று.

52

கூறுவோ மிவன்பிறந்த விருபத்தாறில்
குலமகனுந் தீர்த்தங்க ளாடுவான்பார்
பாருவோ மிவன்பிறந்த வைந்தாமாண்டில்
பாலகனும் புலிகளிப்பான் பண்பன்றானும்
நேருவோ மிவனதோர் நாற்பத்தொன்றில்
நேர்மையுள்ள மைந்தனவன் பிறப்பானப்பா
சீறுவோந் திசையோ முடிந்துதப்பா
சீக்கிரத்திற் பிள்ளைகளைப் பெறுவான்பாரே.

இ-ள். கூறுவாயாக; இவன்பிறந்த இருபத்தாறும் வயதில் தீர்த்தங்கள் முழுதும் ஆடுவன், இவன்பிறந்த ஐந்தாம்வயதில் களிப்படைகுவன் நேர்மையாகிய வயது நாற்பத்தொன்றில் நேர்மையாகிய மைந்தன் பிறப்பான், திசை யோகங்கள் முடிந்த சீக்கிரத்தில் பிள்ளைகளைப்பெறுகுவன் எ-று. 53

பார்க்கவே யிவன்வயதோ ரெழுபத்திரண்டில்
பவழம்போல் பெற்றமைந்தன் சக்கிரவமைப்பில்
ஊர்க்கவே யிவன்பிறந்தான் றிவன்யோகத்தில்
உத்தமன்றான் பரமபத மடைந்தானன்றே
கார்க்கவே யீஸ்வரனார் கடாட்சத்தாலே
கருணைவைத்தா ரிவன்றானன் பத்துமூன்றில்
தீர்க்கமா யன்பதுமோ ரைந்திலேதான்
திரமாகப் பூமிகொள்வான் றிரமாய்த்தானே.

இ-ள். பார்க்க இவன் வயதோரெழுபத்திரண்டில் பவழம் போல் பெற்றெடுத்தமைந்தன் சக்கரத்தின் அமைப்பில் இவன் பிறந்தான் திசையோகமுடன் இவன் பிதாமரணமாயினன் ஈஸ்வரனார் கடாட்சத்தினால் இவனுக்கு வயது அன்பத்திமூன்றில் அதன்பின்பு இவனுக்கு வயது அன்பத்தைந்தில் இவன் பூமியான தும் கொள்வான் எ-று. 54

தானென்ற விவன்குழவி மூன்றும்பிள்ளை
தனமெடுப்பா னெட்டாண்டிற் றலைவனாகி
வானென்ற விவன்குழவி பத்துக்குள்ளே
வையகத்திற் றனசாலி யாவான்பாராய்
கானென்ற தேவியிடக் கடாட்சத்தாலே
கணக்கில்லா யோகம்வந்து கதிக்கும்பாராய்
தேனென்ற வக்கருத்தை விட்டிடாதே
தேன்மொழியாள் பத்தாலை மறந்திடாதே.

இ-ள். மேற்கூறியவாறு பிள்ளைகள் மூன்றுட் பெருகுவன் தனமானது மெடுப்பன், தன்துப்பிள்ளையாகிய மூவரில் தலைவனுக்கு யெட்டாம் வயது நடக்கையில் அன்றியும் இவனுடையக் குழவிக்குபத்துவயதாக தனசாலியாக விருப்பன், தேவியினுடைய கிருபையால்யாவும் யோகத்தினால்மென்மேலும் பெருகும்

ஆகினும் இவன் சிவபத்தியை யொருக்காலும் மறக்காமலும் தேன்மொழியாளாகிய மனையாள் பத்தாவை மறந்திடாதிருக்க தன்மையுண்டாம் எ-று. 55

மறக்காமற் கேசறியா மிரேகைமார்க்கம்
மாட்டுகிறேன் மைந்தனே மருவிக்கேட்பாய்
இறக்காம லீஸ்வரனுரெனக்குச் சொன்னார்
இன்னமுந்தான் மயேந்திரத்தின் விபரஞ்சொல்வேன்
பறக்கவே யிந்நூலை விட்டாயானால்
பவமான நரகத்தில் வீழ்வாய்மைந்தா
பிறக்கவே கேசரியின் மார்க்கந்தன்னை
பிரியமாய்ச் சொல்லுகிறேன் பெற்றபேறே.

இ-ள். மேற்கூறியபலனை மறக்காமல் கேசரியின் ரேகை மார்க்கங்களைச் சொல்லியவாறு மருவிக்கேட்பாய். அதை யிறக்காமலிருக்கும்படிக்குயீஸ்வரனு ரெனக்குச் சொல்லினர் அன்றியும் இன்னமும் ரேகையினுடைய மார்க்கங்களை விபரமாகச்சொல்வேன் இந்நூலைப்பறக்க விடுவையாகில் பாரமாகிய நரகத்தில் விழ்குவாய். இன்னமும் உனக்கு விளங்கும்படியாக ரேகையின் மார்க்கங்களைப் பிரியமோடு சொல்லிக்கொண்டு வருகிறேன் கேளும் எ-று. 56

---

## இரண்டாங் காண்டம்.

### காண்டம் வரலாறு.

பேறான மானிடனாய் பிறந்தபோதே
பெரிதான ரேகைகளை யறியவேண்டும்
கூறான மயேந்திரந்தா னாறுக்குள்மேல்
குணமாகக் கண்டக்காற் கூறக்கேளாய்
பாரான புவிதனிலே யிவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றவர்க ளொருவரில்லை
சீரான சிவன்முதலா யைந்துபேரும்
சென்மித்து வருவதுமுண் டவரைப்பாரே.

இ-ள். பூமியின்மீது பெயர்விளங்கத்தானே மானிடராகப் பிறந்த போதேபெரிதாகிய ரேகைகளைக்கண்டு அறியவேண்டும். அன்றியும் ரேகையானது ஆறுக்குமேலும் உள்ளுக்குங் காண்கில் கூறக்கேளும்; யாதெனில் பாரின்மீது இவனைப்போல் பாக்கியமானதுப் பெற்றோர் ஒருவருமில்லையாம் சீராகத்தானே இவன் முதலாக ஐந்துபேரும் ஜென்மித்து வருபவர்கள் அவரைப் பார்க்கவும்.

### மயேந்திரரேகை யேழின்பலன்.

பாரடா மயேந்திரந்தா னேழுண்டானால்
பக்குவமாய் மால்விரலி லேறிநிற்கும்

காரடா நால்கீறு மூன்றுபுள்ளி
கண்டிப்பா யிருக்குமடா கருணைகூர்ந்து
பேரடா பிரமாவின் செய்கைவந்து
பேணியே முளைத்ததென்று பிரிவாய்ச்சொல்லு
ஊரடா விவன்போல வில்லைமைந்தர்
யோகவானு யுதிப்ப னுகந்துபாரே.

இ-ள். பார்க்கயாவருக்கேனும் மயேந்திர ரேகையானது யேழுண்டாகில் மால்விரலிலே நிற்கும் அதில் நாலுகீறும் மூன்று புள்ளியுங்காண விருக்கும். அதுபிரமாவினுடைய செய்கையினால் உண்டாகினவாமென்றுச் சொல்க வேண்டும் இவன்போல மைந்தனில்லை யென்றும் யோகவானுகப் பிறந்தோனென்று ஆய்ந்து யிவனுடைய பலாபலன்களைப்பார்ப்பாய் எ-று. 58

பாரப்பா விவன்பிறந்த வாரந்திங்கள்
பாலகன்று னவ்வாரத் திரவுதன்னில்
நேரப்பா வோரிருபத் தைந்துநாழி
நேர்மையா நட்சத்திர தோஷமாகும்
கூறப்பா வநுஷத்தின் முதற்பாகத்தில்
கூர்மையாய்ப் புதனிவனுக் குச்சமானன்
தாரப்பா விவன்பிறந்த வீட்டிலேதான்
தனமுதலாய்ச் சம்பத்து விளங்குமன்றே.

இ-ள். பார்க்க இவன்பிறந்தவாரம் திங்கட்கிழமையாகும்; அன்றுயிறவு இருபத்தைந்து நாழிகையாகும் நட்சத்திர தோஷமுண்டு நட்சத்திரம் அநுஷம் முதற்பாகமாகும்புதன் இவனுக்கு உச்சமாக விருந்தான் அதினால் இவன் பிறந்த வீட்டில் தனமுதலான சம்பத்துண்டாகி விளங்கும் எ-று. 59

அன்றிடவே யிவனுக்கு வயதோமெத்த
அளவுறுந்த யோகமுமாய் விளங்குவான்பார்
நின்றிடவே தாய்மார்கண் மூன்றுபேராம்
நிகரில்லாச் செல்வமுள னிவன்பிதாவும்
நன்றிடவே தாய்மாம னைந்துபேராம்
நாற்றிநங்கை மார்களுமுண் டிவன்றுய்க்கப்பா
வன்றிடவே புத்திரரில்லா வீட்டிலேதான்
வந்து பிறந்தான் யோகவானுய்த்தானே.

இ-ள். மேற்கூறியவண்ணம் சம்பத்து யிவனுக்கு விளங்கினும் வயது மெத்தவுண்டாம் யோகமும்மென்மேலாகப்பெருகும்; இவன் தனக்கு தாய்மார்கள் மூவருண்டாம் நிகரில்லாதச்செல்வமுடையவனாகும் இவனுடையத் தந்தை அம்மான்மார் ஐந்து பேருடையவன்;இவன்தாய்க்கு நாத்தினிமார்களுண்டாம்;இவன் புத்திரர்கள் இல்லாத வீட்டில் வந்துபிறந்தோனாகும் அன்றியும் யோகமுடையவானுகவிருப்பன் எ-று. 60

யோகவான் பிறந்தவுடன் பிதாவுக்கப்பா
யோகோகோ பல்லக்கு தண்டிகையும்வரும்பார்
ஆகவான் புவனமெங்கு மதிகாரந்தான்
ஆண்டிருக்கத் திசையோகம் வருகுமப்பா
தாகவான் கடவுள்பதந் தொழுதுவாழ்த்தி
சந்ததமுஞ் சிவயோகஞ் சாதிப்பான்பார்
பாகவான் மக்களின்றிப் பெற்றமைந்தன்
வழுத்தரிய திசையோகம் வருகும்பாரே.

இ-ள். மேற்கூறியபலன் யோகவானாகப் பிறந்தவுடன் பிதாவிற்கு யோகமும் பல்லக்கும்வரும். பூமிமுழுதும் அதிகாரஞ் செலுத்துவன் அப்படிக் கிருக்கையில் திசையும் யோகமும் அதிகரிக்கும் எக்காலமும் கடவுள் பதத்தை மறவாமல் தொழுது வாழ்த்திச்சிவயோகங்களைச்சாதிப்பன்; மைந்தரில்லாமல் பெற்றச்சுதனால் திசையும் யோகமும் வந்து வாய்க்கும் எ-று. 61

வருகுமப்பா விவனுக்குத் திசையோகந்தான்
வளமான வெண்பத்தா றுண்டுமட்டும்
தருகுமப்பா விவனுக்குத் தாரம்ரெண்டு
தாட்டியாய் முடியுமென்று தகமைசொன்னேன்
பெருகுமப்பா விவன்வயதோ ரிருபத்தைந்தில்
பேரான சர்ப்பத்தார் கண்டமுண்டு
துருகுமப்பா விவனுக்குக் குதிரைகண்டம்
சுருதியாற் பதினெட்டில் வருகும்பாரே.

இ-ள். மேற்கூறியவண்ணம் இவன்தனக்கு திசையும்யோகமும் எண்பத்தாறுவயது வரைக்கும் நடக்கும் இவன் தனக்குத் தாரம்ரெண்டாகும் தாஷ்டீகமாக முடியும் அன்றியும் இவன் தனக்கு வயது யிருபத்தைந்தில் சர்ப்பத்தினால் கண்டம்நேரும்; அத்துடன் குதிரையினால் கெண்டமானது சுருதியின்படியாக பதினெட்டாம் வயதில் தப்பாமல் வந்துவாய்க்கும் எ-று. 62

பார்க்கவே யிவன்வயது நாற்பத்தைந்தில்
பண்பான வியாதிகண்டம் வருகும்பாரு
ஏர்க்கவே யிவனுக்குக் குழவிநான்காம்
ஏற்றமுள்ள குழவிகளாய்ப் பிறக்கும்பாரு
ஆர்க்கவே யிவன்யோகங் குபேரன்போலாம்
ஆனந்த கேசரியின் யோகமாகும்
மார்க்கமா யிவன்யோகஞ் சொல்லொண்ணாது
மன்னவனாய்ப் பூமிகொள்வான் மயேந்திரத்தாலே.

இ-ள். மேற்கூறியபடி வாய்க்கினும் இவன் தனக்கு வயது நாற்பத்தைந்தில் வியாதியினால் கண்டம் வந்தணுகும்; பிள்ளைகள் நான்குண்டாகும்; அப்படிப்பிறக்கினும் நன்மையுள்ளக்குழவி

நாலாகும் இவனுடைய யோகவாழ்க்கை குபேரனுக்குச் சமமாக விருக்கும் அதாவது ஆனந்தகேசரியோகமதனால் மார்க்கமாகிய இவன் யோகத்தைச்சொல்லமுடியாதாம். இன்னேன் மன்னவனாய்ப் பூமியானதுகொண்டு வாழ்குவான்; மயேந்திரரேகை யிவன்கையி லிருப்பதினால் இப்பலனுண்டாகும் எ-று. 63

தாலமென்ற விவன்றனும் யோகத்தாலே
சகலருக்கு மிவன்வாக்கு பலிக்கும்பாரு
ஞாலமென்ற யோகமடா சக்கிரயோகம்
நலமான மயேந்திரத்தின் பெருமையெல்லாம்
மூலமென்ற முன்சொன்ன பெருநூற் காண்டம்
முப்பத்தாறும் பாட்டின் மொழிந்தேன் மைந்த
காலமென்ற தீட்சையிடக் கருணையோகம்
கைகண்ட கண்டாந்திரங் கருணை கூர்ந்தே.

இ-ள். மேற்கூறிய இவனுடைய யோகத்தின் வலுவால் சகலருக்கும் இவன் வாக்கானது பலிதமாகும்; பூமியின்மீதுச் சக்கரயோகம் போலும் நன்மையாகி மயேந்திரரேகை யானதின் பெருமை விளங்கும் மூலமாகிய முன்சொன்ன பெருநூலாகியக் காண்டத்தில் முப்பத்தாறும் பாட்டின் பயனிலுஞ் சொன்னேன் அதாவது தீக்ஷையாகியக் கருணையுள்ளயோகம் இதனைக் கைக்கண்ட ஆந்தரீகமாகக் கொண்டு பலன் சொல்லவும் எ-று. 64

## மயேந்திரரேகை எட்டின் பலன்.

கருணைசொல்வேன் மயேந்திரந்தா னெட்டுண்டானால்
காட்சிபெறு மயேந்திரத்தின் மகிமைமெத்த
வருணைமந்திரஞ் செபஞ்செய்த யோககாலி
வந்துதான் மைந்தனாய்ப் பிறந்தானப்பா
தருணைசொல்வே னிவனைப்போ லுலகுதன்னில்
தாட்டியர்க ளில்லையடா சதுர்த்தனாகும்
கருணையடா விவனைத்தான் கண்டபேர்கள்
சாஷ்டாங்கஞ் செய்திடுவார் தானிற்றுனே.

இ-ள். மயேந்திரரேகை எட்டுண்டாகில் காட்சியாகிய அந்த சக்கரத்தின் மகிமை மெத்தவாம்; அதாவது வருணைமந்திரம் செபம்செய்தயோககாலி யாதலால் பூமியின்கண் மைந்தனாக வந்து பிறந்தான், இவனைப்போல் உலகில் யாருமில்லை தாஷ்டீகரும் யில்லை இவன் சதுர்த்தனாகும், இவனைக்கண்ட யாவர்களும் சாஷ்டாங்கமாகக் காலில்விழுந்துப் பணிகுவார் எ-று. 65

தானென்றபிணிபோச்சு துறவுண்டாச்சு
சாற்றிய செல்வங்க ளிவனுக்காச்சு
தானென்ற வில்லரத்திற் குழவிமைந்தன்
தகையாகப் பெற்றபின்பு வறுமைபோச்சு

நானென்ற ராசாக்க ணலமுண்டாச்சு
நந்திகுரு பீடமுந்தா னனுகலாச்சு
கானென்ற கடவுளர்தன் னருளினாலே
கட்டழகன் குபேரனாய் வாழ்வான்பாரே.

இ-ள். மேற்கூறிய இவன் பிறந்தவுடன் யாவருக்கும் பிணியானது தீரும் செல்வமானதும் பெருகும் உறவாகக் கூடும், இவன் பிறந்தவுடன் வருமையானது அகலும் இராஜாக்களின் நேசங் கூடும் குருபீடம் வாய்க்கும் கடவுளினுடைய கிருபையினாலே இன்னோன் குபேரனைப்போல் பூமியின்மீது வாழ்குவன்.

பார்க்கவே நிடதபுரி ராஜனைப்போல்
பண்பான யோகவனாய்ப் பிறந்தான்
ஏர்க்கவே யிவனுக்கிங் கயனுமாலும்
ஏற்றமுள்ள பாக்கியங்க ளீவதன்றி
காக்கவே பரஞ்சோதி யுமையாள்வந்து
கலைஞான முள்ளதுவுங் கருணை செய்வார்
தாக்கவோ சொல்லுகிறேன் தலைவனுக்குத்
தங்கமும் ரத்தின முளவாஞ் சார்புகேளே.

இ-ள். இன்னமுங் கேட்பாயாக மேற்கூறிய பாலன் நிடதபுரியையாண்ட நளமகாராஜனைப்போல் யோகவானாகப் பிறந்தவன் இவன் தனக்கு அயனும்மாலும் யேற்றமாகியப் பாக்கியங்களீவதுமன்றி பரஞ்சோதியாகிய உமையாள்வந்து கலைஞானமுள்ளதுயாவும்கருணை புரிகுவன்; அன்றியுந் தலைவனுக்குத் தங்கமும் ரத்தினமும் வரும்படியான சார்பை விபரமாகச் சொல்வேன் கேளும் எ-று.

67

கேளடா விவன்பிறந்தக் கூர்மைமைந்தா
கேவலமாய்ப் போனதுகீழ் வாசல்வீடு
ஆளடா கிழமையது வெள்ளியாகு
ஆனந்தங் கொண்டநா ளுத்திரமாகும்
தாளடா விரவுதனிற் றசமிபக்கம்
தாட்டிகனுஞ் சனியுதையந் தனிற்பிறந்தான்
நாளடா லக்கினத்திற் கிரகமைந்து
நலமாகப்பிறந்துவந்துவந்தா னடிக்கேளே.

இ-ள். கேட்பாயாக இவன் பிறந்தக் கூர்மை யாதெனில் கேவலமாகப்போனக் கீழ்வாசல் வீடாகும் பிறந்தவாரம் வெள்ளிக்கிழமையாகும் நட்சத்திரம் உத்திரம் இரவில் பிறந்தவன் திதி தசமி இவைகள்கூடிய தினத்தில் சனி யுதையத்தில் பிறந்த பாலனாகும் லக்கினத்தில் கிரகம் ஐந்துநிற்கப் பிறந்தோன் கேளும். எ-று.

68

கேட்கவே லக்கினத்திற் சுக்கிரனும் புதனும்
கேவலமாய்ச் செவ்வாயுஞ் சனியுஞ் சந்திரன்
மீட்கவே சுபர்பார்வை சுபரின்றிஷ்டி
மேலாகப் பெற்றிடவே பிறந்தான் மைந்தன்
வாட்டவே யிவன்வாழ்வு திசையின் மைந்தா
வரிசையாய் யிருந்தார்கள் வகையாய்க்கேளு
ஏட்டவே யிவன்பிறந்த வைந்தாநாளில்
எடுத்தார்காண் புதைத்திருந்த தனங்கடானே.

இ-ள். மேற்கூறிய கிரகங்களின் பெயர்சொல்வேன் கேட்பாயாக; சுக்கிரன் புதன் செவ்வாய் சனி சந்திரன் இவர்களிருக்க சுபர்கள் பார்க்க சுபர்கள் திஷ்டிப்பெறப் பிறந்த பாலனுகும். வாழ்க்கையாகிய யிவன் வாழ்வு திசையிலுண்டாவதுடன் வரிசையாக யிருந்த கிரகங்களின் வலுவால் இவன் பிறந்த ஐந்தாம் நாளில் மனையில் புதைத்திருந்த தனப்புதையலை யெடுப்பார்கள் அன்றியும் இன்னமும் இவன்பலன்களைக் கேட்பாயாக எ-று. 69

தனமென்ற யிவன்வயது மூன்றிலேதான்
தலைவனைத்தான் பெற்றெடுத்தா ளிவன்றுயப்பா
கனமென்றகாட்டிலவள் சென்றபோது
கண்டெடுத்தா ணிட்சேப தனங்களைத்தான்
வனமென்ற விவன்பிறந்த மாசந்தானும்
வைகாசி மூதற்றேதியாகு மன்றோ
நனமென்ற பொருளெல்லாம் வந்துதையா
நாற்றிசையு மெய்க்கவுந்தா னலம்பெற்றுனே.

இ-ள். கேட்க மேற்கண்ட யிப்பாலனுக்கு வயது மூன்றில் தலைவனைப் பெற்றெடுப்பாள். இவனுடையதாயார் அன்றியும் அவள் காட்டின் வழியாகப் போகும்போது கண்டெடுப்பள் நிட்சேபதனங்கள் இப்பாலன் பிறந்தமாதம் வைகாசி மூதற்றேதியாகும் பலவிதமானப் பொருள்கள் வந்து வாய்க்கும் நாற்றிசையும் மெய்க்கநலம் பெருவன் எ-று. 70

பெற்றிடவே யிவன்வயதோ ரெண்பத்தைந்தாம்
பேறுபெறு மிவ்வாழ்க்கை பெரியதாகும்
நற்றிடவே மனிதர்மக்கள் ரொம்பவாருர்
நாற்றிசையு மெய்க்கவந்தா னலங்கள்செய்வார்
சுற்றிடவே யிவன்பிறந்த யோகத்தாலே
சூழ்வினைக ளெல்லாந்தா னேடிப்போச்சு
பற்றிடவே பரமனிட தருளினாலே
பாலகன்றன் பூமிதனை யாள்வான்பாரே.

இ-ள். பெறினும் இவனுக்குவயது யெண்பத்தைந்தாகும் பெருமிதமான வாழ்க்கையும் பெரிதாகும், மனிதர்மக்களும் ரொம்ப

உண்டாகுவர், நாற்றிசையும் புகழும்படியாக நம்மை யாதும் புரிகுவர், சுற்றமாகத்தானே யிவன் பிறந்தயோகத்தினுல் இவன் குடும்பத்தில் சூழ்ந்திருந்த வினைகள்யாவும் பறந்தோடிப்போகும், பரமசிவனுடையக் கிருபையினுல் பாலன் பூமியையாள்வன்.

பாரப்பா மைந்தனுக்கு வயதோர்பத்து
  பண்பாக வாகுமப்பா பாக்கியமொன்று
பாரப்பா மைந்தன்றன் மண்ணைக்கெல்லி
  மகத்தான காதுவைத்த நிதிதானென்று
சீரப்பா மைந்தன்றன் கண்ணிற்கண்டு
  சிக்கிரத்தி லெடுத்துவந்து மனையில்வைத்தான்
கூரப்பா விவன்றனுங் குபேரனுனன்
  கூர்மையுள்ள ராஜாக்க ளுறவுமாச்சே.

இ-ள். பாகபாகமேற்கூறிய இன்னேனுக்கு வயதுபத்து நடக்கும்போது மைந்தன்றன்மண்ணைக் கெல்லிப்பார்க்கும் போது காது வைத்துப் பற்றவைத்த நிதியை கண்ணிற்கண்டு அதை சிக்கிரமாகத்தானே யெடுத்து தன்மனையில் சேர்த்துக் கொண்டு பின்னர் இவன் குபேரனுகி விருப்பன், அப்போது இராஜாக்களெல்லாம் உறவாவார்கள் எ-று. 72

ஆச்சடா விவனுக்குத் தாரமைந்து
  அன்பான மைந்தனுக்கும் விவாகமாச்சு
பேச்சடா விவன்குடிதான் பெருக்கலாச்சு
  பிரபலமாய் புதுமனைகள் எக்கியசாலை
வாச்சடா லாயத்திற் குதிரையானை
  மகிழுமன்னர் கொடிதானுங் கட்டினன்பார்
ஆச்சடா லட்சுமியவள் குடியிருந்தாள்
  ஆண்டவன் போலிவனைக்கை யெடுப்பார்பாரே.

இ-ள். ஆகினும் இவனுக்குத்தாரமானது ஐந்துண்டாம். ஐந்தும் விவாகமானதாகும், இவன் குடிப்பெருகும் அன்றியும் பிரபலமாகத்தானே புதுமனையும்யெக்கியசாலையும் லாயத்தில்குதிரையானையும் விஸ்தாரமாக விளங்க இராஜாக்களுடைய கொடியும் தன் மனையில் கட்டி வாழும்படியாக இலட்சுமியானவள் அவன்மனையிற் குடியிருப்பாள், யாவருமிவனை கடவுளெனக் கையெடுப்பார்

எடுத்திடவே யதிகார மனேகஞ்செய்வான்
  உண்ணுமித மில்லாத பூமிகொள்வான்
தொடுத்திடவே யேகசக்கிர வர்த்தியாவான்
  தொல்லுலகிற் குபேரனைப்போல் வாழ்வான்பாரு
அடித்திடும்பேர் யாவரையும் பேணுவான்பார்
  ஆந்திரிக சிவபூசை செய்வான்பார்
கொடுத்திடவே தானமது பதினெட்டுந்தான்
  கொடுத்திடுமோர் தயவுடைய பெருமைதானே.

இ-ள். மேற்கூறிய வண்ணம் கையெடுக்கினும் இவன் அதிகாரம் அனேகமாகச் செய்குவன், மிதமில்லாதப் பூமிகளை வாங்குவன் யோகச் சக்கிரவர்த்தியாகுவன், உலகின்கண் குபேரனைப்போல் செல்வமுற்று வாழ்குவன், இவன்றனை யடுத்தோர்களை யாதரிப்பன், ஆந்தரீகமாகச் சிவபூசை புரிவன், முப்பத்திரண்டு தருமமும் வழுவாமல் செய்யும் பெருமையுள்ளவனாகும் எ-று 74

பெருமையாய் வாழ்வதற்குக் குழவியைந்தாம்
பேரானவிவனுக்குக்கண்டமூன்றாம்
சிறுமையுள்ள மைந்தனுந்தான் வல்லபத்தில்
சீமையெங்கும் புகழ்ந்திடவே வாழ்வான்பாரு
அருமையாய் நடந்திவனு அம்பாள்பாதம்
அறிவரியோகத்தா லறிந்துபோற்றும்
வருமையன்றிப் பிறந்தமைந்தன் குபேரனென்ன
வாழ்குவன்பார் மயேந்திரந்தா னெட்டினாலே.

இ-ள். பெருமையாக வாழ்கினும் இவனுக்கு சந்ததி ஐந்துண்டாகும், அன்றியு மிவனுக்குக் கண்டம்மூன்று சம்பவிக்கும், இன்னோடையமைந்தன் வாலிபத்தில் சீமையெங்கும் புகழவாழ்குவன் அருமையாகத்தானே யிவன் நடந்து அம்பாளுடையபாதத்தை அறிவினால் யோகம்புரிந்துப் போற்றுவன் வருமையானது சற்றுமில்லாதுப் பிறந்தமைந்தன் குபேரனைக்கு வலயமீது வாழ்குவன், மயேந்திரரேகையானது எட்டுண்டாகி யிருக்குமாகின் எ-று. 75

ஆலென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
அவனுடைய பிதாவுந்தா னிறந்தான் பாரு
ஞாலென்ற வவன்வயது முப்பத்தைந்தில்
நலமானமாதாவு மிறப்பாளப்பா
ஏலென்ற வவன்வயது முப்பதுக்குள்
ஏந்துகின்ற குழவிகளைப் பெற்றான்மைந்தன்
மாலென்ற மாயவனால் வந்தபாக்கியம்
மகத்தான யோகமிவை யமைந்ததன்றே

இ-ள். ஆகினும் மேற்கூறியயின்னோனுக்கு வயது இருபத்தைந்தில் தாயாரும் மரணமாகிப் போவாள் வயது முப்பதுக்குள் குழவிகளைப் பெறுகுவன். இவனுக்கு மாயவனுடையக் கிருபையினால் இயம்பும்படியாகிய இவ்வித பாக்கிய முண்டாகினவாம்

## மயேந்திரரேகை ஒன்பதின்பலன்.

அன்றெனவே மயேந்திரந்தா னெட்டுஞ்சொன்னேன்
அருமையினால் வந்ததுபார் மயேந்திரரேகை
நன்றெனவே நவமான மயேந்திரந்தான்
நன்னயமாய்ச் சொல்லுகிறே னடிக்கேளு

குன்றெனவே குவலயத்தின் முனிவருக்கும்
கூடறிய மயேந்திரந்தான் நவமுண்டாகும்
சென்றெனவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
செப்புகிறே னிரேகையிடச் செய்திகேளே

இ-ள். மயேந்திரரேகையானது ஒன்பதுண்டாகின் அதின் பலன் சொல்வேன் கேட்பாயாக; இப்பூமியின்கண் முனிவர்கட்குத்தானே மயேந்திரரேகை யானது ஒன்பதுண்டாகும் ஆகினும் இவனுடைய யோகவாழ்க்கையின் ரேகையினிடச் செய்தியைக் கேளும் எ-று.                                                  77

கேளப்பா விவன்கையிலா றுகிறு
கேவலமாய் மூன்றுபுள்ளி கெட்டியாகும்
வாளப்பா விவன்கைதான் புட்பம்போல
வண்மையாய்ச் சிவந்திருக்குங்கைகளெல்லாம்
நாளப்பா கூர்மைவிழி பாஞ்சாலன்றான்
நலமான யோகீஸ்வ ரன்றான்கேளு
ஆளப்பா விவனுடன்பிறப்போ ரைந்துபேராம்
ஆந்திரிக முள்ளனிவ னருமைகேளே.

இ-ள். இவன் கையில் ஆறுகிறும் கேவலமாகிய மூன்று புள்ளியும் கெட்டியாகவிருக்கும் அதுவுமின்றி இவனுடையக் கையானது புஷ்பம் போலும் வெண்மையாகச் சிவந்திருக்கும். கைகள் முழுதும் கூர்மையுள்ள விழியாகும் பாஞ்சாலனாகுவன் அல்லது யோகீஸ்வரனாகுவன் இவனுடன் பிறந்தோர் ஐந்து பெயராகும் ஆகினும் ஆந்திரீக முள்ளவன் இவனுடைய அருமையைக்கேளும்

கேட்கவே யிவன்பிறந்த கிழமைதானும்
கேவலமாய் வியாழமைந்த விரவின்மைந்தா
ஆட்கவே நாழிகையோ ரிருபத்தைந்தாம்
அன்பானநாளது ரோகணிதானாகும்
நாட்கவே யிவன்பிறந்த மாதங்கேட்கில்
நலமான கன்னியென்ற மாதமாகும்
ஏட்கவே யெம்பிரா னருளினாலே
இவ்வுலகில் வந்தவனென் றியம்புவீரே

இ-ள். கேட்கினும் இவன் பிறந்தவாரம் வியாழமாகும் அன்றிரவில் நாழிகை யிருபத்தைந்தில் உரோகணி நட்சத்திரத்தில் பிறந்தவன்; மாதம் புரட்டாசியாகும் எம்பிரானுடையக் கிருபையினால் இவ்வுலகின்கண்வந்து உதித்தவனாகும் எ-று.                                                  79

இயம்புவீ ரிவன்பிறந்த வைந்தாமாண்டில்
இயம்பான ரிஷிகளுவந் துபதேசித்து
நயம்பெறவே மைந்தனைத்தா னழைத்துச் சென்று
நன்னயமாய் ரகசியங்கள் சொல்வார்சித்தர்

வயம்பெறவே வயதைந்தில் லனேகவாழ்க்கை
வண்மையாய் வந்ததென்றி வழுத்துவாய்நீ
துயம்பெறவே சித்தனடா மைந்தன்றானும்
துப்புரவா யிவன்சித்த ஞவான்பாரே.

இ-ள். அப்படிக்குறித்த இன்னானுக்கு ஐந்தாம் வயதில் இயல்பாகத்தானே ரிஷிகளானவர்வந்து உபதேசித்தும் இவன் றன்னை அழைத்துச் சென்றும் நம்மையாகிய ரகசியங்களைச் சொல்வார்கள். இவன்றனக்குவயது ஐந்திற்றானே வாழ்க்கையாவும் வண்மையாக வந்ததென்றும் சொல்லவேண்டும். அன்றியும் இவன் சித்தனாகித் திரிகுவானெனக் கண்டுரைப்பாய் எ-று. 80

பாரப்பா விவன்பிறந்த நாளுங்கோளும்
பக்குவமாந் திசையோகம் பண்பாய்ச்சொன்னேன்
நாரப்பா விவன்பிறந்த வேழாமாண்டில்
நலமான பிதுருதனக் கேமவித்தை
ஆரப்பாவந்துபதே சிப்பதென்னில்
ஆனந்த போகர்வந்திங் கருள்செய்வார்பார்
ஊரப்பாவிவனைப்போ லரசர்மற்றோர்
உலகுதனி லில்லையில்லை யுண்மைதானே.

இ-ள். உரைக்கினும் இவன் பிறந்த நாளுங்கோளும் திசையும் யோகமும் பண்பாகச் சொன்னேன் இனிகேளும் இவன் பிறந்த ஏழாமாண்டில் நலம் பொருந்திய பிதுர் தனக்கு யேமவித்தையானது வந்து வுபதேசிப்பார். பூமியின் மீது இவனைப்போல் அரசர்களும் மற்றவர்களும் மில்லையாம்; இது உண்மை உண்மையாமறிகுவீர் இதை பார்க்கவேண்டுமானால் போகர் பஞ்சபட்சி சாஸ்திரத்தை வாங்கிப்பார்த்தால் தெரியவரும் எ-று. 81

தரனென்ற விவன்பிறந்த வேழாமாண்டில்
சற்குருதான் வந்திவனை யழைத்துச்சென்று
ஊனென்ற வுடற்கூற்றை யுபதேசித்து
உற்றதொரு ரகசியங்க ளருள்வார்பின்பு
வானென்ற மைந்தனிவன் றன்னைப்போல்வார்
வையகத்தில் லில்லையடா மைந்தாகேளு
தேனென்ற மைந்தனிவன் லோகத்துள்ளே
சித்தர்களில் போகர்பட்சி தெளிவாய்சொல்லும்.

இ-ள். மேற்கூறிய இவன்பிறந்த ஏழாம்வருடத்தில் சற்குருவானவர் வந்து அழைத்துச் சென்று உடற்கூறை இவன்றனக்கு உபதேசித்து அதன் பின்பு மற்றுமுள்ள ரகசியங்கள்யாவும் புகன்றார். இந்தப்பாலனைப்போல் உலகிலொருவருமில்லையென்று மதித்துப்புகழத்தக்க இவன்பூமியின்மீது தேவர்களிலொருவனாகவும் விளங்குவானென்றுந் தெரிந்துரைச் செய்யவேண்டும் அன்றியும் போகர் பஞ்சபட்சியைப் பார்க்கதெளிவாய் கூறும் எ-று.

சொல்லடா மயேந்திரந்தான் தனத்திற்கப்பா
சொல்லுதற்கு லோகத்தி லில்லையில்லை
வல்லடா விவனைப்போற் சதுர்த்தரில்லை
வயதுதான் சொல்வதென்ன கவனியாச்சே
நல்லடாநான் முகன்றான் படைத்தமைந்தன்
நலஞ்சொல்லக் கும்பமுனி நாடிக்காண
அல்லடா விவனுடைய வாழ்க்கையெல்லாம்
அன்பாக நீயறிய வருளினேனே.

இ-ள். தெரிந்துச் சொல்லினும் மயேந்திரரேகை ஒன்பதுண்டாகில் அதற்குப்பலன் சொல்வதற்கு உலகத்திலொருவருமில்லை; இவ்வித ரேகையுள்ள சதுர்த்தருமில்லை வயதானது சொல்லவும் முடியாது அன்றியும் நான்முகன் படைத்த மைந்தன் இவனுடைய நலத்தைச் சொல்லக்கும்பமுனியானவர் நாடிக்காணவும், இவனுடைய வாழ்க்கை யெல்லாம் அன்பாகத்தானே நீயறியும் படியாக அருளினேன் எ-று. 83

## மயேந்திர ரேகைபத்தின் பலன்.

அருள்செய மயேந்திரந்தான் பத்துண்டானால்
ஆச்சரிய மிவன்பிறவி ராஜனாவான்
வருள்செய்த வாறுவரை நாலுபுள்ளி
வகுத்ததொரு மயேந்திரந்தான் றன்பத்தாகும்
குருசெய்த பாக்கியம்போற் பிறந்தான்மைந்தன்
குவலையத்திற் றனசாலி யோகவான்றன்
திருவுளத்தின் செயன்மிகுந்த செல்வனாகும்
செல்வனே கேளிதனைத் தெளிவாய்த்தானே.

இ-ள். அருள் பெருகும்படியான மயேந்திரரேகையானது பத்துண்டாகின் அதின்பலன் சொல்வேன் கேட்பாயாக அவன் அரசனாகுவன் அதில் ஆறுவரையும் நாலுபுள்ளியும் வகுத்திருப்பது மயேந்திரரேகையாகும் அதுவேபத்தாகும் குருவினுடைய பாக்கியம் போல் மைந்தன் பிறந்து பூமியின்மீது தனசாலியாயும் யோகவானுமாக விருந்து திருவுளத்தினுடைய செயலானது மிருந்து செல்வனாகி வாழும் இவனுடையச் செய்கையைச் சொல்வேன் கேளும் எ-று. 84

தானென்ற விவனாறு பேர்கள் கூடத்
தருவாகப் பிறந்தவன்காண் டரணிமீதில்
ஊனென்றவிவன்றனக்குக் கிரகநான்கு
உச்சமடா லக்கினத்திலுறுதியாக
வானென்றகிரகநாலுச்சத்தாலே
வண்மைமிகும் புதன்கிழமை யேகாதசி
நானென்ற மகரமெனு மாதமப்பா
நலமாகப் பிறந்துவந்தா நாதன்றானே.

இ-ள். கேட்பாயாக மேக்கூறிய ரேகையுடையவன் ஆறு பேர்சகோதரர்கள் கூடப்பிறந்தவன் அன்றியும் இவன் தனக்கு கிரகம் நான்கும் உத்தமமாக நிற்க உலகிலுதித்து உறுதியான உச்சத்தாலும் புதன்கிழமை திதி ஏகாதசியில் தைமாதம் ஜெனனமானவன் எ-று. 85

தானமெனு மிவன்யோகஞ் சொல்லொணாது
தாட்டிகனும் ராசனிடப் பிறவியாகும்
ஏனமெனுமிவனாலே யனேகபாக்கியம்
ஏந்திழையாள் பெற்றமைந்த னோர்மையாகும்
வானமெனு மிவனுக்குத் தாரம்ரெண்டு
வகுத்துரைப்பேன் மைந்தர்களோ ராறதாகும்
பானமெனு மிவன்யோகங் கேசரியோகந்தான்
பண்பாக மேன்மேலாய் நடக்குந்தானே.

இ-ள். தானெனுமேற்கூறிய இவனுடைய யோகத்தைச் சொல்ல முடியாதேதெனனில் இவன் தாட்டீகனுகவும் இராஜனுடையப் பிள்ளையாகத்தோற்றுவன் பந்துக்களோடு அனேகபாக்கியமானதும் தோன்றும். இவனையீன்ற மாதாவினிற்கு யேற்கையுடையவனாகும் இவன் தனக்குத் தாரம் இரண்டாகும் மைந்தர்கள் ஆறுபெயராகும் இவன்றனக்குக் கேசரியோகமுண்டாகும் அதினால் பண்புபொருந்தி மென்மேலாக நடக்கும் எ-று. 86

நடக்குமடா விவன்வய தெண்பத்தெட்டு
நகரமெல்லா மதிகார மிராச்சியங்கள்
கொடுக்குமடா வுமையவளும் பாக்கியத்தைக்
கொற்றவனு மிலட்சுமியுங் குடியிருப்பார்
அடக்குமடா வுத்திரத்திற் பிறந்தமைந்தன்
அன்பான திசைகார னாகும்பாரு
இடுக்கடைக ளொருநாளும் வருவதில்லை
இயல்பான மைந்தனுக்கு யியம்பிட்டேனே.

இ-ள். நடக்கினும் இவனுக்கு வயது எண்பத்தெட்டாகும்; அன்றியும் நகரத்திற்கும் இராஜியத்திற்கும் அதிகார முடையவனாகுவன் உமையவளருளாலும் பாக்கியங் கிடைக்கும் இலட்சுமியானவள் இவன் மனையில்குடியாகயிருப்பாள். உத்திரநட்சத்திரத்தில் பிறந்தோனாகும் திசைக்காரனாகுவன் இடுக்கமானது ஒருக்காலும் இவனை நாடாதுயென வறிகவும் எ-று. 87

## சாத்மீகரேயின் பலன்.

இயம்பிட்டேன் சாத்மீக ரேகைமைந்தா
இயல்பாக விவன்கையி லிருக்குமாகில்
நயம்பிட்டேனிவன்பிறந்த மனைதானென்று
நலமான வடவாசற் றலாத்தின்மேலே

துயம்பிட்டே னினத்தார்க ளொருவரில்லை
துப்புரவாய்ப் பிதாவுந்தான் னில்லையப்போ
அயம்பிட்டேன் றம்மாமன் மனையிலேதான்
அன்னவர் தானிருந்தவனு முதவியாச்சே.

இ-ள். யாதாமொருவருக்கு கையில்ரேகையானதுப் பார்க்கும்போது சாத்மீக ரேகையானது அவன் கையிலிருக்குமாகின் அவன் பிறந்தமனையொன்றுகும் அதற்கு வடக்குவாசல் மனை மேற்குமூலையாகும் அவ்விடத்தில் இனத்தார்கள் யாருமில்லை தன்னுடைய தகப்பனுமறியவில்லை அம்மானுடைய மனையிலிருந்தவர்கள் அப்போது உதவியாயிருக்கலாம் எ-று. 88

## சாத்மீகரேகை ஐந்தின்பலன்.

ஆச்சப்பா சாத்மீக யைந்தேயானல்
அப்பனேயிவனுடைய வருமைகேளு
வாச்சப்பா வசுபதியிற் பிறந்தமைந்தன்
வண்மையுள்ள கன்னியென்ற மாசமாகும்
கோச்சப்பா கோசரத்தில் வியாழன்புதனும்
கொற்றவர்க ளிருந்தார்கள் கோட்களுச்சம்
வேச்சப்பா வெய்தவன்றன் முதற்சாமத்திற்
வேணபடிசிவனையிவன் வரங்கேட்பாரே.

இ-ள். சாத்மீக ரேகையானது ஐந்துண்டாகின் அதின்பலன் சொல்வேன் கேட்பாயாக அவன் வருமைப்படுவன் அசுவதி நடசத்திரத்திற் பிறந்தவன் புரட்டாசிமாதம் கோசரத்தில் வியாழனும் புதனுமிருக்க கோட்கள் உச்சமாக நிற்க சூரியயோதயம் முதற்சாமத்தில் சிவனுடைய வரத்தினல் வந்துப் பிறந்தவனுகும் எனச் சொல்குவாய் எ-று. 89

கேட்டிடவே யிவன்பிறந்த ரெண்டாமாண்டில்
கேவலமாய் பிதாவுக்கு யோகந்தானும்
நாட்டிடவே நகரமெங்கு மதிகாரந்தான்
நன்மையுள்ள திசையோகம் வந்ததப்பா
காட்டிடவே காலகண்ட மைந்தனுக்கு
கருணையால் வரவில்லை கதிக்கும்யோகம்
வாட்டிடவே திசையோகங் குழவியாலே
வந்ததடா சிவனருளால் வண்மையாமே.

இ-ள். மேற்கூறிய அப்பாலன் பிறந்த இரண்டாம் வருடத்தில் தகப்பனுக்கு யோகமானதுப் பெருகி நகரமெங்கும் அதிகாரம் செலுத்தும்படியாக நன்மையுள்ள திசையோகமும் மைந்தனல் உண்டாகினவாமென்று கண்டுரைச் செய்வாய் எ-று. 90

வண்மையா லிவன்வயதோ ரெழுபத்தைந்து
வகுத்திட்டான் றாரமொன்று வண்மையாக
உண்மையா லிவன்வயது பதினேழாண்டில்
உத்தமர்க்கு விவாகமது முடியுமன்றே
தண்மையா மிவனுக்குக் குழவியைந்தாம்
தகைமைசொல்ல முடியாது தாட்டிகற்கு
நன்மைபெற்று வாழ்ந்திருப்ப னுலகத்துள்ளே
நாகரிகமுள்ளவன்று னளினனாமே.

இ-ள். மேற்கூறியோனுக்கு வயது எழுபைத்தைந்தாகும், தாரம் ஒன்றாகும், இவன் தனக்கு வயது பதினேழில் விவாகமானது முடியும், சந்ததி ஐந்துண்டாகும், அதில் ஆண்மூன்று பெண் இரண்டாகும், தகமையோடு தாட்டீகமாகவும் நன்மையும் பெற்று வாழ்குவன், உலகோர் மெச்ச நாகரீகமுடையவனாகும்.

நளினமென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
நலமுள்ள வாண்பிள்ளை பிறக்கும்பாரு
தெளினமென்ற விவன்வயது நாற்பத்தெட்டில்
செல்வனுக்கு குழவியைந்து திரமாயுண்டு
வளினமுள்ள வாண்மூன்று பெண்ணிரண்டு
வண்மையாய்ப் பிறப்பார்கண் மைந்தர்தானும்
திண்மைசெய்யவொட்டாது சாத்மகந்தான்
செப்பினேன் கேசரியின் றிரமைதானே.

இ-ள் மேற்கூறிய இன்னோனுக்குவயது இருபத்தைந்தில் நன்மையுள்ள ஆண்பிள்ளையானது பிறக்கும், இவன் வயது நாற்பத்தெட்டில் செல்வமுடைய சேய்கள் ஐந்துண்டாகும், அதில் ஆண் மூன்று பெண் இரண்டாகும்; அப்படிப்பிறந்த பாலர்கள் வன்மையுடையவராக யிருந்து வாழ்வர், திண்மையானது செய்யவொட்டாததாகிய கேசரியின் திறமையால் சாத்மீகரேகையை அதனுடன் சொன்னேன் எ-று. 92

தானென்றவிவன்பிறந்த வாறுமாண்டில்
தன்னுடைய தாய்மாம னிறப்பான்பாரு
ஊனென்ற விவன்வயதோ ரிருபத்தைந்தில்
உற்றதொரு தாய்தந்தை யிறந்தார்பாரு
வானென்ற மாசமொன்றிற் றயுந்தந்தை
வண்மையாம் முன்பின்னா யிறந்தார்பாரு
கானென்ற விவன்வயது பதினாறண்டில்
கண்டமட்டுஞ் சொல்லுகிறேன் கருணை கூர்ந்தே.

இ-ள். நாளானதுவாகி விவன்பிறந்த ஆறும் வருடத்தில் தன்னுடையத்தாய் மாமனும் மரணமாகுவான்; இவன்றனக்கு வயது இருபத்தைந்தில் தாயாரும் தந்தையும் மரணமடைகுவர்;

அதுயெவ்விதமெனில் ஒரு மாதத்தில் முன்னும் பின்னுக இறப்பார்கள்; இவன் வயது பதினுறில் நடப்பதைக் கண்டமட்டுஞ் சொல்லிக்கொண்டு வருகிறேன் கருணையானது கூர்ந்தும் எ-று

கூர்ந்திடவே யிவனுக்குக் கண்டமப்பா
குவலயத்தில் வயதுபதி னுறின்மைந்தா
கார்ந்திடவே யிவன்ருனுங் கிணற்றினேற்றத்
தலைமரத்தி லேறியிவன் விழுந்தான்பாரு
ஆர்ந்திடவே யிவன்வயதோர் முப்பத்தைந்தில்
அன்பான வியாதியினுல் மெலிந்தான் பாரு
சார்ந்திடவே யிவன்வயதோ ரெழுபத்தைந்து
கண்டதுபார் சிவனருளாற் கருணைகூரே.

இ-ள். கூர்ந்திடும்படியாகக் கேட்பாயாக; இப்பாலகனுக்குப் பூமியின்மீது கண்டம் வயது பதினுறில் வந்தணுகும்; இவன் கிணற்றின் யேற்றத்தின்மீதிலேறி விழுவான்; வயது முப்பத்தைந்தில் வியாதியினுல் மெலிவான், மெலியினும் இவனுக்கு வயது எழுபத்தைந்தாகும், சிவனருளால் கூறவும் எ-று 94

கூறப்பா சாத்மீக ரேகையாகும்
குறிப்பாகச் சொல்லிவிட்டேன் கூர்மையாக
ஆரப்பா வென்னைப்போ லோகத்துள்ளே
அன்பான மக்களுக்கிங் குதவியென்ருல்
காரப்பா வருணகிரி யுதவியாலே
காடாட்சித்தேன் மக்களைநான் காக்கவேண்டி
சேரப்பா சின்மயத்தி னருளினுலே
செப்புகிறேன் கேசரியின் றிறத்தைக்கேளே.

இ-ள். கூறும்படி விபரமாக சாத்மீகரேகையின் யோகமனைத்தும் குறிப்பாகச் சொல்லிவிட்டேன், என்னைப்போல் உலகமீது யார் உதவியாவார்; அருணகிரிநாதரருளினுல் கடாட்சித்தேன், மக்களைக்காக்கும் படியாக வெண்ணி சின்மயத்தினருளினுலும் இன்னமும் கேசரியின் றிறத்தைச் சொல்வேன்கேளும் எ-று. 95

## கிரீடி இரேகையின் பலன்.

கேட்கவே கிரீடியிட ரேகைமைந்தா
கேவலமா யிவன்கையி லிருக்குமாகில்
நாட்கவே நன்மைபெற்ற மைந்தனுக்கு
நலம்பெற்ற யோகவா ழுடிக்கேளு
ஆட்கவே யாறுவரை யிரண்டுபுள்ளி
அப்பனே கைநடுவி லிருக்குமாகில்
ஏற்கவே ரிவன்யிறந்த யோகவாழ்க்கை
என்னசொல்வேன் மகத்துவத்தை யியம்பக்கேளே.

இ-ள் யாதாமொருவர் கையைப் பார்க்கும்போது கிரீடிரேகையானது யிருக்குமாகின் அப்பாலனுக்கு நலமாகிய யோகமானதுநாடும், அதாவது ஆறுவரையும் இரண்டுபுள்ளியும் நடுவாகயிருக்கும் இவன் பிறந்த யோக வாழ்க்கையை யென்னென்றுச் சொல்வேன் எ-று

96

கேளடா வினத்தார்கண் மெத்தவுண்டு
கேவலமாய்த் தாய்தந்தை மிகவேபோற்று
ஆளடா விவன்பிறந்த மாசந்தன்னில்
அன்பான மனையிலே சோபனங்கள்
வாளடா விருக்குமந்த வேளைதன்னில்
வரிசையாய்ப் பெற்றமைந்தன் வண்மைகேளு
நாளடா விவன்பிறந்த நாளுங்கோளும்
நன்றாகச் சொல்லுகிறே னயந்துக்கேளே.

இ-ள். மேற்கூறிய ரேகையுடையோனுக்கு இனத்தார்கள் மெத்தவுண்டாம், தாய்தந்தையர் மிகவும் போற்றுவர்; இவன் பிறந்த மாதத்தில் அம்மனையில் சோபனங்கள் நடக்கும், அப்படி நடக்குங்காலில் வரிசையாகப் பெற்று மைந்தனுடைய வண்மை யாதெனில் இவன் பிறந்த நாளுங்கூடியதை சொல்லுகிறேன் கேளும். எ-று.

97

கேட்கவே யிவன்பிறந்த நாடான்மைந்தா
கேவலமா யனுமதியாற் பிறந்தமைந்தன்
ஆட்கவே வாரமது வெள்ளியாகும்
அன்பாகப் பெற்றமைந்த னருமைகேளு
நாட்கவே மாசமது மகரமாகும்
நன்மையினாற் செவ்வாய்கானுச்சமானான்
ஏட்கவே யிவனுடனே பிறந்தமைந்தர்
எண்ணவொரு பத்துபேரியம்பினேனே.

இ-ள். கேட்பாயாக; இவன்பிறந்த நட்சத்திரம் அனுஷமாகும், வாரம் வெள்ளி, மாதம் தையாகும்; இவன் ஜனனகாலத்தில் செவ்வாய் உச்சனாகவிருந்தான்; இவனுடன் பிறந்தோர்கள் பத்து பெயராகும் எ-று.

98

இயம்பிடவே யிவன்றனும் பத்தாம்பேரும்
இயல்பான வாணுறு பெண்களைன்கு
துயம்பிடவே இவனுக்குக் கண்டமெட்டு
துப்பரவாய்ச் சொல்லுகிறேன் றொடர்ந்துகேளு
வயம்பிடவே யிவனுக்குத்தாரநாலு
வாய்க்குமடா பெண்ணாலே திரவியங்கள்
நயம்பிடவே யிவனுக்கே யன்னியத்தில்
நயமாகப் பொருளும்வந் ததவும்பாரே.

இ-ள். மேற்கண்ட மைந்தர்களில் பத்தாவது பெயருடைய வன் இவனாகும்; அதில் ஆண் ஆறு பெண் நான்கு அவனுக்குக் கெண்டமானது யெட்டுஞ் சொல்லுகிறேன் கேளும் அன்றியும் இவனுக்குத் தாரமானது நாலாகும் அவர்களினால் திரவியங் கிடைக்கும்; அத்துடன் அன்னியரிடத்திருந்தும் பொருளானது வந்து இவனுக்குதவும் எ-று. 99

பார்க்கவே யிவன்வயதோ ரைந்திலேதான்
பாலகர்க்கு விவாகமது பலிக்கும்பாரு
ஏற்கவே யிவன்வயது பதினெட்டிற்றான்
இயல்பான விவாகமது முடியும்பாரு
தார்க்கவே தலைவனுக்கு முப்பத்தாறில்
தகமையில்லா விவாகமதொன் றாகும்பாரு
கார்க்கவே யிவனுக்கு மைந்தர் தாமும்
கருணையாற் பதினாறு பிள்ளையாமே.

இ-ள். மேற்கூறிய இவன் தனக்கு வயது ஐந்தில் விவாகமானது நடக்கும்; பதினெட்டாம் வயதில் ஓர் விவாகமுடியும், அன்றியும் தலைவனுக்கு முப்பத்தாராம் வயதில் விவாகமொன்றாகும்; மைந்தர்கள் பதினாறு பெயருண்டாம், எ-று. 100

ஆமப்பா விவன்றார மிரண்டுக்குந்தான்
அப்பனே சாபத்தாற் பிள்ளையில்லை
ஓமப்பா மூன்றாவதாரந் தானும்
ஓகோகோ பிள்ளைகளைப் பெற்றாள்பாரு
வாமப்பா பத்துபே ராணதாகும்
வண்மையுள்ள பெண்குழவி யைந்ததாகும்
ஏமப்பா மக்களுக்கு வேதனையில்லாமல்
ஏற்றமுடன் மக்களுமே வாழ்வார்பாரே.

இ-ள். மேற்கூறிய யிவனுடையதாரம் இரண்டிற்கும் சாபத்தினால் சந்ததியில்லாமற்போகும்; மூன்றாவது தாரத்திற்கு மேற்கண்ட பிள்ளைகளுண்டாம் அதில் பத்துபேர் ஆண்பிள்ளைகளும் பெண்பால் ஐந்துமாகும்; இவர்களுக்கு யாதொரு வேதனையில்லாமல் வாழ்குவார் எ-று. 101

பாரடா விவனுக்கு வயதோர்மைந்தா
பக்குவமாய் தொண்ணூற்றைந் தாண்டதாகும்
காரடா விவன்வயது நாற்பதுக்குள்
கனமான குடியுந்தான் பெருகும்பாரு
நேரடா விவனுக்கு பேரன்தானும்
நிகரில்லை யிவன்யோக நிகழ்த்தப்போமோ
ஆரடா வீடுசொல்வா ரறிவிற்றானும்
ஆச்சரியம் பெற்றமக்க ளதிகாரமாமே.

இ-ள். பார்க்க மேற்கூறிய இவனுக்கு வயது தொண்ணூற்றைந்தாகும், அதில் நாற்பதுக்குள் கனத்தகுடியானது பெருகும். பேறன் பிறப்பான், யோகவானுகை விருப்பன், பூமியின்மீது அறிவுள்ளவனுய் யாவரும் புகழும்படியாக ஆச்சரியம் பெற்றமக்களாகி அதிகாரமும் பெற்றுவாழ்வார் எ-று. 102

ஆமெனவே இவன்றானு மனைகபூமி
அப்பனே விலைகொள்வா னன்பன்றானும்
வாமெனவே வயதிருபத் தாறுமுதலாக
வாகான வயதெண்பத் தைந்துமட்டும்
காமெனவே யுலகுதனி லதிகாரந்தான்
காட்சியா யாளுவன்றான் கருணையாக
பாமெனவே சிவன்பூசை யிவன்றான்மைந்தா
பக்குவமாய்ச் செய்துவந்தான் பண்புதானே.

இ-ள். அப்படிக்கு வாழ்ந்திடும் இவன் அநேக பூமிகளை விலைக்குக் கொள்வான்; அன்றியும் வயது இருபத்தாறு முதலாக எண்பத்தைந்து வயதுமட்டும் உலகத்தின்மீது அதிகாரஞ் செலுத்திக் கொண்டு வருவன்; சிவன்பூசை முதலானதும் சிறாகப் புரிகுவன் பக்திமானுகும், எ-று. 103

பண்பானு யிருப்பனிவனுக்குக் கண்டம்
பகுத்துரைப்பே னிவன்வயது பதினேழ்தன்னில்
நன்பனுய்ச் சலந்தனிலே கண்டமொன்று
நலமாக வந்ததென்று நாடிச்சொல்லு
அன்பனு னிவன்வயது பதின்மூன்றுக்குள்
அப்பனே நாற்காலி கண்டமொன்று
வன்பனு யிருந்தவந்தா னிருபத்தேழில்
வரிசையாய் வியாதிகண்டம் வந்ததென்றே.

இ-ள். மேற்கூறிய இன்னேனுக்கு கண்டம் சொல்வேன் கேட்பாயாக: பதினேழாம் வயதில் சலகண்டம் ஒன்றுவந்தனுகும் வயது பதின்மூன்றில் நாற்கால் ஜீவனுல் கண்டம் சம்பவிக்கும்; அதுவுமன்றி இருபத்தேழாம் வயதில் வரிசையாக வியாதிகண்டம் வந்து சம்பவிக்கும் எ-று. 104

வந்துதா னிவன்வயதோ ரேழிலேதான்
வாகான மாரிகண்ட மெலிந்தான் மைந்தன்
இந்துதானுற் பத்தெட் டாண்டிலேதான்
இயல்பான பிராணகண்டம் வருகும்பாரு
எந்துதா னிவன்வயதோ ரெழுபத்தைந்தில்
என்னசொல்வேன் சன்னியா லிறக்கலாச்சு
சந்துதான் சரவணையில் விளங்குகின்ற
சண்முகனல் வந்தபலன் றாக்கிப்பாரே.

இ-ள், மேற்கண்டதுமன்றி இவன்றனக்கு வயதுயேழில்மாரி கெண்டத்தினல் மெலிந்திருப்பன்; நாற்பத்தெட்டாம் வயதில் பிராணபய மான கண்டம் வரும் எழுபத்தைந்தாம் வயதில் சன்னியானது கண்டு அதினல் மரணமாகுவன்; இவைகளெல்லாம் சண்முகக்கடவுளின் அருளினல்வந்த பலனெனச் சொல்வாய்

பார்க்கவே கிரீடியிட பிரபலன்கள்
பண்பான மைந்தனுக்குப் பதவிரொம்ப
ஏர்க்கவே யிவனமைப்பு காலயோகம்
என்னசொல்வேன் மைந்தனிட வியல்புமைந்தா
கார்க்கவே தேவரிலே யொருவனப்பா
காரணமாய்ப் பதவியுடன் வந்தான்மைந்தன்
தீர்க்கமாய்க்கிரீடியிட மைந்தனுக்குத்
திசைப்பலன்க ளுள்ளதெல்லாஞ் செப்பினேனே.

இ-ள். மேற்கூறியோனுக்குடைய கீரிடிகையின் பலன் யாதெனில் பதவியானது கிடைக்கும், இவனுடைய அமைப்புகால யோகம் சொல்லமுடியாது தேவர்களிலொருவனுக விருப்பன். ஏதோ காரணர்த்தமாக பூமியில்வந்து பிறந்தவனுகும்; தீர்க்கமுடைய கிரீடிரேகையுடையவர்களுக்குதிசைபலன் முதலாயுள்ளதெல்லாஞ் சொன்னேன். எ-று. 106

## விஷக்கம்பரேகையின் பலன்.

செப்புகிறேன் விஷக்கம்பரேகை மார்க்கம்
சேதிசொல்ல முடியாது திறமாய்க்கேளு
ஒப்புகிறே னிவன்யோகங் காலகண்டம்
ஓகோகோ மைந்தர்களே யுவமைகேளீர்
அப்புகிறேன் க்ஷீரமென்ற சமுத்திரத்தில்
ஆனந்த வாலிலேமேற் பள்ளிகொண்டான்
செப்புகிறேன் ரிஷிகளே யுங்கட்காக
மேதினியி லுள்ளவர்கட் காதியாமே.

இ-ள். விஷக்கம்பரேகையின் மார்க்கம் சொல்லமுடியாதாயினும் சொல்கிறேன் றிறமாய்க் கேட்பாயாக; இவ்விதரேகையுடையவனுடைய யோகமும் காலத்திற்றோன்றிய கண்டமும் இவைகளின் உண்மைகளைக்கேளீர்; திருப்பாற் கடலினிடமாக ஆலிலையின்மீது பள்ளிகொண்ட ஓமாயனே ஓ ரிஷிகளே உங்கட்காகவும் பூமியின்மீதுள்ளவர் கட்காதியாகவும் சொல்லுகிறேன்.

ஆதியடா விஷக்கம்பம் இரண்டிரண்டு
அணிவிரலிற் சிறுவிரலி லேறிநிற்கும்
சோதியடா விருசுழியு நாலுபுள்ளி
சொல்லுதற்கு மூவரைமே லேறிக்காணும்

வாதியடாவிவன்பிறவி யோகசாலி
வளமைபெற்ற மைந்தனிவன் வரிசைகேளு
நீதியடா வேலமுறைத் தகமைமைந்தன்
நீனிலத்தி லிவன்போல்வா ரில்லைதானே.

இ-ள். மேற்கூறிய ஆதியாகியவிஷக்கம்ப ரேகையானது இரண்டு இரண்டாக அணிவிரல்முதல் சிறுவிரல் முட்டியேறி நிற்கும். அதில் இரண்டுசுழியும் நாலுபுள்ளியும் உற்று மூன்று வரைக்குமேல் யேறிகாணும். அவ்விதமுடையோன் பிறவி யோக சாலி வளமைப்பேரன்றவன் நீதியுடையவன் இந்த நீநிலத்தில் இவன்போலில்லையெனப் புகல்வாய் எ-று. 108

இல்லையென்று சொல்வதென்ன மைந்தாகேளு
இகத்திலே வெறுமையில்லை யிளையாள்யோகம்
வல்லமையாய்ப் பிறந்தமைந்தன் சதயதன்னில்
மகத்தான வேழாநாள் கெர்ப்பக்காரன்
கல்லையென்ற வில்லறந்தான் பிறந்தவீடு
காட்சிபெறும் புதுமனையிற் கருணைகூர்ந்தான்
ஒல்லையென்ற வைப்பசியிற் செவ்வாய்தன்னில்
உதயம்போற் பிறந்துவந்தா னுவமைகேளே.

இ-ள். இல்லையென்றுச் சொன்ன முறைப்படியே கேட்பாயாக இவன் இகத்தின்மீது வொருக்காலும் இளைக்காதயோக முடையவனுவன். வல்லமையாக இவன்பிறந்த நட்சத்திரம் சதையமாகும்; இவன் தாயார் குளித்த ஏழாம் நாள் கருத்தரித்தவன் இவன் பிறந்தவீடு புதிதாகக் கட்டினதாகும். ஜெனனமாதம் ஐப்பசி கிழமை செவ்வாய்; செவ்வாயுதயத்தில் பிறந்தவன் எ-று.

கேளப்பா பிறந்ததிவன் வடவாசல்வீடு
கேவலமாய்ப் பிறக்கையிலே பிதாவுங்காணன்
நாளப்பா நாழிகைதான் முக்காலுக்குள்
நன்னயமாய்ப் பிதாவுமவன் மனையில்வந்தான்
தாளப்பா தனசாலி மூன்றும்பேறு
தனக்குமுன்னே பிறந்ததுதான் பெண்ணேயாகும்
ஆளப்பா விவன்முன்னோர் வைத்தபண்டம்
அத்தனையு மெடுத்திடவே வந்தான்பாரே.

இ-ள். மேற்சொன்ன இவன்பிறந்தது வடக்குபார்த்தவாசலுடைய வீடு இவன் ஜெனனகாலத்தில் தகப்பன் அவ்வூரி லிருக்கமாட்டான்; பின்பு மைந்தன்பிறந்த முக்கால்நாழிகைக்குள் தகப்பனும் அம்மனைக்குள் வந்து காணப்படுகுவன். இவன்மூன்றுவது புத்திரனுகும் இவனுக்கு முன் பிறந்தோர் பெண்பாலாகும்; அன்றியும் மிவன்முன்னோர்கள் வைத்தசொத்துகள் ஆதியந்தமும் கண்டு யெடுத்திட வந்தவனுகும் எ-று. 110

பாரடா விவனுக்குக் கிரகமூன்று
பண்பான லக்கினத்தி லுச்சமானூர்
சீரடா திசையோகம் பார்த்துமைந்தா
சிற்பரத்திற் கருணைவைத்தா ரீஸ்பரர்தான்
கூரடா மண்மனைத்தான் கொள்ளமைந்தன்
குவலயத்தில் பிறந்திடுநற் குணவானப்பா
ஆரடா விவனைப்போல் யோகவான்றான்
ஆச்சரியம் பெற்றமைந்த னழகனுமே.

இ-ள். மேற்கூறிய இவன் ஜெனனகாலத்தில் கிரகம்மூன்று இலக்கணத்தில் உச்சம் பெற்றிருக்க பிறந்தவன். இவனுடைய திசையோக முதலானதும் பார்த்து பரமசிவன் கருணைவந்தவார் இவனரண்மனை முதலானதும்கொள்வான். நற்குணமுடையவனு கும்; சொல்வதற்கு இவனைப்போல் யார்யோக முள்ளவர்; பூமி யின்மீது ஆச்சரியம் பெற்றமைந்தனும் அழகுடையவன் எ-று.

ஆமென்ற விவன்வயதோ ரெழுபத்தெட்டாம
அன்பான வுடன்பிறவி பத்துபேர்கள்
காமென்ற கருவமைப்பின் மூன்றுபேர்கள்
கைவிட்டுத் தாண்டுவார் கனிவதாக
வாமென்ற சிவபூசை வாமபூசை
வரிசையாய் நடத்துவான் வகையைக்கேளு
தாமென்ற தாய்தந்தை யிருவர்தங்கள்
சரண கமலங்களைத்தான் போற்றுவானே.

இ-ள். மேற்கூறிய அழகுடையபாலனுகிய இவன்றனக்கு வயது எழுபத்தெட்டாகும். இவனுடன் பிறந்தோர் பத்துப் பெயரா கும். அதில் கருவமைப்பில் மூன்று பேர்கள் கைவிட்டுத் தாண் டிப்போவார்கள்; இவன் சிவ பூசை வாமபூசை இவை முதலான தும் வரிசையாக நடத்திக்கொண்டு வருவான். தாய்தந்தையினு டைய சரணரகமலங்களை சதாகாலமும் போற்றுதல் செய்வான்.

போற்றுவன்கா ணிவன்வயது பத்துக்குள்ளே
பொக்கிஷந்தான் கொடுத்திடுவ னிவன்றானப்பா
சாற்றுவன்கா ணிவன்வயது பனிரண்டுக்குள்
தரணிதனிற் பூமிகொள்ள சோகமுண்டாம்
ஏற்றுவன்கா ணிவன்வயதோ ரேழுக்குள்ளே
இல்லறத்தி லுள்ளபொரு ளெல்லாம்போகும்
மாற்றுவன்கா ணிவன்வயதோ ரைந்துக்குள்ளே
வண்மையுள்ள மாரியது வருகும்பாரே.

இ-ள். போற்றிய இவன்றனக்கு வயது பத்துக்குள் பொக்கிஷங் கொடுப்பன்; வயது பனிரெண்டுக்குள் பூமிவாங்கச் சோகமுண் டாகும், வயது ஏழிற்குள் இல்லறத்திலுள்ளப் பொருள்யாவையும் போகும், வயது ஐந்திற் குள்ளே அம்மையானதுகாணும் எ-று,

பார்க்கவே யிவன்வயது பனிரண்டுக்குள்
பண்பான வுடற்பிறவி மூன்றுபேராம்
ஏற்கவே யிவன்வயதோ ரிருபத்தெட்டில்
ஏற்றமுள்ள விவன்பிதா விறக்கும்பாரு
கார்க்கவே யிவன்வயது முப்பத்தைந்தில்
காரிழையு மாதாவு மிறப்பார்பாரு
ஆர்க்கவே யிவன்வயது பதினாறுக்குள்
அன்னவனும் விவாகமது வாகும்பாரே.

இ-ள். இன்னமுங் கேழ்ப்பாயாக; வயது பனிரெண்டுக்குள் இவனுக்கு உடன் பிறவிமூன்றுபெயருண்டாகும்; இவன்வயது இருபத்தெட்டிற்குள் இவன்பிதா மரணமாகுவன். வயது முப்பத்தைந்தில் தாயார்மரணமாவாள். வயது பதினாறுக்குள் இவன்றனக்கு விவாக முடியும் எ-று. 114

ஆவதென்ன விவனுக்குத் தாரம்யோகம்
அப்பனே ரெண்டுண்டா மிவனுக்கப்பா
பாவதென்ன மூன்றா முப்பத்தாறில்
பனிமொழியாள் வியாதிகண்ட முண்டுபாராய்
ஈவதென்ன விவனுக்கு பிரதிஷ்டைதானே
இயல்பாகச் செய்திடவே நீங்கும்பாவம்
காவதென்ன பிரதிஷ்டை செய்யாவிட்டால்
காரிழையா ளிறந்துகளி யாணமாமே.

இ-ள். மேற்கூறிய இவன்றனக்கு தாரயோகம் இரண்டுண்டாம்; அதில் மூன்தாரமானது முப்பத்தாறுவயதில் அவளுக்கு வியாதியினால் கண்டமுண்டாம். அதுநீங்க சிவாலயப்பிரதட்சணஞ்செய்ய அப்பாவம் விலகும். அப்படிச் செய்யாவிட்டால் அவளிறந்து போய்விடுவாள்; இவன்றனக்கு மறுபடியும் விவாகமாகும் எ-று. 115

ஆமடா விவனுக்கே கண்டமாறு
அகலாமல் வந்துவிடு மறிந்துகொள்ளு
வாமடா வாயுதத்தாற் பகையுமுண்டு
வஞ்சனைகள் மெத்தவுண்டு வரிசைகேளு
ஊமடா விவனுக்கோ ரைந்துபிள்ளை
உற்பனமாய் பிறந்திடுவ ருறுதியாக
நாமடா சொல்லுகிறே மிவன்றன்மைந்தா
நலமான தனசாலி யையாயின்றே.

இ-ள். மேற்கூறிய இவனுக்குக் கண்டம் ஆறுண்டாகும்; அதுவோ தவறாமல் வந்தணுகும். அன்றியும் ஆயுதத்தால் பகையுண்டாகும். வஞ்சனையாலும் பலவிதத்துன்ப மணுகும். இவன்றனக்குச் சந்ததி ஐந்துண்டாம்; அவர்கள் உறுதியுடையவராக விருப்பர்; இவனும் தனசாலியாகுவன் எ-று. 116

ஐயமில்லை சொன்னமொழி மைந்தர்க்கப்பா
அருளுதவு மீஸ்பரனுர் சொன்னவாக்கியம்
மெய்யெனவே தானென்ற பேர்க்குமைந்தா
மேதினியி னற்சனனம் விளங்கும்பாரு
பொய்யெனவே மனதினுள் நினைப்பாராகில்
போதமில்லா மறலிகுழி விழுவார்பாரு
வையகத்தின் மக்களுக்காய்ச் சொன்னமார்க்கம்
வாகான கேசரியின் வண்மைகேளே.

இ-ள். மேல் தனசாலியெனச் சொன்னது ஐயமில்லை; மைந்தர்களுக்கு அருள் சொறியும்படியான ஈஸ்பரன் சொன்ன வாக்கியம் இதனை மெய்யென வெண்ணியபேர்க்கு பூமியின்மீது நன்மையாகிய ஜெனனம் வாய்க்கும் நீடி விளங்கும். அப்படிக் கெண்ணுமல் மனதில் பொய்யென நினைப்பராகில் மரலியினுடைய நரகக்குழியில் விழுகுவார்; இவையெல்லாம் வையகத்திலுள்ளமக்களுக்காகச் சொன்ன மார்க்கமாகிய ரேகையின் வண்மையைக் கேளும் எ-று. 117

## சாத்மீக ரேகையின் பலன்.

வண்மையடா சாத்மீக ரேகையினுல்
வரிசையாய் கண்டங்களாறுண்டாகும்
உண்மையடா நீராலே கண்டமொன்று
உற்றதொரு சர்ப்பத்தாற் கண்டமொன்று
தண்மையடா வாயுதத்தாற் கண்டமொன்று
தாட்டியற்கு நாயாலே கண்டமொன்று
திண்மையடா கண்டங்க ளாறுஞ்சென்றுல்
தீமையொன்று மில்லையடா செய்திநன்றே.

இ-ள். வண்மையாகத்தானே சாத்மீகரேகையானது உடையோன்அவன்றனக்கு வரிசையாகத்தானே கண்டம் ஆறுண்டாகும். அதாவது சலத்தினுல் ஒன்றும் சர்ப்பத்தினுல் ஒன்றும் ஆயுதத்தால் ஒன்றும் நாயினுல் ஒன்றும் நேரும். இந்த ஆறுகண்டமும் தவரினுல் அதன் பின்பு தீமையானது வொன்றும் அணுகாமல் நன்மையாகும் எ-று. 118

நன்றெனவே சத்துருக்கள் மருந்துங்கள்ளும்
நன்மையாய்க் கொண்டுவந்து மைந்தாகேளு
சென்றெனவே யிவனைத்தான் கொல்லவேண்டி
செய்திடுவார் மந்திரந்தான் முப்பத்தாறில்
அன்றெனவே யறிந்துநீ நீக்கவேண்டும்
அப்பனே சிவபூசை மறந்திடாதே
நன்றெனவே குமரனைநீ வணங்கிக்கொண்டால்
நலமான போகர்பட்சி நலமாய்ப்பாரே.

இ-ள். மேற்கூறிய வண்ணம் நன்மையாகினும் இவன்றன்னை சத்துருக்கள் கூடிக்கொண்டு மருந்துங் கள்ளுங் கொண்டுவந்து நன்மையாகப் பேசி இவன்றன்னைக் கொல்லும்படியாய் மந்திரங் களுஞ் செய்வார். அதுவெப்போவெனில் இவன்வயதுமுப்பத்தா றிலாம். அதையறிந்து அப்போது அதைநீக்கவேண்டும். அன் றியும் இவன் சிவபூசையை நாளும்மறக்கப்படாது அதுவுமன்றி சண்முகக்கடவுளைத் தொழுதுகொண்டு வருவானாகிலும் போகர் பஞ்சபட்சியைத்தொழுது மேற்கூறிய கண்டம் யாவும்பறந்தோ டும் எ-று. 119

## குடோரிகண்டனி ரேகையின் பலன்

பார்க்கவே குடோரிகண்ட ரேகைமைந்தா
பண்பான நடுவிரலிற் குறுக்கேரெண்டு
தீர்க்கவே யிருகூறு வரைகண்மைந்தா
சிற்பரம்போ லிருக்குமது திரத்தைக்கேளு
ஆர்க்கவே குடோரிகண்டன் வளையமாக
அன்பாக விருக்குமடா வறிவினாலே
சேர்க்கவே யிவன்பிறந்த திசையின்யோகம்
திறமில்லா பாவியடா செப்பக்கேளே.

இ-ள். பார்க்க கரத்தில் குடோரிக் கண்டரேகை யெவ்வித மிருக்கு மெனில் நடுவிரலில் குறுக்கே இரண்டு இருகூராகவரை கள் தோன்றி சிற்பரம் போலிருக்கும். அதின்திறம் என்ன வெனில் குடோரிகண்ட மென்பது வளையம்போ லிருக்கும்; அதையறிந்து அவன் பிறந்த திசையும் யோகமும் திறமையில்லா ததுஞ் சொல்வேன் எ-று. 120

செப்புகிறேன் மைந்தனிவன் பிறக்கும்போது
சேதிசொல்வே னில்லறத்தின் மிகவேபாக்கியம்
அப்புகிறே னிவன்பிறந்த மாண்டுக்குள்ளே
அர்த்தமொன்று மில்லாம லழிந்துபோச்சு
நம்புகிறே னிவன்பிறந்த மூன்றாங்கெர்ப்பம்
நானிலத்தில் வெறுமைபட்டு திரிவான்மைந்தன்
வப்புகிறேன் வறுமையுள்ள மைந்தன்றானே
வகையான புதனின்ற கேரமாமே.

இ-ள். மேற்கூறிய மைந்தன் பிறக்கும்போது இல்லறத்தில் மிக்க பாக்கிய முண்டாயிருக்கும். இவன்பிறந்த வருஷமொன் றுக்குள் பொருளென்பது வொன்றுமில்லாமல் அழிந்துப்போ யிருக்கும். இவன் மூன்றாவது புத்திரனாகும்; பூமியில் வெறுமை பட்டுத் திரிகுவன்; இவ்வித வறுமையோடு பிறந்தமைந்தன் புதனுடைய அமிசமாகும் எ-று. 121

நேரமடா கேழ்க்கையிலே பிறந்தபிள்ளை
நேர்மையுள்ள சனிக்கோளிற் பிறப்பதாகும்
தாரமடா தனக்குத்தான் விவாகமில்லை
தன்மையுள்ள முதற்ஜனனஞ் செய்தபாவம்
ஆரமடா இவன்வெகுவாய் வீடுதோறும்
அன்னமில்லா திரந்துண்டு யலைவான்மேனி
பாரமடா பந்துக்களிற் பகையுண்டாகிப்
பரதவித்துப் பேதையனாய்த் திரிவான்பாரே.

இ-ள். மேற்கண்ட நேரத்தில் பிறந்தபிள்ளைச் சனிக்கோளி லுதித்ததாகும். இவன்றனக்கு விவாகமானதுயில்லை; அதுயாதெனில் இவன் முதற்ஜெனனத்தில் செய்தபாபமாகும்; அன்றியும் இவன் வீடுதோறும் திரிந்து அன்னமில்லாமல் அலைந்து இரந்துண்பான். இன்னமும் பந்துக்கள் யாவரும் பகையுண்டாகி பறதவித்து பேதையனாய் திரிகுவான் எ-று. 122

பார்க்கவே யிவன்வயது நாற்பத்தெட்டு
பண்பான வாயுளில்லை பாவிக்கப்பா
ஏர்க்கவே இல்லறத்தி லைஞ்சுக்குள்ளே
எடுத்திடுவன் றய்தந்தை யினங்களோடு
தார்க்கவே யிவனுக்கோ ரைந்துகண்டம்
தாட்டியா யுண்டெனவே சாற்றலாகும்
வார்க்கவே யிவன் கிளையி லொருவரில்லை
வண்மையின்றிப் பெற்றமைந்தன் வரிசைகூறே.

இ-ள். பார்க்க இவனுக்கு வயது நாற்பத்தெட்டிற்குமேல் ஆயுளானது யிவனுக்கில்லை. இவன்றனக்கு இல்லறத்தில் வயது ஐந்திற்குள்ளே தாய்தந்தையரையும் இனங்களையும் பீடிப்பான். அன்றியும் இவனுக்குக் கண்டம் ஐந்துவிதமாக அணுகும்; இவனுடைய கிளைகளில் ஒருவருமில்லை; இவன்பிறந்த வண்மையை வரிசையாகக் கேளும் கூறுவேன் எ-று. 123

கூறிடவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
குவலயத்திற் சொல்லிவிட்டேன் கூர்மையாக
ஆறிடவே யிவனுடைய வமைப்பினாலே
அடவாகச் சொல்லிவிட்டே னனைவோர்க்காக
பாறிடவே யிவனமைப்பின் வளவேமைந்தா
பறிந்துசொல்லும் ரேகையிடப் பலனென்றுமே
சீறிடவே புவியரச ருறவாவார்கள்
தேவர்களுக் கிந்திரனாய்ச் செப்பலாமே.

இ-ள். கூறும்படியான இவன்யோக வாழ்க்கையாகவும் அறியச்சொன்னேன் விபரமாகவும். அன்றியும் இவனுடைய அமைப்பினால் அறிந்துசொன்னேன்; அனைவோர்க்கும் வேணு

மென்று திறந்திட்டேன். ஆதலால் இவனுடைய அமைப்பு இவ்வளவேயாகும். இதனை ரேகைகளைக்கொண்டு பலாபலன்களை அறிந்துச் சொல்லவேண்டும். அப்படிக்குச் சொல்லப் புவியரசரும் முறவாவர்; தேவர்களுக்கெல்லாம் மேலாய்விளங்கும் தேவேந்திரனைப்போல் சொல்லாம் எ-று. 124

## சக்கரகுலிச ரேகையின்பலன்.

ஆமெனவே சக்கரக் குலிசைமைந்தா
அறியவே சொல்லுகிறே னன்பாய்க்கேளு
மாமெனவே யிவன்கையி லிருக்குமாகில்
மகத்தான குலிசமட்டும் வளரும்பாரு
நாமெனவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நலம்பெற்ற மைந்தனடா ளுடிக்கேளு
காமெனவே யுமையவள்தான் கருணைகூர்ந்து
கடாட்சிப்பா ளிலட்சுமியுங் கருணையாமே.

இ-ள். சக்கரக் குலிசரேகைக் கையிலிருக்குமாகின் அது குலிசமட்டும் வளர்ந்துயிருக்கும். அவ்வாறிருக்க இவன்பிறந்த யோக வாழ்க்கையானது நன்மையுள்ளதாக விளங்கும். இவன் தனக்கு உமையவள் கருணைகூர்ந்து கடாட்சிப்பள்; இலட்சுமியு மருள்புரிகுவள் எ-று. 125

ஆகுமென்ற குலிசமடா விற்பனந்தான்
ஆச்சரியம் விதிகளெல்லாம் படிப்பான்பாரு
வாகுமென்ற வேதமெல்லாம் மறிவானப்ப
வகையாக வில்லறத்தி லிருந்துவாழ்வான்
போகமென்ற வதிபோகஞ் செய்வான்பாரு
போக்கு நீக்குள்ள புத்தி புலமைசெய்வான்
ஆகுமென்ற கலைக்கியானம் மறிவன்மைந்தன்
அன்பான சரஸ்வதிவந் தருள்செய்வாளே.

இ-ள், மேற்கண்ட குலிசம் விற்பனமாகத் தோன்றில் அவன் சகலவித்தையும் படிப்பன். வேதங்கள் யாவும் அறிகுவன். இல்லறத்திற்றனே இருந்து வாழ்குவன். யோகநிஷ்டை முடிப்பன் போக்கு நீக்குள்ள புத்திகள் யாவுமுறைப்பன். புலமை செய்வன் கலைக்கியானம் அறிகுவன்; சரஸ்வதி வந்தருள்புரிகுவள் எ-று.

செய்யவே அனந்தனிவ னழகனப்பா
செப்புகிறேன் மன்மதனுக் கொப்பேயாவான்
வையகத்தில் விவன்பெரிய யோகசாலி
வாகனங்களேறியிவன் றிரிவான்பாரு
மையல்விழி மாதர்களை மயங்கச்செய்வான்
மகாராச ராசர்களை வசமேசெய்வான்
ஐயமில்லா வழகனடா சூட்சுமபுத்தி
ஆச்சரிய முள்ளவனு மறிந்துபோற்றே.

இ-ள். மேற்கூறியபாலன் அழகுடையோன்; மன்மதனுக்கொப்பாகயிருப்பான்; பூமியின்மீது பிரபலமுள்ள யோகசாலியாக விருப்பன் வாகனங்களேறித்திரிகுவன்; மைவிழியுடைய மாதர்களை மயங்கச் செய்வன்; மகராஜராஜாக்களையும் வசமாகச்செய்குவன்; ஐயமில்லாதவன்; சூட்சுமபுத்தியுடையோன் ஆச்சரிய முடையவனுகும். எ-று. 127

போற்றுவதற் கிவனைத்தான் போற்றவேண்டும்
பூமியிலே குலிசமென்ருல் விஷ்ணுவாகும்
சாற்றுவதற் கைங்கரனைச் சாற்றவேண்டும்
தன்மையுள்ள மைந்தனையுஞ் சாற்றவேண்டும்
வாழ்த்துவதற் கிவனுடைய யோகவாழ்க்கை
வையகத்தில் மற்ருருவர்க் குண்டோகண்டாய்
போற்றுவதற் கிவன்யோக வாழ்க்கைதன்னைப்
பேசரிதா முதலரியப் பேசுவோமே.

இ-ள். போற்றுவதற்குமேற்கூறிய இவனையே போற்றவேண்டும். ஏனெனில் குலிசமென்பது விஷ்ணுவாகும். அன்றியும் விநாயகக்கடவுளைப்போல் இவனை யெண்ணவேண்டும். வாழ்த்துதனில் இவனுடைய யோகவாழ்க்கையை வாழ்த்தவேண்டும். வையகத்தில்இவ்விதரேகையிருப்பது அருமையாகும்; போற்றும்படியாக இவனுடைய யோகவாழ்க்கையை முதலாகப் பேசுவோம். எ-று. 128

ஓமென்ற வுட்பொருளை யறிவான்மைந்தன்
உத்தமனுக் கிடதுகண்தான் சாயலாகும்
வாமென்ற கெஜகர்ன கோகர்னவித்தை
வையகத்தில் விநோதவித்தை மிகவுண்டாகும்
ஆமென்ற வாயுமையா ளுதவியுண்டு
அன்பான தேவிவந்தே யனுசரிப்பாள்
காமென்ற கர்னனடா குபேரவாழ்கை
காசினியி லுயிர்களுக்குக் கருணைசெய்வான்

இ-ள். பேசத்தக்கமேற்கூறிய இவன் ஓமென்னும் படியான உட்பொருளையாவுமறிகுவன். இவன் தனக்கு இடதுகண் சாயலாக விருக்கும். கெஜகர்ன கோகர்னவித்தை அறிகுவன் இயம்பொனுதவிநோதம் புரிகுவன். இவன் றனக்கு உண்மையவள் உதவியுண்டாம் தேவிசகாயத்தினுல் கர்னனைப்போலும் குபேரவாழ்க்கையுடையவனுகயிருந்து காசியிலுள்ளவர்களுக்கு உதவி செய்வான். எ-று. 129

செய்யவே யிவன்பிறந்த மனைதான்மைந்தா
செப்புகிறேன் வடவாச லுள்ளதாகும்
ஐய்யவே செவ்வாயின் கிழமையாகும்
அன்பான்லக்கினத்தி லிராகுவாகும்

உய்யவே யிவனுக்குக் கிரகமூன்று
உச்சமாய் நிற்குமடா வுறுதியாக
வையகத்திற் சதயமென்ற நாளேயாகும்
வாகாக விவன்பிறந்த நாள் கோளாச்சே

இ-ள். செய்யும்படியாக வலிமையுடைய மேற்கூறியவன் பிறந்த மனையானது வடக்குபார்த்த வாசலாகும். வாரம் செவ்வாய்க்கிழமை. இவன் ஜென்மலக்கினத்தில் இராகு நின்றனன். கிரகம் மூன்று உச்சம்பெற்ற நட்சத்திரம் சதையமாகும். இவை கூடியதினத்தில் இவன் ஜெனித்தவனாகும். எ-று. 130

ஆச்சப்பா வவதானஞ் சொல்லக்கேளு
அண்டரண்ட புவனமெங்கு மிவன்பேச்சப்பா
வாச்சப்பா தவறாத வசனமுள்ளான்
வண்மையாந் தாரமது கிட்டும்பாரு
கோச்சப்பா கோத்திரமும் பெலமுள்ளான்றான்
கொற்றவனுந் தனசாலி வீரியவானும்
வாச்சப்பா மயேந்திரந்தா னிவன்தன்கையில்
வளமாக மேழுண்டா மருவிக்கேளே.

இ-ள். மேற்கூறிய இவனுடையப் பிரதாபஞ் சொல்லக் கேளும்: இந்த அண்டரண்டப் புவனங்கள் யாவுமுள்ளோர் இவனுடைய பேச்சைப்பேசிப் புகழ்வார்கள்; வாக்காகிய வசனங்கள் ஒருக்காலும் பிசகான்; வண்மையாகிய தாரமானது வந்து கிட்டும்; கோத்திரபெலமுள்ளவன், தனவான், வீரமுடையவன்; மயேந்திரரேகையானது இவன் கையில் ஏழுரேகையிருக்கப் பார்க்கவும் எ-று. 131

மருவியதோ ரிவனுடனே பிறவியைத்தான்
மைந்தனுடன் பிறந்தவர்கள் வரிசைகேளு
கருவியதோ ரிவன்பிறவி யோகவானும்
சாட்சாதி ஈஸ்பரனு ருதவியாலே
பிறவியதோ ரிவன்றமையன் றம்பிமார்கள்
புஜபலங்க ளுள்ளவர்கள் புலமையாவர்
பெரியதொரு கோத்திரமாம் மிகவேவாழ்வர்
பேரின்பந் தன்னைநோக்கிப் பெருகுவாரே.

இ-ள். மேற்கூறிய இவனுடன் பிறந்தப் பிறவியானது ஐந்து பெயராகும். இவனுடைய மைந்தனோடுபிறந்தவர்களைக் கேட்பாயாக: அன்றியும் இவனுடைய பிறவியோகவானாகும்; சாட்சாத் சகதீஸ்வரனால் உதவியுண்டாய் வாழ்குவன்; இவனுடைய தமையன்தம்பிமார்கள் புஜபலமுடையபுலமையோர்களாவார்;பெருத்தக்குடும்பமாக வாழ்குவர் பேரின்பத்தைநாடுவர் எ-று 132

பாரடா விவன்யோக மெப்போதென்றால்
வாகான வயதுபதினென்றுக்குள்ளே
காரடா க்கரைமிடற்று னுமையாள்மாலும்
கருணையாக வழைத்திவனைக் கொண்டுபோய்தான்
தாரடா தனத்தையொருதலத்தில் காட்டி
சாற்றரிய திருவருளே சார்வாயீவர்
ஊரடா தனமிவன்றான் கொண்டுவந்து
ஒப்பில்லா வாழ்விவர்க்கு வந்ததன்றே.

இ-ள். மேற்கூறிய இவனுக்கு யோகம் எப்போதெனில் இவன் றனக்கு வயது பதினென்றுக்குள்ளே பரமசிவனும் உமையவளும் விஷ்ணுவுங் கருணை கூர்ந்து இவனை அழைத்துக் கொண்டுபோய் தனத்தை ஒரு தலத்தினிடமாகக் காட்டியபின் திருமாதின் அருளானது பெருகி அப்பொருளை இவன் கொண்டு வந்து அதி சம்பத்தோடு யாவரும் புகழுவார் எ-று. 133

அன்றெனவே யிவன்வயதோ ரிருபத்திரண்டில்
அப்பனே யிவனுடைய கனவிலேதான்
சென்றனவே சதாசிவன்றான் வந்து சொல்லி
சேவையாய் வடபாலி லழைத்துச்சென்று
குன்றெனவே குபேரனைப்போ லாகவென்று
குவலயத்திற் றனமிகவே யீந்திட்டையன்
நன்றெனவே நிதிதானுங் காட்டிற்காட்டி
நலமுள்ள குடம்ரெண்டா யெடுப்பான்பாரே.

இ-ள். மேற்கூறிய வண்ணம் இவன் வாழ்கினும் வயது இருபத்திரண்டில் இவனுடைய கனவில் சதாசிவன்வந்து சொல்லி வடபாலாக அழைத்துச்சென்று இவனை குபேரனுக்குச் சமமாக ஆக்கவேண்டுமென்றும் தனமானது வேணது ஈந்தும் நிருதியிருக்கும் இடத்தைக் காட்டியவர் மறைந்தபின் இவன் அக்காட்டினிடமாக இரண்டுகுடம் பொன்னெடுப்பான் இவனும் எ-று.

பார்க்கவே மைந்தனுந்தா னிதியெடுத்து
பக்குவமாய் மனைசேர்ந்த பாலன்றன்னை
ஏற்கவே தனவனைப் பெருங்கீர்த்தி
எடுத்துமவன் வளர்ந்திருப்பா னிகபரத்தில்
கார்க்கவே யுமையவளும் ரிஷியுந்தானும்
கருணைவைத்து ரக்ஷித்தார் மைந்தனைத்தான்
ஆர்க்குமிவ னடங்காத யோகசாலி
அருள்பெருகும் பிதாவிடப் புண்ணியத்தாலே.

இ-ள். பார்க்கவே மேற்கூறியவண்ணம் இப்பாலன் நிதியானது யெடுத்து தன்னுடைய மனையில் கொண்டுவந்து சேர்த்துப் பின்பு தனவானென்னும் பெருங்கீர்த்தியும் யெடுத்துமாழ்குவன்; இவனைக் கார்க்கும்படியாக உமையவளும் ரிஷிகளும் கருணையா

னதுவைத்து ரட்சித்து வருவார்கள். இவன்யார்க்கும் அடங்காத யோகசாலியாக அருளானது பெற்றும் கீர்த்தியானது பெருகு வன். அது எவரால் உண்டாயினவெனில் இவனுடைய தகப்பன் செய்த புண்ணியவசத்தினலாகும் எ-று. 135

தாலமென்ற விவன்தாய்தான் றிருவையாகும்
தன்னுடைய பிதாவுமவன் யோகவான்பார்
ஆலமென்ற தேவரிலே யொருவனப்பா
ஆச்சரியம் பெற்றமைந்த னதிகயோகம்
ஞாலமென்ற தெய்வமடா வதிகயோகம்
நாதாக்கண் மெச்சியிவ னல்கினன்பார்
ஏலமென்ற வெம்பிரா னருளினலே
ஏகாந்த வுமையவள் சொல்லினளே.

இ-ள். மேற்கூறிய இவனுடைய தாயார் திருமாலுக் கொப் பாகும் தகப்பனும் யோகவானகும். ஆகினும் இவன் தேவர்களி லொருவனகும்; ஆச்சரியம் பெற்ற மைந்தனகும்; அதியோக முடையவன்; ஞாலத்திலுள்ள தெய்வங்கள்மீதும் நாதாக்கள் மீதும் பட்சமுடையவன்; எவர்களுமிவனைமெச்சுவார்கள். எம்பி ரானருளால் ஏகாந்தமாக விளங்கும் என உமையவளுரைத்த வாக்காகும் எ-று. 136

சொல்லவே சக்கரத்தின் குலிசைமைந்தா
சொற்பெரிய விவன்வயது தூலங்கக்கேளு
நல்லவே இவன்றனக் கெழுபத்தைந்தாம்
நலமுள்ளயோகமடா நாடிக்கேளு
அல்லவே இவனுக்கு ஆறுகண்டம்
அப்பனே சொல்லுகிறே னறிந்துகேளு
வல்லவே இவன்வயது யோகவாழ்க்கை
வரிசைசொல்வேன் மைந்தனே மனதாய்க்கேளு.

இ-ள். சொல்லிய வாக்கின்படி சக்கரத்தின் குலிசரேகைக்கு இவனுடைய வயது யென்னவெனில் எழுபத்தைந்தாம். ஆகினும் நன்மையாகிய யோகங்களைக்கேட்பாயாக: இவன்றனக்குக் கண் டம் ஆறுண்டாம் அதனை விபரமாகச் சொல்லிக்கொண்டு வருகு வேன் கேட்பாயாக எ-று. 137

கேளப்பா இவன்வயது அஞ்சிக்குள்ளே
கேவலமாய் மாரிவந்து போச்சுதப்பா
வாளப்பா இவன்வயது பதினலுக்குள்
மகத்தான வாய்வுகண்டம் வருகும்பாரு
ஆளப்பா இவன்வயது இருபத்தெட்டில்
அன்பான சத்துருவால் பேயாலுண்டு
பாரப்பா இவன்வயது இருபத்தஞ்சில்
பாலகனைப்பெற்றபிதா இறப்பான்பாரே,

இ-ள். கேட்பாய்: மேற்கூறிய இவனுக்கு வயது ஐந்திற்குள்ளே அம்மையானதுகண்டு விலகும்; வயது பதினாறுக்குள் வாய்வினால் மகத்தாகிய கண்டம் சம்பவிக்கும்; வயது இருபத்தெட்டிற்குள் அணுகுவது சத்துருக்களாலும் பேயினாலும் கண்டமாம். வயது அறுபத்தைந்தில் தகப்பன் மரணமாகி விடுவான்.

பார்க்கவே யிவன்வயது முப்பதுக்குள்
பாலகனைப் பெற்றெடுத்த மாதாசாவாள்
ஏர்க்கவே யிவன்வயது முப்பத்தாறில்
ஏற்றமுள்ள நீராலேகெண்டமுண்டு
தாக்கவே யிவன்வயது நாற்பதுக்குள்
தவராது ராஜபகை சார்வதாகும்
வார்க்கவே யிவன்வயது அன்ப்த்தஞ்சில்
வளமான விஷத்தாலே பயமுண்டாமே.

இ-ள். இன்னமும் பார்க்க வயது முப்பதுக்குள் தாயார் மரணமாகுவள். இவன்வயது முப்பத்தாறுக்குள் சலகண்டம் சம்பவிக்கும்; வயது நாற்பதுக்குள் இராஜாக்கள் பகை நேரும். வயது ஐம்பத்தைந்தில் விஷம் முண்டாம் எ-று. 139

உண்டாகு மிவனுக்குத் திசையும்யோகம்
உறுதியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நன்றாகு நான்முகனார் வகுத்தவண்ணம்
நடக்குமடா திசைக்காம னன்றாய்க்கேளு
கொண்டாடுங் குமரனிட வருளேமெத்தக்
கோதண்டராமனவர் கோபாலன்றான்
வண்டாடும் பூங்குழலா ளம்மைசோதி
வகுத்துரைத்த கட்டளையு நடக்கும்வாழ்வே.

இ-ள். உண்டாவதுடன் இவனுக்கு திசையும் யோகமும் உருதியோடு சொல்லுகிறேன் கேட்பாயாக: இவனுக்கு அன்று நான் முகன் வகுத்தவண்ணம் நடக்குமாதலால் அன்றியும் கொண்டாடும்படியானக் குமரனுடைய அருளானது மெத்த உண்டாகும். ஸ்ரீ கோதண்டராமனுடைய கிருபையுமுண்டாகும்; இவனுக்கென உமையாள் உரைத்தபடி நடக்கும் எ-று. 140

வாழவே யிவன்பிறந்த வாருமாண்டில்
வளமையுள்ள வில்லறத்திற் பொருள்களெல்லாம்
தாழவே செய்துவைத்தான் மைந்தன்றானும்
தாட்டியங்கள் குறையவைத்தான் பிதாவையப்பா
மாளவே பொருளெல்லாம் வாரிமைந்தன்
வையகத்திற் செலவுதனை செய்தான்பாரு
ஆளவே யில்லறத்தி லதிகமாக
ஆக்கிவைத்தான் மைந்தனிட அருமையாலே,

இ-ள். வாழும்படியாக மேற்கூறியபாலன் பிறந்த ஆறும் வருடத்தில் வளமையாகிய இல்லறத்திலுள்ளப் பொருள்கள் யாவும் தாழ்வாக இவனாலே போகும்; தகப்பனுக்குத் தாட்டீக மானது குறையும்; ஒழியும்படியாகப் பொருள்களை வாரிச் சில விடுவன்; ஆறும்படியாகிய இல்லறத்தில் அதிக கஷ்டமுண்டாக் கியவ னிவனாகும் எ-று. 141

அருமையா யிவன்பிறந்த பத்தாமாண்டில்
ஆச்சரிய முமையவடா னனுக்கிரகிப்பாள்
பெருமையா மிவன்பிறந்த விருபத்தைந்தில்
பிரபலங்க ளனேகமதாய் நடக்கும்பாரு
அருமையா மிவன்பிறந்த விருபத்தாறில்
தாட்டிகனு மண்ணாளுந் தகமைசெய்வான்
உருமையா மிவன்பிறந்த பதினாறுக்கு
உற்றதோர் குறவுவந்து கூடுமன்றே

இ-ள். அருமையாக இவன்பிறந்த ஐந்தாம்வருடத்தில் உமை யவள் அனுக்கிரகிப்பாள். இருபத்தைந்தாம் வயதில் அதிகப்பிற பலம் நடக்கும். இருபத்தாறும்வயதில் தாட்டீகனுகவும் மண்ணா ளுந்தகமை யுள்ளவனாகயிருப்பான்; பதினாறும் வருஷத்தில் உற வானது அதிகமாக வந்துகூடும் எ-று. 142

கூடிடவே சக்கிரத்தின் குலிசமானால்
குலமான ரேகையடா மைந்தர்க்கப்பா
நாடிடவே யிவன்யோக வாழ்க்கைமைந்தா
நலமான குலிசமடா நாடிக்கேளு
பாடிடவே பரமனிட வருளாலேதான்
பாக்கியங்கள் வந்ததென்று பலிதஞ் சொன்னேன்
தேடிடவே யுமை வள்ளந் திருப்பாள்பாரு
செப்பரிதாய்ப் பிறந்ததிந்த மைந்தன்றானே.

இ-ள். கூடுமென்பதற்குச் சக்கரத்தின் குலிசமாகின் குல மான ரேகையாகும். பாலனுக்கு நாடிடும்யோகவாழ்க்கை யா தெனில் நன்மையாகிய குலிசத்தின் வலிவால் பரமனுடைய அருளானது பெருங்பாக்கிய முதலானதும் வந்து வாய்த்தன வாம்; இந்தமைந்தனுக் கருள் புரியும்படியாக உமையவள் வந்து பாதுகாப்பாள்; இவன் சொல்லுதற்கரிதாக வந்து பிறந்தோனா கும் எ-று. 143

மைந்தனைப் பிறப்பதென்றால் குலிசம்வேண்டும்
மகத்துவங்கள் வேண்டுமென்றால் விஷக்கம்பவேண் [டும்
இந்தனைகளில்லையடா மைந்தா சொல்வேன்
சீக்கிரத்திற் சிவபூசை சிறக்கச்செய்நீ

தந்தையொடு தமையனேயும் வைத்துப்பேணும்
தாட்டியற்கு மிகவாழ்வு தனஞ்சயன்றான்
சொந்தமடா வுமையவளும் பெற்றதாயும்
சோதியா மனோமணியாற் றுலங்கிட்டேனே.

இ-ள். பூமியின்மீது மைந்தனுகப் பிறப்பதற்கு குலிசமானது வேண்டும் மருத்துவம்வேண்டுமாகின் விஷக்கம்பம்வேண்டும்; அன்றியும் சிந்தனைகள் இல்லாமற்சொல்வேன்; ஆதலால் சீக்கிரத்தில் சிவபூசையானது சிறப்பாகச் செய்குவாய். தந்தையோடுத் தமயனேயும்வந்துகாப்பாய், தாட்டியாகத்தனஞ்சயன்போல் வாழ்குவாய், என உலகமாதாவாகிய வுமையவளுறைத்த வாக்கிது உண்மையாக நம்பவும் எ-று. 144

துலங்கிடவே யிவன்வயதோர் முப்பதாறில்
தூய்தான வாடைகள் பொன்னுரங்கொள்வான்
அலங்கிடவே யிவன்றானும் ராஜசேவை
அன்பாகச் செய்துலகில் வருவான்பாரு
பலங்கிடவே யிவன்வயது முழுதுமப்பா
பாக்கியங்கள் பெற்றிவன்றான் வாழ்வான்பாரு
நிலங்கிடவே யிவனுடைய முற்சனனவாழ்க்கை
நிகழ்த்துகிறேன் மைந்தனே நினைவாய்க்கேளு

இ-ள். துலங்கிய மேற்கூறிய இப்பாலனுக்கு வயது முப்பத்தாறில் ஆடையும் பொன்னுரமும் கொள்வன். அன்றியும் இராஜசேவை அன்பாகச் செய்துவருவன். இவனுடைய வயது முழுதுக்கும் பாக்கியங்கள் பெற்றுவாழ்குவன்; ஆகினும் இவனுடைய முற்சனனவாழ்க்கைதன்னைச் சொல்லுகிறேன் அதனை நினைவாய்க் கேளும் எ-று. 145

கேளுங்கள் முனிவர்களே யிங்கவன்றன்
கேவலமா முற்சனனவாழ்க்கைதானும்
வாழுங் கபடர்களே யிவனைவைத்து
வளமான மைந்தனில் நந்நாளிற்றான்
ஆளுங்களாண்டவனுர் பாதந்தன்னில்
அம்பாளைப் பூசைசெய்த வருமையாலே
தாளுங்க ளீஸ்பரனுர் மனமுவந்து
சமைத்துவிட்டா ருலகாட்சி செய்யுதற்கே.

இ-ள். கேளுங்கள் முனிவர்களே: இவனுடைய முன்செனன வாழ்க்கையைச் சொல்வேன் இவன் கபடநாடகனுக வாழ்ந்து அந்நாளிருக்கும்போது ஆண்டவனுடைய பாதமதிற் பக்தியாகியும் அம்பாளைப் பூசைசெய்துவரும் அருமையாலும் பரமேஸ்வரனுர் மனமகிழ்ந்து சமைத்தார் உலகாட்சிச் செய்யும்படியாகவும் எ-று. 146

செய்யவே யிவன்றன்முற் சனனந்தன்னில்
செப்பரிய பிராமணன்ற ஞகுமப்பா
ஐயமில்லை சிவனுக்குப் புட்பஞ்சாற்றி
அன்புமிகச் செய்ததினுல் மனதிரங்கி
உய்யவே பூமியிலே பிறந்துவந்தான்
உற்றதொரு மைநாகம் பிறந்துமைந்தன்
வையகந்தி லீஸ்வரியாள் கோயில்புக்கி
வளர்ந்துமவன் வரம்வாங்கின மனிதனுகும்.

இ-ள். செய்யும்படியாகிய செபித்தது ஏதெனில், இவன் முன் ஜென்மந்தன்னில் பிராமணனுகும். இவன் ஐயமில்லாமல் சிவபெருமானுக்குப் புஷ்பஞ்சாற்றி அன்பு செய்துவந்ததினுல் பரமன் மனமிரங்கிக்கடாட்சித்தபடியால் பூமியின்மீது பிறந்து வந்தான்; இவன் மைனுகத்தினிடமாகத்தோன்றி வையகத்தினிடமாக ஈஸ்வரியாள்கோயிற் புக்கிவளர்ந்தும் வரங்கள் பெற்றும் மனிதனுகப்பிறந்தானுகும் எ-று. 147

மனிதனென்றற் பூர்வத்திற் பாக்கியசாலி
மானிலத்திற் பிறந்துவந்தான் யோகங்கூடி
கனிமொழியா ளுமையவள்தான் தானதர்மம்
காட்சிதன்னைக் கொடுத்திவனைப் பிறப்பித்தாள்பார்
இனிதயம்போ லிவனுடைய வாண்மைமெத்த
இன்னிவன் தான் மாயவன்றன்பாதத்தாளாம்
பணிமுதலாம் யாவர்க்கு முதவியுண்டாம்
பாக்கியமாம் நிதியிரண்டு மெடுப்பான்பாரே.

இ-ள். மனிதனுகத்தோன்றினும் பூர்வத்தில் யோகசாலியாகவிருந்து பூமியின் மீதுபிறந்தான். அன்றியும் யோகமானது கூடி கனிபோன்ற மொழியினுடைய உமையாள் இவனை தானதரும முதலானதுஞ் செய்துவரும்படியாகக் காட்சியானது கொடுத்து இவனைப் பிறப்பித்தாள்; இவனுடைய ஆண்மையானது மெத்தவுண்டாகும். இவன் மாயவனுடைய பாததுளாகப் பணிந்தேற்றுவான்; யாவருக்கும் உதவியுள்ளோனுகுவன்; பாக்யெவானுய் நிதியானது இரண்டு எடுப்பான் எ-று. 148

பார்க்கவே நிதியிரண்டு மெடுத்தபாலன்
பைங்கொடியா ளுதவியினுல் பாக்கியவானும்
ஏர்க்கவே யிவனுடைய பிதாவோமைந்தா
இயல்பான தேவரிலே யொருவனப்பா
கார்க்கவே யிவனைத்தான் காளகண்டர்
கடாட்சித்தார் முன்செய்த புண்யத்தாலே
வார்க்கவே வைகுந்தன் வச்சுதந்தன்
வகையான மயேந்திரம்போல் வாழ்ந்தானன்றே.

இ-ள். பார்க்கும்படியாக நிதிகள் இரண்டும் எடுத்தபாலன் அம்பாளுடைய கிருபையினால் பாக்கியவானாகுவன்; இவனுடைய பிதாவானவன் தேவர்களில் ஒருவனாகும். இவனைக் காக்கும்படியாகக் காலகண்டராகிய சிவபெருமான் கடாட்சித்தார். முன்செய்த புண்ணியத்தினாலும் அச்சுதன் தன்போல் மயேந்திர ரேகையுண்டாகி வாழ்ந்திருப்பன் எ-று. 149

## குலிசை ரேகையின் பலன்.

அன்றென சக்கரத்தின் குலிசைமைந்தா
ஆச்சரிய மிதனுடைய வருமைசொன்னேன்
நன்றெனவே நான்முகனுங் கும்பமூர்த்தி
நவில்வேத வியாசமுனி நயந்துகேட்டார்
குன்றெடுத்த கோபாலர் கோழர்நந்தி
குவலையத்திற் படைத்ததெனுங் கூறுகேட்டார்
நன்றெனவே நாதாக்கள் முனிவோரெல்லாம்
நாகரிக உமைபாத நாடிநின்றாரே.

இ-ள். சக்கரத்தின் குலிசையதனை ஆச்சரியமாக அதனுடைய அருமையை சொன்னேன்; அதனை நான்முகனும் பாமூர்த்தியும் வேதவியாசருங்கேட்டார்; அத்துடன் கோபாலரும் நந்திதேவரும் இவர்கள்கூடி குவலயத்தில் படைத்தது யென்னக்கூறுமென்றுகேட்க அப்போது நன்றென நாதாக்கள் முனிவர்கள் இவர்களெல்லோரும் உமையவளின் திருப்பாதத்தை நாடி நின்றனர்.

## சங்கபாலி ரேகையின் பலன்.

நின்றிடவே யின்னமுந்தான் சங்கபாலி
நிகழ்த்துகிறேன் முனிவர்களே நினைவாய்க்கேளீர்
நன்றிடவே யிதுவித்தாம் யோகமாகும்
ராஜாதி ராஜர்களு நடுங்குவார்பார்
சென்றிடவே மயேந்திரத்திலேறி நிற்கும்
செகத்திலே கேசரியின் பலன்களாகும்
மன்றிடவே வாலைசுப்பிர மண்ணியயோகம்
வாகான தெய்வசித்தி யாகும்பாரே.

இ-ள். அப்படிநின்ற முனிவர்களைப்பார்த்து உமையவள் சொல்லத்தொடங்கினாள்: கேளுங்கள் முனிவர்களே! இதுவிதமாகிய யோகமாகும் இதனைக்கண்ட இராஜாதி ராஜர்களும் நடுங்குவார்கள்; இதுமயேந்திரரேகையின் மீது ஏறிநிற்கும்; அதுகேசரியின் பலனாகும், வாலை சுப்பிரமண்ணியருடைய யோகம் பலிக்கும். தெய்வசித்தியுண்டாகும், எ-று. 151

பார்க்கவே சங்கணிடப் பாலிஎன்ற
பண்பான ரேகையிடப் பலஞ்சொல்லக்கேள்
ஏர்க்கவே யிவன்கையி லிருக்குமாகில்
என்னப்பா இவன்யோகம் இயல்பாகத்தான்

கார்க்கவே இவனுடன்பிறப்போ ராறுபேரும்
கருணையால் பிதாவர்க்கமெல்லாம்போகும்
ஆர்க்கவே யிவன்வயது பதினைந்துக்குள்
அன்பான பாலகனும் மயங்குவானே.

இ-ள். பார்க்கசங்கபாலி ரேகையின்பலன் சொல்வேன் கேட்பாயாக. அவ்விரேகைக் கையிலிருக்குமாகின் அவனுடைய யோகத்தை யென்னசொல்வேன் இவனுடன் பிறந்தோற் ஆறுபெயராகும்; அன்றியும் பிதாவினுடையவர்க்கம் யாவும் போகும் இவன் தனக்கு வயது பதினைந்துக்குள் இப்பாலன் மயங்குவான் எ-று.
152

வானெனவும் இவன்வயதோ ரிருபதுக்குள்
வங்கிசத்தில் உள்ளவர்கள் எல்லாம் சாவார்
நானெனவும் காட்சிபெற்ற மைந்தனுக்கும்
கருணையுள்ள பாலகனும் இவன்தானப்பா
தேனெனவும் சோதியிலே மூணாத்தகூட்டம்
செப்புதற்கு இவன்யோக வாழ்க்கைமைந்தா
மானெனவும் வையகத்தில் ஒப்பாரில்லை
வந்ததடா திசையோகம் வளமையாமே.

இ-ள். மேற்சொன்ன இவன்றனக்கு வயது இருபதுக்குள் இவனுடைய வங்கிசத்திலுள்ளவர்கள் யாவரும் மரணமாகிவிடுவார். காட்சியானது பெற்ற மைந்தனிவனுக்கும் கருணையுள்ளவன் சோதியில் மூணாத்தக்கூட்டமாகும். இவனுடைய யோகவாழ்க்கை உலகத்தில் ஒப்புவார்களில்லை வருகும் திசையைய எ-று.

வளமையடா சொல்லவென்றால் அனேகதொல்லை
வந்ததடா இவன்றனக்கு தன்மையாக
இளமையடா பருவத்தில் சனிதொடர்ந்து
எளிதாக நீக்கியல்லோ இனியதாக்க
பழையதாம் யோகமது இருபத்தாறில்
பாக்கியங்கள் வந்ததடா அன்பத்தைந்தில்
நிலைமையதாம் அஷ்டதிக்கு எட்டிலேதான்
நிலையான நிதியொன்று கிடைத்ததன்றே.

இ-ள். வளமையாக இன்னமுஞ்சொல்வேன் கேட்பாயாக இவன்றனக்கு அனேகத் தொல்லையாகும் அதாவது இளமையாகிய பருவத்தில் சனிதொடர்ந்து அதுநீங்கி இனிமையானது உண்டாச்சு. பழமையாகியயோகம் இருபத்தாறில் வந்த நிதி பாக்கியம். அன்பத்தைந்தாம்வயதில் வந்தனுகும்; நிலைமையாகிய அஷ்டதிக்கு யெட்டினிற்குள் நிதியானது ஒன்று கிடைக்கும் எ-று.
154

அன்றனவே இவனுக்குப் புத்திரன் எட்டு
ஆச்சரியம் பெற்றமக்கள் அதிகயோகம்
நன்றெனவே யிவன்வயதோ ரெழுபத்திரண்டு
நலம்பெறவே பரமபதம் அடைகுவான்பார்
இன்றெனவே யிவனுக்கு அன்னம்பாலும்
இஷ்டம்வொன்றும் இல்லாமல் இருந்துவாழ்வான்
மன்றெனவே இவன்தாரம் திருமால்மங்கை
மாயவனார் கட்டளையின் காரணமாமன்றே.

இ-ள். அன்றியும் புத்திரர்கள் எட்டுண்டாகும்; அவர்களால் அதிகயோகமுண்டாகும்; இவன்றனக்கு வயது எழுபத்திரண்டாகும்; அதற்குள் அவன் பரமபதமடைகுவன்; இன்னோனுக்கு அன்னமும் பாலும் இஷ்டமொன்று மில்லாமல் வாழ்வன், இவனுடைய மங்கைத்திருமாலுக் கொப்பாகும்; இதுகளெல்லாம் மாயவனுடைய கட்டளையாகும் எ-று. 155

## ஆக காண்டம் 2-க்கும் பாடல்-155.

---

# மூன்றுவது காண்டம்.

## சாத்மீக ரேகையின் பலன்.

காரணமாம் சாத்மீக ரேகைமைந்தா
காட்சிபெறச் சொல்லுகிறேன் கருணைகூர்ந்தே
வாரணமாம் புத்திரனைப் பெற்றமாதா
வாலைமனோன் மணித்தாயை வணங்கினேன்யான்
பூரணமாம் பராபரையின் பாதங்காப்பு
புகலரிய தேவர்களின் பாதங்காப்பு
நாரணனோ டயனிருவர் பாதங்காப்பு
நந்தியெனும் மீஸ்வரனார் பாதங்காப்பே.

இ-ள். காரணமாக விளங்கிய சாத்மீக ரேகையின் காட்சியைச் சொல்ல கருணையானது கூர்ந்து யானைமுகனையும் அறுமுகனையும் பெற்றமாதாவாகிய வாலை மனோன்மணித்தாயை வணங்கியும் பூரணமாகிய பராபரியின் பாதம்போற்றி தேவர்களின் பாதம்வணங்கி ஆயனோடு அயன்பதம் போற்றி நந்தீஸ்வரர் பாதங்காப்பாகப் போற்றிச் சொல்லுவேன் எ-று. 1

காப்பென்ற சாத்மீக ரேகைமைந்தா
கைகளிலே இருந்தாக்கால் கருணைகேளு
வாப்பென்ற ஐந்துபுள்ளி ரெண்டுரேகை
வகையாகச்சிறு கீறு இருக்குமப்பா

தாப்பென்ற மயேந்திரம்போல் ஏறித்தானே
சகமுழுதும் புகழ்தரவே இருக்கும்பாரு
ஏப்பென்ற இவன்தனக்கோ யோகவாழ்க்கை
என்னசொல்வேன் சொல்லரிதுமைந்தாகேளு.

இ-ள். காப்பாகத்தானே கரத்தைப்பார்க்கும்போது சாத்மீகரேகையானது தோன்றி அதுயெவ்விதமிருக்குமெனில் ஐந்து புள்ளியும் இரண்டு ரேகையுமாக அத்துடன் சிறுகீறுமாக விருக்கும். அதுமயேந்திரம்போல் ஏறி இருக்கும். அவ்வித ரேகையுடையோன் ஜெகமுழுதும் புகழானது தருகும்படியாக வாழ்குவன். யோகமும் வாழ்க்கையும் சொல்லுதற்கரிதாகும் எ-று. 2

மைந்தனே இவன்பிறந்த மனையிலேதான்
வளமாக இவன்பிறக்கும் அந்தவேளை
கந்தனைத்தான் பெற்றெடுத்த கயிலைநாதர்
கருணையது கடாட்சிக்கக் கருணையாலு
வந்திவன் இருமனையில் தென்பால்வீட்டில்
வாழவே பிறந்தான்காண் சுக்கிரவாரம்
சிந்தனைக ளில்லாமல் செல்வத்தோடே
செப்புகிறேன் உதயமதில் பிறந்தானன்றே.

இ-ள். மேற்கூறிய மைந்தன்பிறந்த மனையில் அந்தவேளையில் கந்தனையீன்றக் கருணைக்கடலாகிய சிவபெருமான் அப்போதுகடாட்சிக்க ஜெனனமானான். பிறந்தமனை இருபால்; அதில் தென்பால் வீட்டில்வாழும்படியாக வந்தான் அன்றியும் சுக்கிரவாரத்தில் சிந்தனைகள் யாதுமில்லாமல் செல்வத்தோடு உதையகாலத்தில் ஜெனனமாகி வந்தோனாகும் எ-று. 3

அன்றெனவே இவன்பிறக்கும் போதில்மைந்தா
அன்பான பிதாதனது வீட்டிலில்லை
குன்றெனவே இவன்பிறந்த நாலாமாதம்
குலமான பிதாவுக்கு யோகமுண்டாம்
நன்றெனவே இவன்யோகம் மிகவாமப்பா
நலமான தெய்வத்தை நாடிநிற்பன்
மன்றெனவே இவன்பிறந்த ஆறும்மாதம்
வடமான புதுமனையும் எடுக்கலாச்சே.

இ-ள். மேற்கூறிய பாலன் பிறக்கும்போது அவன்பிதா அந்த வீட்டிலில்லை இவன் பிறந்த நாலாம்மாதம் பிதாவினுக்கு யோகமுண்டாம் அதில் இவனுடைய யோகம் மிகவும் நன்மையாகும்; தெய்வத்தை நாடிநிற்பன். இவன் பிறந்த ஆறுமாதம் புதுமனை யெடுத்துக்கட்டி வாழ்குவார்கள். எ-று 4

ஆச்சப்பா இவனுக்கு கண்டமைந்து
அன்பான பாலனே அறிந்துசொன்னேம்
வாச்சப்பா விவனுக்குத் தாரம்ரெண்டு
வையகத்தில் இவனைப்போல் புண்ணியசாலி
கோச்சப்பா இவன்வயதோ பதினெட்டாண்டில்
கொற்றவர்க்கு விவாகமது ஆச்சுதன்றே
வீச்சப்பா இவன்வயதோ ரிருபத்தெட்டில்
மேன்மையாம் இவனுக்கு விவாகமன்றே

இ-ள். அப்படிக்கு வாழ்கினும் இவனுக்குக்கண்டம் ஐந்துண்டாகும்; அதுவுமன்றி இவனுக்குத்தாரம் இரண்டாம்; ஆகினும் இவன் பூமியின்மீது புண்ணியசாலியாகும. இவன் தனக்கு பதினெட்டாம் வயதில் விவாகமாகும்; வயது இருபத்தெட்டில் இரண்டாவது விவாகமுமாகும் எ-று. 5

அன்றேதான் இவனுக்கும் புத்திரன்பத்து
அப்பனே பிறக்கும்யென அறிந்துசொன்னேம்
நன்றெனவே இவன்பிதாவுடன் பிறந்த
நலமான உடற்பிறப்போ ராறுபேராம்
குன்றெனவே இவன்பிறவி பதின்மூன்றாகும்
குறித்துரைப்பேன் ஆண்யெட்டு பெண்தான்நாலு
நன்றெனவே இவன்தானும் ஆறும்பேராம்
நலமான இவன்வயதோ ரெழுபத்தைந்தே.

இ-ள். மேற்கூறியோனுக்கு புத்திரர்கள் பத்துண்டாகும்; இவன் பிதாவுடன் பிறந்த உடன்பிறப்பு ஆறுபேராகும்; இவனுடன் பிறந்தோர் பதின்மூன்று பெயராகும்; அதில் ஆண் எட்டு பெண் நாலாகும்; அதிலிவன் ஆறுவது பிள்ளையாகும்; இவனுக்கு வயது எழுபத்தைந்தாகும் எ-று. 6

ஐந்தான பரிசுத்த ரேகைமைந்தா
அன்பான பாலகனே அறியச்சொன்னேன்
மைந்தான முக்கவரின் வட்டம்போலாம்
மகத்தான ரேகையது வெறுமையாகும்
நிந்தான இவனுக்குப் பிறந்துவந்த
நீணிலத்தின் வருடம்தான் ஒன்றுக்குள்ளே
மன்றான தாய்தந்தை கொன்றான்பாரு
வண்மையாம் அவன்வெறுமை ஆனனன்றே.

இ-ள். பரிசுத்தமாகிய ரேகையை அன்போடு அனைவர்களும் அரியச்சொன்னேன். அதாவது முக்கவரின் வட்டம்போல் தோன்றும்; அதின் பலன் வெறுமையாகும்; இவன் பிறந்துவந்த வருஷத்திற்குள் தாய் தந்தையர்கள் இறப்பார்கள்; அதன்பின்பு இவன் வெறுமைப்படுவன் எ-று. 7

## காப்பிலி ரேகையின் பலன்.

ஆனதென்ன காப்பிலியின் ரேகைமைந்தா
அப்பனே யிவன்கையில் இருக்குமாகில்
தானதென்ன இவன்பிறந்த இருபத்தைந்தில்
தருவான ஆயுதத்தால் மடிவான் அன்றே
நானதென்ன பாலியிட ரேகைமைந்தா
நலமாகக் கண்டுநீ தள்ளுதள்ளு
வானதென்ன வண்மையிட ரேகைகண்டால்
வம்மிசத்திற் காகாது வண்மைதானே.

இ-ள். காப்பிலியென்னும் ரேகை கையிலுள்ளோன் பிறந்த இருபத்தைந்து வயதில் ஆயுதத்தினால் மடிகுவன்; பாலிடரேகை யதனைக்கண்டு தள்ளிப்போடுவாய்; வண்மையாகிய ரேகையைக் காண்பாயாகில் அதுவும் வம்மிசத்திற்கு ஆகாவாம் எ-று. 8

## பாஞ்சாலி ரேகையின் பலன்.

தானென்ற பாஞ்சாலி ரேகைமைந்தா
தருவான திருவையிட ரேகைதானும்
ஊனென்ற பஞ்சவர்ண ரேகைமைந்தா
உற்பனமாய்ச் சொல்லுகிறேன் உணர்வாய்க்கேளு
வானென்ற சுசிவர்ண மஞ்சுரெண்டு
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
பானென்ற சுக்கிரன்தன் ரேகைமைந்தா
யான்சொல்வேன் இதனுடைய அடர்புபாரே

இ-ள். பாஞ்சாலிரேகை திருவையிடரேகை பஞ்சவர்ண ரேகை இவைகளைச் சொல்லுகின்றேன் உணர்வாகக்கேளும்: அதில் சுசிவர்ணம் ஐந்தும் இரண்டும் அதனைச்சொல்கிறேன்; சுக்கிரனுடைய ரேகையும் யான் சொல்வேன் அதனுடைய அடர்புபாரும் எ-று. 9

பாரென்ற யிவன்வீட்டில் தெய்வக்காரி
பைங்கொடியாள் அனல்மாய்ந்த கன்னிப்பெண்
கூறென்ற இவன்வழியில் தலைமுறைதான்மூன்றும் [ணுள்
குடும்பத்தார் பூசைதனை மறந்தார்பாரு
சாறென்ற அனேகதான் செய்யவில்லை
சற்குணமாய் இவன்தன்னைப் போற்றிசெய்தால்
சீறென்ற திசையோகம் பின்னுமேதான்
சீக்கிரத்தில் வருடம்ரெண்டு செல்லுமன்றே.

இ-ள். பார்க்க மேற்கண்ட ரேகையுள்ளோன் வீட்டில் தெய்வக்காரி, அவள் அனல்பாய்ந்தக் கன்னிப்பெண்ணாகும். அவள்

இவன் வழித்தலை முறையில் மூன்றுந் தலைமுறையும் அதனைக் குடும்பத்தார்கள் அவளுக்குச்செய்யும் பூசையை மறந்தார்கள். அப்படிமறந்து அநேக நாளாய் செய்யவில்லை; அவளை இப்போது சற்குணமாகத்தானே பூமியில் போற்றிசெய்துவந்தால் சீருகி யத்திசையும் யோகமும் பின்னால் வருஷம் ரெண்டில் வந்து கூடும் எ-று. 10

சொல்லுமடா யிவன்மனதின் துயரமெல்லாம்
சேயிழையாள் உதவியது செய்தாளன்றே
வல்லுமடா வியாகூலம் வேண்டாமைந்தா
வாகான புத்திரபாக்கியமும் உண்டாம்
அல்லுமடா ஆயிமைந்தன் குமரன்தன்
அன்பாகச் சிவனையும் பூசிக்கவேண்டும்
நல்லுமடா இவன்குழவி பிறந்தயோகம்
நலமான நீதியுண்டாம் நாடிக்கேளே.

இ-ள். மேற்சொன்னபடி தவராமல் செய்துவரில் இவனுடைய துயரமெல்லாந்தீரும்; அந்த தெய்வமானமங்கை உதவி புரிகுவாள்; வியாகூலமில்லை பாக்கிய முண்டாகும். உமையவள் மைந்தனாகிய குமரன் தன்னையும் சிவபிரானையும் பூசித்துவரில் இவன் சுதன்பிறந்த யோகத்தினால் நிதியானது உண்டாகும் எ-று

கேட்கையிலே ரேகையிலே திருவையப்பா
கேவலமாய்த் திசையோகம் கெடுதிகேளு
வாட்கையிலே முன்னோர்கள் பொருள்கள்வைத்து
வகைசொல்லி மாளாமல் மாண்டுபோனார்
நாட்கவே தலைமுறைகள் மூன்றுயப்பா
நலமாக பூமியிலே வைத்திடுமப்பொருளை
ஆட்கையிலே நாலான தலைமுறைதனில்தான்
ஆண்பிள்ளை இவன்பிறந்து எடுப்பான்பாரே.

இ-ள். கேட்கும்படியான ரேகையில் திருவையுண்டாகில் அதின் கேவலமான திசையோகத்தையும் கெடுதிசையுங்கேளும் அதாவது வாழ்க்கையாயிருந்த முன்னோர்கள் பொருள்தேடி வைத்து அதற்கு வகை யாதொன்றும் சொல்லாமல் மாண்டு போனார்கள். அதுதலைமுறை மூன்றுகப் பூமியில் வைத்த அப்பொருளை நாலாவது தலைமுறையில் ஆண்பிள்ளையாக இவன்பிறந்து யாவரும் புகழ அதனை இவன் யெடுப்பான் எ-று. 12

எடுத்திடவே திருவைக்கு யின்னங்கேளு
இயல்பாக மனதிலிவன் எண்ணுங்காரியம்
தொடுத்திடவே மனையிலேதான் சுகமேயில்லை
தொல்லைமெத்த பிள்ளைகள்தான் துயரத்தாலே

கொடுத்திடவே பாக்கியத்தின் வியாகூலந்தீர
கொடுப்பாரே அருணகிரி கோபாலர்தாமும்
அடுத்திடவே ஆயிர நாமத் தையன்
அன்பான விஷ்ணுவுதான் அருள்செய்வாரே.

இ-ள். எடுத்திடினும் திருவையென்னும்ரேகைக்கு இன்னமும் பலன்கேட்பாயாக. இவன் இயல்பாகத்தானே மனதிலெண்ணுங் காரியங்கள்யாவும் மனையில் சுகமில்லை. தொல்லையானது மெத்தவுண்டாம்; பிள்ளைகளினுடைய துயரத்தினால் வாடுவான். கொடுக்கும்படியான பாக்கியத்தின் வியாகூலந்தீர அருணகிரி நாதரும் கோபாலரும் அருள் புரிகுவார் எ-று.

13

அருள்செய்வார் ஐயனிட உண்டிக்கேயென்றும்
ஆரிழையாள் அனல்மாய்ந்த கன்னிப்பெண்ணும்
பொருள்செய்யும் ஈஸ்வரனார் உதவியாலே
போச்சுதடா இருபத்தி ரெண்டிலேதான்
அருள்செய்தார் திசையோகம் வந்ததப்போ
அன்னவன் தன் வயதிருபத்திரண்டதாகும்
விருள்செய்த ஒருதாய்க்கோர் மைந்தனாகும்
மிகவான மைந்தனுக்கு விவாகமாச்சே.

இ-ள். அருள்செய்யும்படியாக ஐயனாருக்கு உண்டிகட்டி வைக்க நன்மையாகும். அனல்பாய்ந்த கன்னிப்பெண்ணாள் பொருள்பெருகும். ஈஸ்வரனாருடைய உதவியினாலும் தொல்லையானது விலகிப்போகும் இவனுக்கு வயது இருபத்திரண்டில் அதற்குமேல் அருளாகத்தானே திசையும் யோகமும் வாய்க்கும்; அப்போது இவன்றனக்கு வயது இருபத்திரண்டாக நடக்கும்; இவன் ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையாகும். விவாகமானது முடியும்

ஆச்சப்பா ஆறுநாள் கெர்ப்பக்காரன்
ஆனந்தமதியோகன் அன்பானபிறவி
காச்சப்பா இவன்பிறந்த பதின்மூன்றாண்டில்
கணக்கில்லாத் தொல்லையது வந்ததப்பா
தாச்சப்பா தலைவனுடன் பிறந்ததாறு
தன்னுடைய பிறவிகளைக் கொன்றான்பாவி
போச்சப்பா மயேந்திரத்தில் நாலுண்டானால்
பிரபலங்க ளாவனடா விருபத்தாறே.

இ-ள். இவன் தாயார் குளித்த ஆறுநாள் கருதரித்தவன் ஆனந்தயோகமுள்ளப் பிறவியாகும்; இவன் பிறந்த பதின்மூன்றும் வருஷத்தில் கணக்கில்லாதத் தொல்லையானது படுகுவன். தகப்பனோடு பிறந்தவர்கள் ஆறுபோகும்; இவன் தன்னுடைய பிறவிகளைக்கொன்றான்; ஆகையால் மயேந்திர ரேகையினாலுண்டாகில் பிறபலமுடையவனாகுவான் இருபத்தாறும் வயதில் எ-று.

ஆறிடவே யிவன்யோகன் தனவானப்பா
ஆச்சரியங் கேட்டபொருள் கூடும்பாரு
பாறிடவே யிவனுக்கு யிருபத்தெட்டில்
பண்பான கலியாணமாகும்பாரு
பேறிடவே யிவன்வயதோ ரிருபத்தெட்டில்
பெரியதொரு கெண்டம்ரகம் வந்ததப்பா
சீறிடவே யிவன்றனும் திசையோகத்தால்
சீக்கிரத்தில் திசையோகம் வருகும்பாரே.

இ-ள். மேற்கூறிய இவன் யோகத்தில் தனவானகும்; ஆச்சரியமாகத் தான் கேட்ட பொருள் யாவுங்கூடும்; இவனுக்கு இருபத்தெட்டுவயதில் கலியாணமாகும்; அத்துடன் ஒரு கெண்டமானது அவ்வயதிற்றனே சம்பவிக்கும். இவனுடைய திசை யோகத்தினல் சீக்கிரத்தில் பலன்கள் பெருக உண்டாகும் எ-று.

பாரடா விவன்கேட்ட காரியந்தான்
பக்குவமாந்தனத்தோடு பாக்கியங்கேட்டால்
சீரடாவிவனுக்கு ஐந்நூற்றுநாற்பது
சிவாசிவா கிடைக்குமென்று செப்புவாய்நீ
கூரடா குழவிகள்தா னறுக்குள்ளே
கொழுநனுக்குப் பாக்கியங்கள் கூறுவோம்யாம்
வாரடா மயேந்திரத்தின் பெருமையாலே
வகையான திருவையுட வள்ளல்தானே.

இ-ள். பார்க்க இவன் கேட்ட காரியங்கள் யாதெனில் பக்குவமாகத்தானே தனத்தோடும் பாக்கியங்கள் பெருகவுங் கேட்டான், இவனுக்கு ஐந்நூற்றிநாற்பதுபொன் சிவனருளால் கிடைக்கும். குழவிக்கு ஆறுவயதிற்குள்ளே கொழுந்தனுக்குப் பாக்கியம் கிடைக்கும் மயேந்திரத்தின் பெருமையாலும் திருவையுடைய பாலனும் எ-று. 17

தானென்ற விவன்பிறவி யோகவானய்
தருவான தேவரிலே யொருவனப்பா
ஊனென்ற வுட்கருத்து மிகவேயப்பா
உத்தமன்றன் தனசாலியாகி வாழ்வான்
வானென்ற விவன்குழவி யோகத்தாலே
வையகத்தி லில்லையடா வரிசைகேளு
கானென்ற கருணையடா கடவுளார்தான்
கண்டித்தபடி சொல்வான் கருணைகேளே.

இ-ள். மேற்கூறிய இவன் பிறவி யோகவானகும் தேவர்களிலும் இவனகும் உட்கருத்துடையவன்; தனசாலியாக வாழ்குவன்; இவனுடைய குழவியோகத்தினல் பூமியில் ஒருவரும் நிகரில்லாமல் வாழ்குவன். கருணைதானே கடவுளர் கண்டித்து சொன்னபடி சொல்வான் எ-று. 18

கேட்கவே யிவன்ருனும் சத்புருஷனுகும்
கேவலமாய்ப் பூமிகொள்வான் தனவானப்பா
ஆட்கவே ஆயுசுதா னெழுபத்தைந்தாம்
அப்பனே யிவனுக்கு வறிவுமெத்த
நாட்கவே யுமையவளும் இளையாள்தானும்
நலமாகப் பிரியாத விடையிருப்பார்
வாட்கவே திருவையுட யோகத்தாலே
வருமைதான் நீங்குமடா நாற்பத்தெட்டே.

இ-ள். கேட்கும்படியாக மேற்கூறியஇவன் சத்புருஷனுகும்; பூமியானது கொள்வன்; இவன் தனக்கு வயது எழுபத்தைந்தாகும்; அறிவுடையோனுக விருப்பன்; இவன்மனையில் உமையவளும் இலட்சுமியும் பிரியாமலிருப்பர்; அன்றியும் திருவையென்னும் ரேகையினுடைய யோகத்தால் வருமையானது நீங்கும் நாற்பத்தெட்டில் எ-று. 19

எட்டான விற்பனந்தான் அஞ்சுக்குள்ளே
ஏகாந்த மானபரஞ் சோதியப்பா
வட்டான குமரனைத்தான் பெற்றதேவி
வண்மையாம் பூஜைதனை மறக்கிடாதே
இஷ்டான சுகமெல்லாம் குறைக்குமப்பா
எடுத்திடுவான் புதுமனையும் இயம்பத்தானே
இஷ்டான பரமசுக மெல்லாந்தானும்
ஏகாந்தந்தானுக இருப்பான்பாரே

இ-ள் எட்டெழுத்தான விற்பனமாயும் ஐந்தெழுத்திற்குள்ளே ஏகாந்தமானப் பரஞ்சோதியாய் விளங்கி குமாரகுவாமியை பெற்றமாதாவான அம்பாளுடைய பூசையை மறவாமல் நாளும் பூசித்துவர இஷ்டார்த்தமானச்செல்வம் யாவும் குறையாமல் பெருகும்; புதுமனையானது எடுப்பான்; இஷ்டமான பரமசுகமெல்லாம் அனுபவித்தும் ஏகாந்தமாகத்தானே யிருந்துவாழ்குவான் எ-று. 20

பாரடா இவனொருவன் பத்தனுகும்
பண்பான சிவபூசை முடிக்கும்வள்ளல்
தீரடா இவனுக்கு மூன்றுகண்டம்
திசையாகச் சொல்லுகிறேன் தெரியத்தானே
ஆரடா இவனைப்போல் யோகவான்தான்
அன்பான பூமியிலே இல்லைமைந்தா
போரடா இவன்தானும் மகிழ்ச்சிபெற்று
பெரியவனுய் வளர்ந்திருப்பான் பேசுவீரே.

இ-ள். பார்க்கமேற்கூறிய இவன் ஒருவனே பத்தனாகும்; சிவபூசையை வழுவாமல் முடிக்கும் வல்லனாகுவான்; அன்றியும் இவனுக்கு மூன்று கண்டம் வருவதைச்சொல்லுகின்றேன்; இவனைப்போல்யோகவான் பூமியில்யாருமில்லை; இவனும் மகிட்சியானது பெற்று பெரியோனாகவளர்ந்திருப்பான் எ-று. 21

பேசுவீர்கோபால சாமிதானும்
பெற்றெடுத்த மைந்தனென்று பெருமையாச்சு
ஆசுவீர்ஆண்டவனார் உதவியாலே
ஆக்கிவிப்பார்தனவானும் ஐம்பதுக்குள்
கோசுவீர்பலனில்லா வருஷம்ஏழு
கொற்றவனை வதைக்குமடா கொடுமையாலே
வேசுவீர்காலமெல்லாம் யோகவாழ்க்கை
வேதாந்தகுரு உபதேசம்செய்வார்

இ-ள். பேசும்படியாக மேற்கூறியோனைகோபால சுவாமி பெற்ற மைந்தனென்றும் பெருமையானதுவாகியும் ஆண்டவனுடைய அருளினாலே இவனைத்தனவானாக ஆக்கிவைப்பார், வயது ஐம்பதுக்குள்ளும் அதிகபலனில்லாமல் ஏழுவருஷம் பாதைப்படும்படியாக வாதையானதுசெய்யும் காலமில்லாத காலத்தில் யோகவாழ்க்கையை வேதாந்தரான குருவானவர்வந்து உபதேசஞ்செய்வார் எ-று. 22

செய்யவே இன்னமும்தான் அசுபதிக்கு
செப்புகிறேன் இவனுடைய காரியம்தான்
வையகத்தில் இவனைப்போல் இல்லைமைந்தன்
மகத்தானயோகமடா மருவிக்கேளு
கையதனிற்கர்னனைப்போல் புலவர்க்கெல்லாம்
கனகமுதற்குறைவின்றி கனிவுற்றீவான்
ஐயமில்லாவேளைப்போல் இருப்பன்மைந்தா
அன்பானவாழ்க்கைநன்று அறிவுகூறே.

இ-ள். செய்யும்படியாக இன்னமும் அசுபதிக்கு இவனுடைய காரியங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக; இவனைப்போல் வையகத்தில் ஒருவருமில்லை; மகத்தான யோகமுடையவன் கேளும்; கர்னனைப்போல புலவர்கள் முதலானோர்க்கு கனகமோடும் பலவிதமான தானங்களும் கனிவோடுயீகுவன். ஐயமில்லாத வன்; வேளைப்போற்றுலங்குவன்; அன்பானவாழ்க்கை உடையவனென்று அறிவாகக்கூறுவாய் எ-று. 23

கூறிடவேயிவன்வாழ்க்கை யோகமெல்லாம்
குறிப்பாகச்சொல்லிவிட்டேன் கூர்மையாலே
நேரிடவேயிவனுடைய திசையும் கண்டம்
நேர்மையாய்ச் சொல்லுகிறே னினைவாய்க்கேளு

ஆறிடவே லக்கினத்தின் முறைகளெல்லாம்
அன்பாகச் சொல்லிவிட்டே னறிவினாலே
பாரிடவே யின்னமுந்தா னனேகரேகை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே.

இ-ள். கூறும்படியாக இவனுடைய யோகமும் வாழ்க்கையும் யாவும் குறிப்பாய்ச் சொல்லிவிட்டேன் அறியக் கூர்மையாகத் தானும்; இவனுடைய திசையுங் கண்டமும் தெரியச்சொல்லுவேன் தெளிவாகக்கேட்பீராக; அன்றியும் இலக்கணத்தின் முறைகள்யாவும் அன்பாகத்தானே அறிவினாலறிந்தமட்டும் சொல்லிவிட்டேன்; இன்னமும் அநேக ரேகைகள் பக்குவமாகத்தானே சொல்லுகிறேன் கேட்பாயாக எ-று. 24

## பஞ்சவர்ன ரேகையின் பலன்.

கேளப்பா பஞ்சவர்ன ரேகைமைந்தா
கேவலமா மதின்மகிமை பெரிதேயாகும்
நாளப்பா யிவன்கையிலே யிருக்குமாகில்
நன்மைபெற்ற மைந்தனைத்தா னுடிச்சொல்வேன்
வாளப்பா விவன்தானு மாராக்கெர்ப்பம்
வன்மையுள்ள வில்லறத்திற் பிறந்தானன்றோ
ஆளப்பா மாதிவார விரவுதன்னில்
அன்பான திதியேகா தசியுமாமே.

இ-ள். கேட்க பஞ்சவர்ன ரேகையானது யிருக்கில் அதின் மகிமை பெரிதாகும்; அவ்விதரேகை இவன்கையி லிருக்குமாகில் அவனுக்குண்டாகும் நன்மையைச் சொல்வேன். இவன் ஆறுவது கெர்ப்பமாகும்; வன்மையுள்ள இல்லறத்திற்பிறந்தோனாகும்; ஆதிவாரம் இரவில் திதி ஏகாதசியாம் எ-று. 25

ஆமென்ற விவனுடனே பிறந்த பேர்கள்
அப்பனே யைந்துமக்க ளொன்றுபெண்ணும்
வாமென்ற வலியதொரு வீட்டிலேதான்
வகையான பூரமதி லிரண்டாங்காலம்
ஓமென்ற உட்பொருளே யறியும்வள்ளல்
உத்தமன்தான் தனசாலி யாகிவாழ்வான்
காமென்ற காமியங்க ளுந்தவத்தான்
காட்சியுள்ள வழகியநன் மைந்தன்றானே.

இ-ள். ஆமெனும்படியாக இவனுடன் பிறந்தபேர்கள் ஆண் ஐந்தாம் பெண் ஒன்றாகும். வலியதொருவீட்டில் பிறந்தவனிவன்; பூர நட்சத்திரத்தில் இரண்டாங்காலில் வந்த புதல்வனிவனாகும்; அந்தரங்கமானப் பொருள்களை யறிகுவன்; தனசாலியாக வாழ்குவன்; காமியங்களுள்ளவன்; காட்சி பெருகும்படியான அழகுடைய மைந்தனாகும் எ-று. 26

மைந்தனெனு மிவன்யோக மாறுதல்போல்
மகத்தான தாய்தந்தை வைத்துவாழ்வான்
ஐந்தெனு மாறுபே ருடப்பிறப்பாம்
அன்பான பாலகன்தான் மூன்றும்பேராம்
விந்தனெனும் விற்றெழிலும் விநோதவித்தை
விதமான வேதங்கள் படிப்பான்பாரு
சுந்தரம்போற் பிள்ளையுந்தான் யோகவானும்
சுசிகரமு முள்ளவன்தான் குழந்தானே.

இ-ள். மேற்கூறிய இந்த மைந்தன் யோகம்மாறுதல்போல் மகத்தாகித் தாய்தந்தையைவைத்து வாழ்குவான். ஆறுபேருடன் பிறந்தோனுகும்; அதில் மூன்றுவதுப் பிள்ளையிவனுகும; இவன் விந்தையாகிய விற்றெழிலும் விநோத வித்தையும் வேதங்களும் படிப்பான்; சுந்தரர்போல் யோகமுடைய சுசிகரனுமாகும்.

தானென்றவிவன்வயது பனிரண்டுக்குள்
தருவான விவாகமது வாச்சுதப்பா
கானென்ற காணிக்கை யோகவானும்
காட்சிசொல்வே னிவன்வயதோ வைம்பத்தாறு
ஊனென்ற விவன்வீட்டி லனேகபாக்கியம்
உற்றதொரு மைந்தனுக்குக் குழவிரெண்டாம்
பானென்ற பஞ்சகர்த்தா வுதவியாலே
படும்பாடு வொன்றுமில்லை பண்பனுக்கே.

இ-ள். மேற்கூறிய இப்பாலனுக்கு வயது பனிரெண்டுக்குள் விவாகமானது முடியும். யோகவானுகயிருப்பன் இவன்வயது அன்பத்தாறுகும்; இவன்வீட்டில் அநேக பாக்கியங்கள்பெறுகும்; சந்ததி இரண்டுண்டாகும்; இவனுக்கு பஞ்சகர்த்தாக்களின் அருளால் கஷ்டங்கலில்லையாம் எ-று.

28

பண்பான விவனுக்குக் கண்டமைந்து
பாங்காக வருமென்று பரிந்துசொல்லு
நண்பான விவன்வயது பதினேழாண்டு
நலமான மாரிகெண்டம் நடந்ததப்பா
உண்பான விவன்வயதோ ரிருபதுக்குள்
உற்றதொரு நாய்கடிக்கு மாடுபாயும்
வண்பான விவன்வயதோ ரிருபத்தெட்டில்
வரிசையாய் வியாதிகண்டம் வந்ததன்றே.

இ-ள். பண்பாகு மிவனுக்கு கண்டம் ஐந்துண்டாகும்; அதாவது இவனுக்கு வயது பதினேழில் அம்மையால் கண்டம்நேரும்; வயது இருபதுக்குள் மாடானது பாயும்; நாயானது கடிக்கும்; வயது இருபத்தெட்டில் வரிசையாகத்தானே வியாதியினுல் கண்டம் வந்தணுகும் எ-று.

29

அன்றெனவே யிவன்வயது முப்பத்திரண்டில்
அப்பனே சத்துருவால் மெலிவான்பாரு
குன்றெனவே யிவன்வயது நாற்பத்தஞ்சில்
குலமகனுநீராலே மெலிந்தான்பாரு
நன்றெனவே யிவன்வயதோ ரன்பத்தாறில்
நலமான சக்கரத்தி னமைப்பினாலே
இன்றெனவே யிவன்தானு மிறப்பானப்பா
இயல்பான சக்கரத்தின் அமைப்புதானே.

இ-ள். மேற்கூறியோனுக்கு வயது முப்பத்திரண்டில் சத்துருக்களால் மெலிகுவன்; வயது நாற்பத்தைந்தில் சலத்தினால் கண்டம் நேர்ந்துமெலிகுவான்; வயது அன்பத்தாறில் நலமாகிய சக்கரத்தின் வலுவாலும் மகிமையாலும் இவன் மரணமாகுவன் எ-று. 30

தானெனவும் பஞ்சவர்ண ரேகை அப்பா
கருவான வாழ்க்கைமுதல் யோகமெல்லாம்
வானெனவும் திசையோகம் கர்மமெல்லாம்
வளமையுள்ள கண்டமுதல் வரிசைசொன்னேன்
நானெனவும் நாயகியாள் சொன்ன வாக்கியம்
நயந்துநின்று கேட்டவர்க்கும் மோட்சமாச்சு
வானெனவும் தேவர்களும் முனிவரெல்லாம்
வணங்கிநின்ற உமையாதன் வண்மையாமே.

இ-ள். தானென்னும்படியாகப் பஞ்சவர்னரேகையின் யோக வாழ்க்கையெல்லாம் அத்துடன் திசையோகமும் நன்மைதன்மையும் கெண்டமுதலானதும் வரிசையாகச்சொன்னேன். இது நானென்னும்படியாய் நாயகியாகிய பரமேஸ்வரிசொன்ன வாக்கியத்தின்படியாம். நயந்துக்கேட்டவர்க்கு மோட்சமாகும்யென முனிவர்களும் தேவர்களும் கூடிவணங்கிநின்ற உமையவள் பாதத்தையும் எ-று. 31

## அன்ன ரேகையின் பலன்.

ஆகவே இன்னமும்தான் மைந்தாசொல்வேன்
ஆச்சரிய முன்னதொரு ரேகைமைந்தா
ஆகவே அன்னத்தின் ரேகையுண்டு
அப்பனே சொல்லுகிறேன் அறியத்தானே
தாகவே பிரம்மவரை உள்ளடியில்மைந்தா
தகையான முக்கோணம் திருமுண்டாம்
ஏகவே இருபுள்ளி ரெண்டுரேகை
என்னசொல்வேன் மைந்தனிட இயல்புதானே.

இ-ள். ஆகும்படியாக இன்னமுஞ்சொல்வேன் ஆச்சரியமான தோர் ரேகை; அதாவது அன்னத்தின் ரேகையென உண்டு; அதை அறியச் சொல்லுகிறேன் கேட்பாயாக; பிரமவரையின் அடியில் முக்கோணமாகக் கிறுண்டாம் அத்துடன இரண்டு புள்ளியும், இரண்டு ரேகையுமுண்டாம் இவ்வாருள்ளப் பாலனு டைய யியல்பைச் சொல்வேன் எ-று. 32

தானடா இவனுக்கு யோகமெத்த
தருவான அன்னத்தின் பாலரேகை
வானடா இவன்பிறந்த மனையிலேதான்
வளமையில்லா வெறுமையால் மெலிந்தான்பாரு
ஊனடா இவன்பிறந்த பின்புமைந்தா
உற்றதொரு செல்வமுந்தான் உயர்ச்சிஆச்சு
பானடா பரமகுரு அருளாலேதான்
பாக்கியங்கள் வந்ததென்று பலிவாய்க்கூறே.

இ-ள். தானாகிய இவனுக்கு யோகமானது மெத்தவுண்டாம் அன்னத்தின் பாலரேகையினால்; அன்றியும் இவன் பிறந்த மனை யில்வளமையானதுயில்லாமல்வெறுமையினால் மெலிந்தவனாகும்; இவன் பிறந்த பின்பு செல்வமானது உயர்ச்சியாச்சு அது பரம குருவின் அருளால் இப்பாக்கியம் வந்ததெனக் கூறவேண்டும்.

கூறிடவே இவன்பிறந்த வாரம்தானும்
கூர்மையாய்ச் சொல்லுகிறேன் சனிவாரம்தான்
பாறிடவே பகல்வேளை உச்சிதன்னில்
பண்பான துதிகையுடன் சித்திரைஆகும்
ஊறிடவே உட்கருத்து உள்ளபாலன்
உற்றதொரு விசாகநாள் ரெண்டாங்காலில்
வாறிடவே மைந்தன்தான் ஓர்மனையில்மைந்தா
மண்பார்த்துப் பிறந்ததில் ஐயமின்றே.

இ-ள். கூறயிவன் பிறந்தவாரம் சனிவாரமாகும்; பகல்வேளை யான உச்சிகாலமாகும்; திதிதுதிகையாகும்; சித்திரைமாதம் சுப மாக இதிற் பிறந்த யிவன் உட்கருத்துடையோனாகும்; விவாக நட்சத்திரம் இரண்டாங்காலாகும்; ஓர்புரத்திமனையில் பிறந்த மைந்தனாகும்; பூமியைப் பார்த்துவந்தவன் ஐயமிலான் எ-று. 34

ஐயம்இல்லாமல் இவன் பிறந்தான் ஐயா
ஆச்சரியம் லக்கினத்தில் வியாழம்சுக்கிரன்
வையகத்திற் பணங்களைத்தான் மிகவேதேடும்
மண்ணுலகில் வேளாண்மை மிகுதிசெய்வான்
பையஇவன் பிரபலங்கள் ஆவான்பாரு
பார்வதியாள் கடாட்சத்தால் பாக்கியம்சேரும்
உய்யவுமே உறைமுறைதான் மெத்தவுண்டு
உண்மையாக இப்பலன் நடக்குந்தானே.

இ-ள். ஐயமில்லாமல் இவன் பிறக்கும்பொழுது இலக்கினத்தில் வியாழனும் சுக்கிரனுமிருந்தால் இன்னோன் வையகத்திற் பணம் காசு மிகவும் தேடுவான்; வேளாண்மை மிகுதியாகச் செய்குவன்; அதிக பிரபலமுடையோனகுவன், பார்வதியின் கடாட்சத்தால் பாக்கியஞ்சேரும் உறவின்முறையார்கள் மெத்தவுண்டு. உண்மையாகத்தானே சொன்ன இப்பலன் உறுதியாக நடக்கும் எ-று. 35

உறுதியாம் இவன்வயதோ ரைந்திலேதான்
உற்றதோ ரிவன்தானும் தோளில்அப்பா
பருகியாய் கிழங்குகளை மிகவேதோண்டிப்
பக்குவமாய் நிதியொன்று எடுப்பான்பாரு
சிறுதியா யிருந்தவொரு வாழ்க்கைதானும்
சிற்பாத்தின் பெருமைபெற்று வாழ்ந்தார் பாரு
கருதியாயிளை யவளுங் கருணைகூர்ந்து
காடாட்சித்தா னிவனுக்குக் கருணைதானே.

இ-ள். உறுதியாகத்தானே மேற்கூறிய இவன் வயது ஐந்தில் கொல்லையில் கிழங்குகளைத் தோண்டிக்கொண்டு வருகையில் அங்கு நிதிப்புதையல் கண்டெடுப்பான்; எடுத்தபின் சிறுகுடியாக வாழ்ந்தவர் சிற்பாத்திற் பெருமையானது பெற்று வாழ்குவர்; இளையவளாகிய இலட்சுமியானவள் கருணைக்கூர்ந்து இவன் மனையில் பொருந்தி வாழ்குவாள் எ-று. 36

கருணையடா விவனுக்கு வயதோமைந்தா
கடாட்சித்த வாண்டெழுபத் தைந்தாகும்
வருணையடா விவனுடனே பிறந்தார்மூவர்
வண்மையுள்ள மக்களென்று வரிசைகூறு
தருணையடா தங்கையொன்று பிறப்பாள்மைந்தர்
தாழ்வில்லாத் தாய்தந்தை வைத்துவாழ்வான்
கருணையடா சற்சனனாய் வேதம்பார்ப்பான்
சற்குருவாய் சிவபூசை செய்வானன்றே.

இ-ள். கருணையாகத்தானே மேற்கூறியோனுக்கு வயது எழுபத்தைந்தாகும் இவனுடன் பிறந்தோர் மூன்றுபேராகும். அவர்களுடன் தங்கையானவள் ஒருத்திப் பிறப்பாள்; தாழ்வில்லாமற் படிக்குத் தாய்தந்தையை வைத்துக் காப்பான்; சற்சனனாக வேதங்களைப் பார்ப்பான்; சற்குருவாக சிவபூசை செய்குவான் எ-று.

அன்றெனவே யிவனுக்குக் கண்டம்நாலு
அற்பமாய்த் திருமடா ஆய்ந்துபாரு
நன்றெனவே யிவனுக்கு நீராலொன்று
நன்றில்லாச் சத்துருக்கள் வாழ்கவொன்று

குன்றெனவே அக்கரமமாய் முப்பதாமாண்டு
கூர்மையாங் கடியதனுற் கண்டமொன்று
வன்றெனவே யிவன்வயதோ ரெழுபத்தாறில்
வரிசையாஞ் சக்கரத்தின் வண்மைதானே.

இ-ள். அன்றெனமேற்கூறியோனுக்குக் கண்டம் நாலு சம்பவிக்குமாம்; அது அற்பமாகத் தீரும்; அதாவது சலத்தினுல் ஒன்றும்சத்துருக்கள்வாதை ஒன்றும் முப்பாதம்வயதில் கடியினுல் கண்டமொன்று வயது எழுபத்தாறில் வரிசையாகும் சக்கரத்தின் வண்மைகேளும் எ-று. 38

தானடா இவன்தானும் பிறந்தவாழ்க்கை
தகமைசொல்லி விட்டேன்காண் தாழ்வில்லாமல்
ஊனடா திசையோகம் வாழ்க்கைகண்டம்
உத்தமருக்குச் சொல்லிவிட்டேன் வுண்மையாக
வானடாவயசுமுதல் தப்பாதெல்லாம்
வாகான இதன்விபரம் வகுத்துச் சொன்னேன்
ஏனடா இன்னமுண்டு மைந்தாகேளு
எடுத்துரைப்பேன் பிரமமதை இசைந்துகேளே.

இ-ள். தானக இவன் பிறந்த வாழ்க்கையின் தகமையைச் சொல்லிவிட்டேன் தாழ்வானது ஒன்றுமில்லாமலும் அத்துடன் திசையும்யோகமும் வாழ்க்கையாகியக் கண்டமும் உத்தமர்களாகியோர்களுக்குச் சொல்லிவிட்டேன் உண்மையாகத்தானே; இது வயது முதலாகத்தப்பாதுஎன விபரமாகவகுத்துச்சொன்னேன்; அன்றியும் இன்னமுண்டு அந்தப்பிரமத்தை எடுத்துரைப்பேன் மனமானதுகொண்டு இசைந்துகேளும் எ-று. 39

கேட்கவேநந்தீசர் பிரமாவோடு
கேவலாம்கும்பமுனி ரிஷிகளெல்லாம்
வாட்கவே வானோர்கள் முனிவரெல்லாம்
வண்மையாய்க் கேளுங்கள் வரிசையாக
நாட்கவே லோகத்தில் நடக்கும் வாழ்வு
நான்சொன்னபடியதுபோல் நடக்கும் வாழ்வு
ஆட்கவே அனைவோரும் சந்தோஷித்து
அன்பான மனோன்மணியைத் தொழுதபோதே.

இ-ள். கேட்க நந்தீசரும் பிரமாவும் இன்னும் கும்பமுனியோடு ரிஷிகளும் வானோரும் முனிவர்களும் வண்மையாக இதனைக் கேளுங்கள். உலகத்தில் நடக்கும் வாழ்வு நான் சொன்னபடி நடக்கும்; அவ்வாழ்வுயென அப்போது அனைவரும் சந்தோஷித்து அன்பாகத்தானே மனோன்மணியாளைத் தானே தொழுதபோதே எ-று. 40

போதென்று இவர்களெல்லாம் போற்றிக்கொள்ள
புதுமையுள்ள உமையவளும் பெருமைசொல்வாள்
ஆதென்ற அஷ்டகன்மம் எட்டுரேகை
அன்பான திசைபாலரேகையைந்தா
தானென்ற சங்கிணுட பாலியென்பார்
தருவான ரேகையிட மார்க்கங்கேளு
காதென்ற காட்சியடா ஏகருட்சம்
கருதுகிறேன் இதன்விபரம் காட்சிகேளே.

இ-ள். போமென்று இவர்களெல்லோரும் போற்ற நிற்க அப்போது உமையவளும் பெருமையாகச் சொல்வாள். அஷ்டகன்மமாகிய எட்டு ரேகை அதாவது திசை பாலரேகை அல்லது சங்கணிடரேகையென்பார், அதின் மார்க்கங்களைக்கேளும், காட்சியாக விளங்கும் ஏகருட்சமாகும்; இதன் விபரஞ் சொல்லுகிறேன்கேளும்

கேளடா இவன்கையிலே மால்விரல்தன்னில்
கேவலமாய் எட்டுப்புள்ளி ரெண்டுரேகை
ஆளடா இருகீற்றும் ஐந்துகீற்றும்
அன்பாக இருக்கும் அதின் அருமைகேளு
வாளடா இவன்கையிலே இருக்குமாகில்
வன்மையுள்ள வரிசைகளைக் கண்டுசொல்லு
பாமடா ஒன்றுமில்லை இவன்யோகம்மைந்தா
பக்குவமாய் திசையோகம் சொல்லுவேனே.

இ-ள். கேட்பாயாக: இவன்கையின் மால்விரல் தன்னில் எட்டுப்புள்ளியும் ரெண்டுரேகையும் இரண்டுகீற்றும் ஐந்துகீற்றும் அமர்ந்திருக்கும்; அதின் அருமையைக்கேளும், அவ்விதரேகைக் கையிலிருக்குமாகின் அதின்வன்மைகளைக் கண்டு சொல்லவும் அன்றியும் ஒன்றுமில்லை; இவன் யோகம் ஆகிலும் இவன் திசை யோகத்தைச் சொல்வேன் எ-று. 42

சொல்லுவேன் இவன்பிறந்த யோகமைந்தா
சொற்பெரிய பதினறுபிள்ளையாகும்
அல்லுவேன் இவன் பதினறுபிள்ளை
அன்பாகப் பெற்றிவன்தான் வாழ்வானப்பா
நல்லுவேன் இவனுடனே பிறந்தோராறு
நலமான வீட்டிலேதான் பாக்கியமுண்டாம்
வெல்லுவேன் வில்தொழிலும் விநோதவித்தை
விசிதமுள்ள திசையோகமாகும்பாரே.

இ-ள். சொல்வேன் இவன் பிறந்த யோகம் பதினறுபிள்ளையாகும்; இப்பதினறு பிள்ளையும் பெற்று அன்பாகத்தானே வாழ்குவன். இவனுடன் பிறந்தோர்கள் ஆறுபேயராகும்; நலமாகத் தானே வீட்டில் பாக்கியமுண்டாகும். வில்தொழிலும் விநோத வித்தையும் விசிதமுள்ளத் திசையோகத்தில் ஆகும் பார்க்கவும்.

ஆகுமடா இவன்பிறந்த நாளுங்கோளும்
அன்பான திசையோகம் ஆய்ந்துசொல்வேன்
வாகுமடா திசையுட னவிட்டம் தன்னில்
வரிசையாய் வியாழமதில் மனிதனாகும்
வாகுமடா திசைகன்மம் யோகவாழ்க்கை
மைந்தனே சொல்லுகிறேன் வண்மையாக
வேகுமடா வறுமைமுத லிடர்களெல்லாம்
வேதாந்த நல்லறிவு விளங்குங்கேளே.

இ-ள். ஆக இவன் பிறந்தநாளும் கோளும் திசையும் யோகமும் ஆய்ந்து சொல்வேன் கேட்பாயாக: அவிட்ட நட்சத்திரம் வியாழக்கிழமையில் ஜெனித்தவன்; திசை கன்மயோக வாழ்க்கையைச் சொல்லுகிறேன் வண்மையாகத்தானும்; தன்னைச் சூழ்ந்த வறுமையும் இடர்கள் யாவும் நீங்கி வேதாந்தமோடு நல்லறிவுவாய்க்கும் எ-று. 44

கேளப்பா அஷ்டதிக்கு ரேகைகண்டால்
கேவலமாய் இவனுக்கு லக்கினத்தில்
வாளப்பா இவனுக்குக் கிரகம்நாலு
வண்மையாய் உச்சமுண்டு வரிசைசொல்வேன்
நாளப்பா இவனுக்குத் தேவி ஒன்று
நலமாக முப்பத்தி ரண்டிலேதான்
ஆளப்பா யிவன்வயதோ ரெண்பத்தைந்தில்
அன்பான சக்கரத்தின் அமைப்புகேளே.

இ-ள். கேட்பாயாக: அஷ்டதிக்கு ரேகையானதைக் கண்டால் அவன் றனக்கு இலக்கினத்தில் கிரகம்நாலு உச்சம்பெற்று நிற்கும். இவனுக்குத் தாரம் ஒன்று; இவனுக்கு வயது முப்பத்தி ரெண்டில் விவாகமாகும்; இவன் வயது எண்பத்தைந்தில் அன்பாகிய சக்கரத்தின் அமைப்பு கேளும் சொல்வேன் எ-று. 45

கேளெனவே இவனுக்குத் திசைகேசரியோகம்
கேவலமாய்ச் சகடையது நடக்கும்பாரு
நாளெனவே நாயகனு மனேகமான
நலமான பூமிகள்தான் கொள்வான்பாரு
வாளெனவே வர்னமுள்ள ரூபனாகும்
வஞ்சனைகள் கொலைகளவு இல்லைமைந்தா
தாளெனவே தாழ்ச்சியில்லா மைந்தனுக்குத்
தைரியவான் இவன்யோக தாஷ்டிகனென்னே.

இ-ள். கேட்பாயாக மேற்கூறியோனுக்கு திசைக்கேசரி யோகம் சகடையாக நடக்கும் இவன் அநேகமான பூமிகளைக் கொள்வன் வர்னமுடைய ரூபமுள்ளவனாகும் வஞ்சனைகொலை களவு இவைகள் புரியான் தாட்சியில்லாத மைந்தனாகும் தைரியவான் யோகதாஷ்டீகன் எ-று. 46

தாட்டிகனும் மயேந்திரத்தில் முக்கால் உண்டாம்
தைரியவான் இவனுக்கு நிகரோ இல்லை
ஆட்டிவைப்பான் லோகமெல்லாம் இவன்சொல்கேட்கும்
அண்டரண்ட புவனமெல்லாம் அடக்கும்வள்ளல்
நாட்டிவைப்பான் நாயகனு மீசன் தன்னை
நன்மைபெறப் பிரதிஷ்டை பண்ணுவிப்பான்
வாட்டமில்லா யோகமடா வண்மையாக
வரிசையாய்ச் சொல்லிவிட்டேன் வண்மைகேளே

இ-ள். மேற்கூறியோன் தாஷ்டீகனுகினும் மயேந்திரத்தில் முக்கால் உண்டாம்; தைரியவான். இவனுக்கொருவரும் நிகரில்லை. உலகமுழுதும் ஆட்டிவைப்பான். இவன்சொல் கேட்கும்படியாகச்செய்வான். அண்டரண்டப் புவனமெல்லாம் அடங்கும் வள்ளலாகும். ஈஸ்வரனைப் பூசைசெய்து பிரதிஷ்டைசெய்து வைப்பான்; லோகமாதியந்தமும் வாமட்டாகத்தானே சொன்னேன் வண்மையாகக் கேளும் எ-று. 47

## ஐவிந்த ரேகையின் பலன்.

கேளடா இன்னம் ஒரு ரேகை உண்டு
கேவலமாய்ச்சொல்லுகிறேன் கேளுகேளு
ஆளடா ஐவிந்தம் ரேகை ஒன்று
அப்பனே சொல்லுகிறேன் அறிவாய்க்கேளு
நாளடா நடுவரையில் ரெண்டுபுள்ளி
நலமாகு முக்கவரின் நவினமாங்கேள்
தாளடா தாழ்வில்லா யோகவானும்
தர்ச்சினனும் பெருமைபெற்று வாழ்வான்பாரே.

இ-ள். கேட்பாயாக; இன்னம் ஒருரேகையானதுவுண்டு; அதன் பலன் சொல்லுகிறேன் கேளும். அதாவது ஐவிந்தரேகை ஒன்று அது நடுவகையில் இரண்டு புள்ளியும் முக்கவரின் நவினம் போல் தோன்றும்; அவ்விதரேகையுள்ளவன் தாழ்வில்லாத யோகவானுகும் பெருமையும் பெற்று வாழ்வன் எ-று. 48

பார்க்கவே இவன்தானும் மூன்றும் பேரும்
பக்குவமாம் சொல்வதென்ன பரித்துகேளு
ஏர்க்கவே ஆணிவனும் பெண்ணேரெண்டு
இயல்பாகப் பிறந்ததின்பின் னிவன்பிறந்தான்
வார்க்கவே இவன்பிறந்த பின்புமைந்தா
வண்மையாம் வறுமையெல்லாம் போச்சுதன்ரு
கார்க்கவே தேவிபிடக் கடாட்சத்தாலே
கருதுதுவாதசதி மதியாம் வாரம்தானே

இ-ள். பார்க்க இவன் மூன்றுவதுப்பேறுகும். அதில் பெண் இரண்டு ஆண் இவன் ஒன்றுகும், பின்னுகப் பிறந்தவன் இவன் பிறந்த பின்பு வறுமையாவும் நீங்கிப்போச்சுதாம்; பிறந்த திவா தசி வாரம் திங்கட்கிழமையாம் எ-று. 49

வாரம் என்ற புனர்பூசம் ரெண்டாங்காலம்
வண்மையாய்ப் பிறந்ததிவன் மாநிலத்தில்
தாரம் என்ற இவனுக்கு ரெண்டுதாரம்
தன்மையாய் முடியுமென்று தகைமைசொல்வேன்
பாரம் என்ற இவன்வயதோ இருபதுக்குள்
பண்பான விவாகமது ஆகும்பாரு
சாரம் என்ற இவன்வயது நாற்பத்தாறு
சற்குணனும் இறந்திடுவான் சார்புதானே.

இ-ள். வாரமாகிய புனர்பூசம் இரண்டாங்காலாகும்; வண்மை யாகத்தானே இவன் பூமியிற்பிறந்தோனுகும். இவனுக்கு இரண்டு தாரமாகும்; வயது இருபதுக்குள் விவாகமானது ஆகும். வயது நாற்பத்தாறில் சற்குணனுகிய இவன் மரணமாகிவிடுவான் எ-று

தானென்ற இவனுக்குக் குழந்தை மூன்றும்
சற்குணமாய்ப் பிறக்குமென்பர் சான்றோர்தாமும்
வானென்ற இல்லறத்தில் அனேக பாக்கியம்
வண்மையாய் உண்டாகும் வரிசைகேளு
ஆனென்ற ஐங்கரனர் உதவியாலே
ஆனந்த யோகமடா அப்பாகேளு
ஊனென்ற உட்கருத்து மிகவே உண்டாம்
உண்மையாய்ச் சொல்லிவிட்டேன் உறுதிதானே

இ-ள். இவனுக்குக் குழந்தை மூன்றுகும்; சற்குணமாகப் பிறக்குமெனப் பெரியோர் கூறினர். அன்றியும் இல்லறத்தில் அனேகபாக்கியம் வரிசையாக உண்டாகும். ஐங்கரனுடைய உதவியினுலே அநந்தமாகிய யோகம்வாய்க்கும்; உட்கருத்துடை யவனுகுவன்; இப்பலன் உண்மையாகத் தானே சொல்லிவிட் டேன் எ-று. 51

## கடோற்கயன் ரேகையின் பலன்.

உறுதியப்பா இன்னம் ஒரு ரேகைமைந்தா
உண்மையாய்ச் சொல்லுகிறேன் உறுதிகேளு
பருதிமதியுள்ளளவுங் கீர்த்தியோகம்
பார்த்திபனுமேலவர்கள் பணிந்துநிற்பார்

பருதியென்றகடோற்கயன்தன் ரேகையைத்தான்
பாவகமாய்ச்சொல்லுகிறேன் பண்பாய்மைந்தா
திருதியென்றசுண்டுவிரற் கீழேமைந்தா
திரமாகஇருக்குமடா செப்பக்கேளே

இ-ள். உறுதியாகத்தானே இன்னமொருரேகையைக்கேட்பாய்; சூரியன் சந்திரன் உள்ளவும் பார்த்திபனுகையிவனை மேலோர்கள் பணிந்து நிற்பர். பருதி யென்னும் கடோர்கயன் ரேகையைச் சொல்கிறேன் அதுசுண்டுவிரற்குகீழே திரமாகத்தானேயிருக்கும் எ-று. 52

கேட்கவேஇருபுள்ளி இரண்டுகீறு
கேவலமாம்விரல்தனிலே ஏறிநிற்கும்
ஆர்க்கவேகடோற்கயன்தான் இருந்துதானால்
அன்பாகசொல்லுகிறேன் ஆய்ந்துதானே
வார்க்கவே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசையாக
ஏர்க்கவே ஏகாதசி இயன்றநாளில்
என்னவே அஸ்தம் என்ற இயல்பதாமே

இ-ள். கேட்பாயாக; மேற்கூறிய ரேகை இரண்டு புள்ளியும் இரண்டு கீறுவிரலில்யேறிநிற்கும்; அவ்விதரேகையானது இருக்குமாகின் அதின் பலன் ஆய்ந்துசொல்லுகின்றேன். இவன்பிறந்த யோகவாழ்க்கையாவும் வரிசையாகசசொல்லுகின்றேன்; திதி ஏகாததி அஸ்த நட்சத்திரம் இன்னமுங்கேட்பாயாக எ-று. 53

தாகவே இவன்பிறந்தான் செவ்வாய்தன்னில்
தகைமையுள்ள மைந்தனுக்குச் சார்புகேளு
ஏகவே யிவன்பிறந்த திரவேயாகும்
ஏறமுள்ள நாழிகையோ இருபத்தைந்தாம்
வாகவேவர்ணிப்பு உள்ளமைந்தன்
மன்மதன்போல் அழகனடா வரிசைகாண்கில்
காகவேயிவன்பிறந்த ஜந்தாமாதம்
கருணையாம் பிதுருதனம் எடுப்பான்றானே

இ-ள். மேற்கூறியோன் செவ்வாய்க்கிழமையில் ஜெனனமானவன்; அவன்பிறந்த சார்பு நாழிகையோ இருபத்தைந்தாகும்; களிப்புடையமைந்தன்; மன்மதனைப்போல் அழகுடையவன்; இவன்பிறந்த ஜந்தாமாதம் பிதுருடைய தனமெடுப்பான்.

எடுத்திடவே இவன்பிதா வழியிற்போகும்
ஏற்றமுள்ள விருட்சமொன்று அடியோடுவீழ
கடுத்திடவே மாவேறிற் சிளம்பிமேலே
கனமாக நிதியொன்று கண்டுமைந்தன்

மடுத்திடவே மரவேரிற் கிளம்பிமேலே
வண்மையாம் மனையில்வந்து பெரியோனுனன்
இடுக்கமில்லா மனையிலவன் வாழ்வான்பாரு
இயல்பானமைந்தனுக்கு இனஞ்சொல்வேனே.

இ-ள். எடுக்கினும் மேற்கூறியோன் பிதாவானவன் வழியிற் போகும்போது விருட்சமானது ஒன்று அடியோடேசாய்ந்து வீழ்ந்து விருட்சத்தின் வேர் மேலேகிளம்ப அங்கு நிதியானது ஒன்றுகண்டு அதையெடுத்துவந்து மனையில்வைத்துக்கொண்டு பெறியோனுகியும் இடுக்கமானது சற்றுமில்லாமல் வாழ்குவன்; இன்னமும் எழிலாகத்தானே மைந்தனுக்கு இனம் சொல்வேன் எ-று. 55

சொல்லுவேன் யிவனுக்குத் தாரமொன்று
சொற்பெரிய யிவன்வயதோ ரெழுபத்திரெண்டாம்
அல்லுவேன் இவனுக்குப் பாலரைவர்
அன்பாகப் பிறக்குமென்றே அறிந்துகேளு
நல்லுவேன் யிவனுக்கு முன்னோர்சாபம்
நலமாகச் சாபமதிற் பட்டான்மைந்தன்
எல்லுவேன் யிவன்சாபம் பொல்லாச்சாபம்
இயல்பாகத் தீர்க்கவென்று இனிதுகூறே.

இ-ள். சொல்லும் படியாக மேற்கூறியோனுக்குத் தாரமொன்று வயது எழுபத்திரண்டாகும்; சந்ததி ஐந்தாம். இவனுக்கு முன்னோர்சாபம் உண்டாம்; அதுவும் பொல்லாதாம், அதுதீராதென்றுங் கூறவும் எ-று. 56

## குவண்ட ரேகையின் பலன்.

கூறிடவே குவண்டையிட ரேகைமைந்தா
குணமாகச் சொல்லுகிறேன் கூர்ந்துகேளு
பாறிடவே நுனிகளெல்லாம் சங்குதிருகுபோலும்
பண்பாக யிருந்தாக்கால் பகரக்கேளு
காறிடவே இவன்கையிலே காசுதங்கும்
கனத்தபண்டம் இவன்கையிலே யிருக்கும்பாரு
பாறிடவே திசையுள்ள மைந்தனென்று
பெற்றியுடன் சொல்லுகிறேன் பெருமையாச்சே.

இ-ள். கூறிடக் குவண்டரேகையைச் சொல்வேன் கேளும். அதுஎவ்விதமிருக்குமெனில் நுனிகளெலாம் திருகுபோலும் பண்பாகத்தானே இருக்குமாகின் அவன் தனக்குக் கையில்காசுதங்கும். கனமானபண்டங்கள் இருக்கும்; திசையுள்ள மைந்தனுகுவன்; இவனுடைய பெருமையை இன்னம் சொல்வேன் எ-று. 57

ஆச்சப்பா குவண்டையுட ரேகைதானும்
அன்பான விரல்நுனியில் இருக்கும்பாரு
பேச்சப்பா இவன்கையிலே காசுண்டப்பா
பிரபலமாய் இருக்காது பேணிப்பாரு
வாச்சப்பா வைரமணி ரேகைதானும்
வளமாகச் சொல்லுகிறேன் கேளுகேளு
காச்சப்பா காச்சு நடா கருணையாலே
கைகண்ட வித்தையடா கருணைகூறே.

இ-ள். ஆகவும், குவண்டையென்னும் ரேகையானது விரல்களின் நுனியில் இருக்கும். அவ்விதமிருப்போன் கையில் காசானது உண்டாம். பிரபலமாகயிராது; அன்றியும் வைரமணிரேகையைச் சொல்லுகிறேன் கேளும்; காசானது காய்த்தாற்போல் கருணையானது பெருகும், கைகண்ட வித்தையாமெனக் கருணை கூறுவாய் எ-று. 58

கருணைவைத்து வைரமணிரேகைதானும்
கார்குழலா மாதுமையாள் கருணைகூர்வாள்
வருணைவைத்து வைரமணி ரேகைதானும்
வயம்பெறவே நற்கரத்தில் இருக்கும்பாரு
அருணைவைத்துப் பிறந்தமைந்தன் இவனையப்பா
ஆச்சரியம் பெற்றமைந்தன் அதிகம்பாரு
திருணைவைத்து தேவரிலே ஒருவனப்பா
திசையோகம் வல்லமைதான் செப்பொணுதே.

இ-ள். கருணையாக வைரமணி ரேகையின் வலுவால் உமையவள் கருணையானதுகூறுவாள். அந்த வைரமணிரேகையானது நன்மையாகக் கரத்திலிருக்கும். அவன் அருமையாகப் பிறந்த மைந்தனுகும்; ஆச்சரிய முடையவன்; தேவர்களிலொருவன்; இவன் திசையோக வல்லமைச்சொல்ல வொண்ணுதாம் எ-று.

செப்புகிறேன் வச்சிரமணி ரேகையுற்றால்
செபமான இவன்தானும் பாஞ்சாலந்தான்
ஒப்புகிறேன் உத்தமியால் பெற்றமைந்தன்
ஓகோகோ இவனுக்கு உறுதிகேளு
மெய்ப்புகிறேன் இவன்தனக்கு மதியாம்வாரம்
மேன்மையா மமரபட்சத் தசமியாகும்
அப்புகிறேன் ஆண்டவனுர் உதவியாலே
ஆண்பிள்ளை ஓரிரண்டு பிறக்கும்பாரே.

இ-ள். வச்சிரமணி ரேகையானதுயிருந்தால் ஜெயமுடைய பாஞ்சாலனுகும்; உத்தமியாள்பெற்ற மைந்தனுகும்; இவனுடைய உறுதியைக் கேளும். திங்கட்கிழமை அமரபட்சம் திதி சத்தமி இத்தினத்தில் ஆண்டவனுடைய உதவியினுல் ஆண்பிள்ளை இரண்டு பிறக்கும் எ-று. 60

பார்க்கதே யிவன்தானும் ஏழாம்பேரும்
பண்பான பக்குவத்தி லிறந்துபோவார்
ஆர்க்கவே தசமியிலே பிறந்தான்மைந்தன்
அன்பான உத்திரத்தில் அவதரித்தான்
ஏர்க்கவே இவன்பிறந்த இல்லறந்தான்
இயல்பான பெரியமனை இரண்டதாகும்
சார்க்கவே சற்புத்திரன் இவன்பிதாவும்
தாயுந்தான் முதற்சாதி மங்கையாமே.

இ-ள். பார்க்க மேற்கூறிய யின்னோன் ஏழாம்பெயரும்; பக்குவமாக யிருப்பான்; அன்றியும் தசமியில் பிறந்தான்; உத்திர நட்சத்திரத்தில் அவதரித்தவன்; இவன் பிறந்தவீடு பெரிதாகிய மனை இரண்டாகும்; சற்புத்திரன் இவன் பிதாவுந் தாயார் முதற் சாதி மங்கையாம் எ-று. 61

ஆகவே யிவன்பிறந்த ஆறுமாண்டு
அன்பான மாதாவு மடிவாள்பாரு
ஏகவே யிவன்பிறந்த மூன்றுமாண்டு
யியல்பாகப் பிதாவுந்தான் இறந்துபோவான்
பாகவே பரப்பிரம்ம யோகத்தாலே
பாக்கியங்கள் பெற்றிடுவான்பாதந்தானும்
வாகவே வாலையாம் பருவந்தன்னில்
வலுவான வறுமையால் மெலிவான்தானே.

இ-ள். ஆகத்தானும் இவன்பிறந்த ஆறும்வருடம் தாயார் மரணமாகி விடுவாள்; இவன்பிறந்த மூன்றும்வருஷம் தகப்பன் மரணமாகிவிடுவன்; அன்றியும் பரப்பிரமத்தினுடைய மோகத்தினல் பாக்கியங்கள்பெறுகுவன்; பாலன் வாலிபத்தில் வறுமையால் மெலிகுவான் எ-று. 62

மெலிவதென்னயிவனுக்கு பதினலாண்டு
மேன்மையுள்ளமைந்தனிவன் மெலிவான்பாரு
அலிவதென்ன இவனுக்குத் திசையோகந்தான்
ஆண்டவனர் அளித்திடுவர் பதினறுதான்
ஒலிவதென்னஇவனுக்கு உத்தியோகந்தான்
உற்றதொருஅரண்மனையில் எழுதலாச்சே
பலிவதென்னயோகத்தால் பாக்கியம்வந்து
பலித்ததடா திசையோகம் பண்பதாமே.

இ-ள். மேற்கூறிய பருவமாகிய பதினலாண்டில் மேன்மையாகிய பாலன் மெலிகுவான்; இவனுக்குதிசையோகம் ஆண்டவனுடைய கிருபையால் பதினறுவயதில் வாய்க்கும்; இவனுக்கு உத்தியோகம் இராஜாக்களுடையமனையில் கணக்கெழுதுவான். யோகத்தினல் பாக்கியமானது பெருகிபலித்தது திசையும் யோகமும் உண்டாம் எ-று. 63

ஆகவேயிவன்வயதோ ரிருபத்தைந்தில்
அன்பான ராஜாக்க ளுறவுமாமே
வாகவேயிவன்வயதோ ரிருபத்துநாளில்
வரிசையாய்ப்பெரியிடத்தில் விவாகமாச்சு
பாகவேபத்தனுக்கு உத்தியோகந்தான்
பண்பாகநடக்குமென்று பகரலாகும்
ஆகவேயிவன்தேவி மூலத்தாலே
ஆனஇனயவளாண்மை செய்திட்டாளே.

இ-ள். ஆகமேற்கூறிய யிவனுக்குவயது யிருபத்தைந்தில் இராஜாக்கள் உறவுகூடும்; வயது யிருபத்திஞலில் பெரியயிடத்தில் விவாகமாகும்; உத்தியோகம் பண்பாகநடக்கும். ஆகினும் இவனுடைய தேவியின் மூலத்தால் இலட்சுமியும் ஆண்மையானது புரிகுவாள் எ-று. 64

செய்திடவேயிவனுக்குக் குழவியெட்டாம்
செல்வமுண்டாம்ஆயசுண்டாம் திரமாய்த்தானும்
ஐதிடவேஆண்ஆறு பெண்யிரண்டு
அப்பனேயோகத்தால் பிறந்தார்மைந்தர்
பாடிடவேபரமனுட அருளாலே
பாக்கியங்கள்வந்துதடா பலிதஞ்சொன்னேன்
ஆடிடவேஅண்டத்தி லிவனைப்போலே
ஆச்சரியபெற்றமைந்த னில்லைகேளே.

இ-ள். செய்யினும் இவனுக்குப் பிள்ளைகள் யெட்டாம் அவர்கட்கு செல்வமும் ஆயுசுமுண்டாம்; அதில் ஆண் ஆறு பெண் இரண்டாம் யோகத்திஞல் பிறந்தவர்களாகும் அன்றியும்பரமசிவனுடைய அருளிஞல்பாக்கியங்கள் உண்டாயினவாமென்று பலிதமானதுசொன்ஞன். அகிலத்தில் இவனைப்போல் ஆச்சரியம் பெற்றவரில்லை கேட்பாய் எ-று. 65

கேளப்பாயிவனுக்குக் கோசரங்கள்
கேவலமாய்கிரகமது நாலுண்டாகும்
வாளப்பாயிவனுக்கு ராகுதோஷம்
வளமையாய்நாற்பத்தி ஆறிலேதான்
ஆளப்பாயிவனுக்குப் பொல்லாரோகம்
ஆண்மையால் வந்ததென்று அறிந்துபாரு
வீளப்பாபொல்லாத கண்டமுண்டு
விருதாவிலிவனைத்தான் அடிக்கும்பாரே.

இ-ள். கேட்க மேற்கூறியோனுக்கு கோட்சரத்தில் கிரகம் நாலுநிற்கும்; அதில் இராகுதோஷம் வயதுநாற்பத்தி ஆறில் அடுக்கும்; அதிஞல்பொல்லாதரோகமும் வண்மையால் வந்தணுகும் அத்துடன் பொல்லாத கண்டமும் வந்து விருதாவில்யிவனையடிக்கும் எ-று. 66

பார்க்கவேவச்சிரமணி ரேகைமைந்தா
பண்பாகச்சொல்லிவிட்டேன் பதிதமாக
ஏர்க்கவேயிவனுடைய திசையும்வாழ்வும்
இயல்பானயோகமுதல் கரணம்நாளும்
வார்க்கவேவச்சிரமணி ரேகைமைந்தா
வளமையுள்ளநட்புமுத லெல்லாஞ்சொன்னேன்
ஆர்க்கவேசக்கரத்தின் அமைப்புமுதலாய்
அன்பாகச்சொல்லிவிட்டேன் ஆய்ந்துபாரே.

இ-ள். பார்க்க வச்சிரமணிரேகையின் பலிதம்சொல்லிவிட்டேன்; அத்துடன் இவனுடைய திசைவாழ்வுயோகம் கரணம் நாள் வச்சிரமணிரேகையின் குறிநட்பு முதலாகியதெல்லாஞ் சொன்னேன்; அன்றியும் சக்கரத்தின் அமைப்பும் சொல்லிவிட்டேன் ஆய்ந்துபார்க்கவும் எ-று. 67

பார்க்கவேவச்சிரமணி ரேகைமைந்தா
பண்பாகசொல்லுகிறேன் பரிந்துகேளு
ஏர்க்கவே அதினுடைய விபரமெல்லாம்
இயல்பாகசொல்லிவிட்டேன் மூன்றுங்காண்டம்
தார்க்கவே தன்னுடைய யோகமெல்லாம்
தயிரியமாய்ச்சொல்லிவிட்டேன் சார்பதாக
மார்க்கமாய்மைநாக ரேகைமைந்தா
மகுத்துவத்தைச் சொல்லுகிறேன் மருவிக்கேளே.

இ-ள். வச்சிரமணி ரேகைசொல்லுகிறேன் பரிந்துக் கேட்பாயாக ரேகையினுடைய விபரமெல்லாம் சொன்னேன் மூன்றுங் காண்டம் தன்னுடையயோகம் யாவும்தைரியமாகச் சொல்லிவிட்டேன் இன்னமும் மயினாகரேகையின் மகத்துவத்தைச் சொல்லுகிறேன் கேளும் எ-று. 68

## மைவிந்த ரேகையின் பலன்.

கேழ்க்கவேயின்னமுந்தான் மைநாகத்தின்
கேவலங்க ளானதொரு ரேகைகேளு
வாழ்க்கவே மணிவிந்தன் இருக்கையாலே
வளமாக இருக்கிறதை வரிசைகேளு
தாழ்க்கவே மைநாகம் சமத்துதானும்
தனிமையாய்ச் சொல்லுகிறேன் சார்புகேளு
நாட்கவே நாலுவரை யிரண்டுபுள்ளி
நலமான இருகோணம் நாடிக்காணே.

இ-ள். கேட்கமயிநாக ரேகையானது மணிவிந்தனிருக்கையால் அதின் வரிசையைக்கேளும்; மைநாகனுடைய சமத்தும் தனிமையாகச்சொல்லுகிறேன் சார்பைக்கேளும்; நான்குவரையும் இரண்டு புள்ளியும் இருகோணமும் காண்பாய் எ-று. 69

காணுகின்ற மைநாகம் கையிலானால்
கனம்பெற்று வாழ்வுண்டாம் நன்றாய்க்கேளு
தோணுகின்ற இவன்யோகம் நல்லயோகம்
தொல்லைமெத்த இல்லாத தொழிலேயாவான்
வாணுகின்ற வர்னலக்ஷம் தொழிலேசெய்வான்
வர்னிப்பு வுள்ளமைந்தன் அழகனுவான்
வீணுகின்ற இவன்பிறந்த மனையிலேதான்
விகல்பமில்லாச் செல்வத்தோர் மைந்தனுவான்.

இ-ள். காணும்படியாய் மைநாகம் கையிலிருக்குமாகின் அவன் கனமானதுபெற்று வாழ்குவன்; இவனுடைய யோகம் நல்லயோகம்; தொல்லையில்லாத தொழில் புரிகுவன்; வர்னிக்கத் தக்க அழகுடையவன்; இவன் பிறந்தமனையில் விகற்பமானது யில்லாமல் செல்வமுடையவர்கள் மைந்தனுகுவன் எ-று. 70

ஆவதப்பா இவன்பிறவி அஞ்சுபேராம்
அருமையா யிவன்தானும் நாலாம்பேரும்
காவதப்பா பெண்ணொன்று பிறக்குமைந்தா
கருணைசேர் இவன்யோகம் நசிக்கும்பாராய்
ஆவதப்பா ஆச்சரியம் பெற்றபாலன்
ஆய்ந்துசொல்வேன் மைநாகம் பெருமைதானும்
மாவதப்பா ராஜ்ஜியத்தில் மந்திரியேயாவான்
மைந்தனே இவன்பிறந்த வாழ்க்கைசொல்லே.

இ-ள். ஆவதோடு இவன்பிறவி ஐந்துபெயராகும்; அதில் இவன் நாலாம் பேருகும்; இவனுடன் பெண் ஒன்றும் பிறக்கும்; இவனுடைய யோகம் நதிக்கும், ஆச்சரியம்பெற்ற பாலனுகும். ஆய்ந்துச்சொல்வேன் மைநாகம் பெருமைதனை; இவன் இராஜ்ஜியத்தில் மந்திரியாகுவன்; இவன் பிறந்த வாழ்க்கையைச் சொல்வாய் எ-று. 71

சொல்லவே இவன்பிறந்த வேளைதானும்
சொற்பெரிய வெள்ளியினில் இரவின்போது
அல்லவே சத்தமியும் பூரட்டாதி
ஆனதொரு மூன்றுங்கால் பிறந்தார் அன்றோ
வல்லவே இருமனையாய்ப் பிறந்தவீடு
வாழ்மனையில் தென்பாலில் வீட்டிலேதான்
நல்லவே வலதுகைப் பக்கந்தன்னில்
நலமானமச்சமொன் றுண்டுகாணே

இ-ள். சொல்ல இவன் பிறந்தவாரம் வெள்ளிக்கிழமை இரவு திதி சதமி நட்சத்திரம் பூரட்டாதி அதில் மூன்றுங்காலில் பிறந்தவன். அன்றியும் இவன் பிறந்தது இருமனையானவீடு அதில் தென்பால்வீடு: இவனுக்கு வலதுகை பக்கம் மச்சமொன்று யிருக்கும் பார்க்கவும் எ-று. 72

காணுமடா இவன்வயதோ ரெழுபத்தெட்டாம்
கைபாகம் மச்சம்வுள்ள கருணைவீரன்
ஆணுமடா இவன்யோகம் அதிகவான்தான்
அப்பனே சொல்லுகிறேன் ஆய்ந்துதானே
வாணுமடா மைநாக ரேகை ஆனல்
வச்சிரம்போல் பிள்ளையிவன் வாழ்வான்பாரு
தாணுமடா இவன்பிறந்த யோகத்தாலே
தாய்உமையாள் உதவியினல் எல்லாம் ஆச்சே

இ-ள். காண இவன்வயது எழுபத்தெட்டில் கைபாகமும் மச்சமுள்ளக் கருணைவீரனுகும். அதிக யோகவானுகுவன். மைநாகரேகையினல் வச்சிரம்போல இவன் வாழ்குவன்; இவன் பிறந்த யோகத்தினல் உமையவளுடைய கிருபையால் யாவும் ஆச்சுதாம் எ-று. 73

ஆச்சப்பா இவன்பிறந்த ஆரும்ஆண்டு
அன்பாக இவன்பிறந்த சயனம்தன்னில்
பேச்சப்பா ஒருபேயே வந்துதானும்
பிரபலமாம் நிதியுள்ள இடத்திலேதான்
வாச்சப்பா அழைத்துப்போய் நிதியேகாட்டும்
வகையாக மறுநாளில் மைந்தன்சென்று
தாச்சப்பா தட்சணத்தில் நிதிஎடுத்து
தாஷ்டியனும் குபேரன்போல் ஆனன்பாரே.

இ-ள். ஆச்செனு இவன் பிறந்த ஆரும்வருடம் இவன் பிறந்தச்சயனத்தில் பேயானது ஒன்றுவந்து நிதியானது உள்ள இடத்தில் இவனையழைத்துப்போய்க் காட்டும். காட்டின மறுநாள் மைந்தன்சென்று தட்சணத்தில் நிதியையெடுத்து மனைக்குக்கொண்டுவந்து பின்பு குபேரன்போல் வாழ்வான் எ-று. 74

பார்க்கவே இவனுக்குப் பிள்ளைஐந்தாம்
பண்பாக இவன்வயதோ ரெழுபத்தெட்டாம்
ஏர்க்கவே இவன்வயதோ ரெட்டுக்குள்ளே
எம்பிரான் அருளாலே விவாகம்ஆச்சு
தார்க்கவே தாயினிட உதவியாலே
தன்மையுள்ள மைநாக ரேகைக்காரன்
வார்க்கவே இவன்யோகம் கனகயோகம்தான்
வண்மையாய்ச் சொல்லிவிட்டேன் வகையதாமே

இ-ள். பார்க்க மேற்கூறிய இவனுக்குப் பிள்ளைகளுண்டாம்; இவனுக்கு வயது எழுபத்தெட்டாம்; அன்றியும் வயதுயெட்டுக்குள் எம்பிரானுடைய அருளால் விவாகமாகும்; உமையவளுடைய உதவியால் மைநாக ரேகையுள்ளோன் கனமான யோகவானுகுவன் வண்மையாகத்தானே சொல்லிவிட்டேன் வகையாகத்தானே எ-று. 75

## ஆந்தை இரேகையின் பலன்.

வகையான ஆந்தையிட ரேகைமைந்தா
வசனித்தேன் இவன்கையி லிருக்குமாகில்
பகையான யிவன்பிறந்த அம்மாவாசை
பாலகன்தான் அஸ்தமதின் நாலாங்காலாம்
துகையான யிவன்பிறவி நாலுபேரும்
துன்பத்தா லாகத்தான் யிளையாள்போச்சு
நகையாக யிவன்வயது நாற்பதுக்குள்
நல்மனையும் பாக்கியங்கள் நாசமாச்சே

இ-ள். வகையாகத்தானே ஆந்தை ரேகை கையிலிருக்குமாகில் அவன் அமாவாசை தினம் அஸ்தநட்சத்திரம் நாலாங்காலில் பிறந்தவனாகும். இவனுடன் பிறந்தோர் நாலுபெயராகும். துன்பத்தால் இளையாளென்னும் லட்சுமி விலகிப்போவாள். இவன் வயது நாற்பதுக்குள் நல்லமனையும் பாக்கியமும் நாசமாகப் போகும். எ-று. 76

ஆச்சப்பா யிவன்தானும் தாயாதிகொண்டு
அண்டாத தொழில்முறைகள் செய்ததாலே
வாச்சப்பா யிவன்பிதா இருபத்தாறில்
வளமையாய் யிறந்தபின்பு மனைபாழாச்சு
வேச்சப்பா வெய்யவன்தன் சாபமுண்டு
மேன்மையுள்ள ஸ்திரீசாபம் வெகுவாயாச்சு
நாச்சப்பா லவணமுதல் யில்லாமல்தான்
நாசந்தான் சூழ்ந்ததடா சாபத்தாலே

இ-ள். மேற்கூறியோன் தாயாதியைக்கொண்டு தொழில் முறைகள் செய்ததால் கெடுதி நேர்ந்தனவாம். இவனுடையத் தகப்பன் இவன் வயது இருபத்தாறில் மரணமானபின்பு மனையானது பாழாயினவாம். சூரியனுடைய சாபம் மூண்டு அத்துடன் ஸ்திரீசாபமும் வந்து வாய்த்ததாம். அதினால் உண்ண உப்புக்கும் கருப்பாகி நாசமாகத்தானே சூழ்ந்தனவாம் சாபத்தினால்

தாலென்ற ஆந்தையிட ரேகையாலே
தன்னுடைய பிறவிகளைக் கொன்றான்பாவி
ஆலென்ற யில்லறமும் பாக்கியமும்போய்
ஆதினமாம் மண்ணையும்விற் றலைவான்பாரு
காலென்ற பாதத்தில் காலசக்கரம்
கண்டிப்பாய் இருக்குமிவன் தாரத்திற்கு
வேலென்ற அவ்ளைத்தான் விவாகம்செய்தான்
வெகுசுருக்காய் லட்சுமியும் இறந்துபோமே

இ-ள். மேற்கூறியோன் ஆந்தையிட ரேகையாலே தன்னுடன் பிறந்தவர்களையெல்லாங் கொன்றான். அன்றியும் இல்லமும்,

பாக்கியமும்போய் ஆதீனமாகிய மண்ணையும்விற்று அலேகுவான். காலென்னும் பாதத்தில் காலசக்கரம் கண்டிப்பாய் தானேயிருக்கும்; இவனுடைய மனைவியின் காலில் அவளை விகாகம்பண்ண வெகு சீக்கிரத்தில் லட்சுமியு மிறந்துபோவாள் எ-று. 78

போகவே ஆந்தையிட ரேகையிலே
பொல்லாத வெறுமையாய் அலேவானப்பா
ஆகவே யிவனுக்கு நாலுபெண்ணு
அன்பாகப் பிறக்குமடா எல்லாஞ்சாகும்
வாகவே யிவனுக்கு வயதுதானும்
வளமாக அன்பத்து ஆறுமைந்தா
சாகவே யிவனுக்குச் சக்கிரமமைப்பு
சங்கரியாள் கட்டளைப்போல் நடக்கும்பாரே

இ-ள். ஆந்தையினுடைய ரேகையாய் மேற்கூறியோன் வெறுமையால் அலேகுவான்; இவனுக்கு நாலுபெண்பிறக்கும், அந்நாலும் சாகும்; இவனுக்கு வயது அன்பத்தாறுகும். சாகயிவனுக்குச் சக்கரத்தின் அமைப்பு; அன்றியும் சங்கரியாள் கட்டளைப்போல் நடக்கும் பார்க்கவும் எ-று. 79

## கேசரி ரேகையின் பலன்.

பார்க்கவே கேசரியின் ரேகைமைந்தா
பண்பான இவனுடைய பாக்கியங்கேள்
கார்க்கவே அரசனைப்போ லவனிமீதில்
கற்பகம்போல் நினைத்ததெல்லாங் கனிந்தளிப்பான்
ஏர்க்கவே கேசரிதான் இருக்குமாகில்
என்னசொல்வேன் யிவன்யோகம் எளிதோமைந்தா
கார்க்கவே உமையவள்தான் கடாட்சம்வைத்து
கருணைசெய்து பிறந்தமைந்தன் கனிவுகேளே

இ-ள். பார்க்க கேசரியின் ரேகையாகில் அதிக்பாக்கியங் கேளும். அவ்வித ரேகையுள்ளோன் அரசனுக்குச் சமானமாக பூமியின்மீது கற்பகம்போல் நினைத்ததெல்லாம் கனிவாகத்தானே அளிப்பன். இன்னமுஞ்சொல்வேன் கேசரியானது யிருக்குமாகின் அவனுடைய யோகத்தை என்னென்று சொல்வேன்; கடாட்சம்வைத்துக் கருணைசெய்யப்பிறந்த மைந்தனுகும், எ-று.

கேட்கவே நடுவரையின் மூன்றுகோணம்
கேவலமாய் யிரண்டுபுள்ளி இருக்குமப்பா
வாட்கவே இவனுடனே பிறந்தார்மூவர்
வையகத்தி லிவனைப்போல் யோகமில்லை
ஆட்கவே யிவனுடைய ஆண்மைமெத்த
அன்பான பாலகர்தான் யோகம்மெத்த

நாட்கவே நல்மனையில் பிறந்தபாலன்
நாதாக்கள் மெச்சிவர நல்கினரே.

இ-ள். கேட்பாயாக நடுவரையின் மூன்று கோணமும் இரண்டு புள்ளியும் இருக்கும்; இவ்வித ரேகையுடையவனுடன் புள்ளியும் இருக்கும்; இவ்வித ரேகையுடையவனுடன் பிறந்தவர் மூன்று பெயராகும். ஆகினும் வையகத்தில் இவனைப்போல் யோகசாலியில்லை. இவன் ஆண்மையுடையவன், யோகமுடையவன், நன்மையாகிய மனையிற் பிறந்தவன், இவனைப்பார்த்து நாதாக்கள் மெச்சி வரம் நல்கினர் எ-று. 81

நல்கியே யிவன்பிறந்த யோகவாழ்க்கை
நலமான நாட்கள்முதல் நவிலுவேன்யான்
அல்கியதோர் யிவன்தனக்கு வடபால்வீட்டில்
அன்பான துதிகையுடன் சதயமாகும்
மல்கியதோர் இவன்தானும் ரெண்டாங்காலாம்
வளமாகப் பிறந்தவன்பார் மதிவாரத்தில்
ஓங்கியதோ ரிரவதனில் உதயநேரம்
உத்தமன்தான் பிறந்திடுவான் உயர்வுதானே.

இ-ள். நல்கியப்படியே இவன்பிறந்த யோகவாழ்க்கையும் நாள்முதலியதும் சொல்வேன். இவன் வடபால் வீட்டில் திதிதுதிகையில் சதையநட்சத்திரத்தில் பிறந்தவன். கண்டநட்சத்திரம் இரண்டாங்காலாகும்; வாரம் திங்கள் உதையநேரத்தில் உத்தமன் ஜெனனமாகினவன் எ-று. 82

தானென்ற யிவன்பிறந்த போதுமைந்தா
தகையான பிதாவுந்தான் இருக்கமாட்டான்
ஆனென்ற யிவன்பிறந்தான் கன்னிமூலை
ஆன்பான தனுராசி ஆகும்பாரு
வானென்ற யிவனுக்குக் கிரகம்நாலு
வண்மையாம் உச்சமென்று வசனித்தேன்யான்
ஊனென்ற உட்கருத்து விளைவுவித்தை
உத்தம வேதம்படித்து வாழ்வான்தானே.

இ-ள். மேற்கூறியோன் பிறக்கும்போது அவனுடைய தகப்பன் அங்கில்லையாம். இவன் பிறந்தது கன்னிமூலையாகும் தனுசுராசியாம்; கிரகம் நாலு உச்சம்பெற்றிருந்தனவாம். இவன் உட்கருத்துடையோன்; வித்தையாளன், வேதங்கள் முதலானதும் படித்து வாழ்குவன் எ-று. 83

வாழ்வதென்ன இவன்பெரிதும் சமர்த்தனப்பா
வையகத்தில் தாய்தந்தை வைத்துவாழ்வான்
தாழ்வதென்ன ஒருநாளும் இல்லைமைந்தா
தாட்டிகற்கு வயதொருபத் தாகவேண்டும்

நாழ்வதென்ன யிவனுக்கு வயதோமைந்தா
நலமான எழுபத்து ஐந்தேயாகும்
வாழ்வதென்ன பாலகன்றன் யோகத்தாலே
பாக்கியங்கள் வந்திடும்பார் பண்பாய்த்தானே.

இ-ள். வாழ்குமிவன் சமர்த்தனுக விருப்பன்; தாய்தந்தையர்களை வைத்து வாழ்வான். தாழ்வானது ஒருநாளுமிராது. ஆகிலும் வயதுபத்தாகவேண்டும். அன்றியும் இவனுக்குவயது எழுபத்தைந்தாகும். இவனுடைய யோகத்தினுல் பாக்கியங்கள் பெருகி வரும் பண்பாய் எ-று. 84

தானென்ற யிவனுக்கு வயதோமைந்தா
தருவான எழுபத்து எட்டேயாகும்
வானென்ற இவனுக்குக் கண்டமூன்று
வையகத்தில் யிவனுக்கு நிகரேயில்லை
ஏனென்ற யிவன்வயது பதினுலுக்குள்
எடுப்பான்பார் கொழுமுனையில் நிதியேமைந்தன்
கானென்ற யிவன்வயது இருபதுக்குள்
கருணையாம் கடவுளால் அதிகமாச்சே.

இ-ள். தானென்ற இவனுக்குவயது எழுபத்தெட்டாகும். கண்டம் மூன்றுவரும். வையமீது இவனுக்குநிகரானவர் இல்லை. வயதுபதினுறுக்குள் கொழுமுனையில் நிதியானது யெடுப்பான். வயது இருபதுக்குள் கடவுள் கிருபையால் அதிகமானது செலுத்துவான் எ-று. 85

ஆச்சப்பா யிவன்வயது யிருபத்தெட்டில்
அன்பான விஷகண்டம் உண்டுகண்டாய்
பேச்சப்பா இவன்வயது எழுபத்தாறில்
பெரியதொரு ரோககண்டம் பேசுவோம்பார்
வாச்சப்பா யிவன்வயது அன்பத்தாறில்
வருகுமடா ராஜாவின் கோபமொன்று
நீச்சப்பா நிலவரமாய்ச் சிவனைத்தானும்
நேர்மையாய்க் கைதொழுதால் நீக்குவாரே.

இ-ள். மேற்கூறியோனுக்கு வயது இருபத்தெட்டில் விஷகண்டமுண்டு. வயது முப்பத்தாறில் பெரிதாகிய ரோகம்வாய்க்கும். வயது அன்பத்தாறில் இராஜகோபம்நேரும். இதற்கு நிச்சயமாகியும்நிலவரமாகியும் சிவபெருமானை நேர்மையாகத்தானே கைதொழுதால் நீங்கும் எ-று. 86

வாரென்ற யிவன்யோகம் மயேந்திரயோகம்
வாருதிபோற் கனயோகம் செய்வான்மைந்தன்
காரென்ற காணிக்கை உத்தியோகங்கள்
கட்டழகன் செய்திடுவான் கருணையாக

பாரென்ற பார்தனிலே இவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றமைந்தன் பாரிலில்லை
ஊரென்ற உட்கருத்து மிகவேயப்பா
உத்தமன்தான் பெற்றிடுவான் உயர்ச்சியாமே.

இ-ள். இவன்யோகம் மயேந்திரயோகம்போலும் வாருதிப் போற் கனயோகம் பெருகுவன். உத்தியோகம் புரிகுவன். இவனைப்போல் பாக்கியங்கள் பெற்றவர்கள் பூமியின்மீது ஒருவருமில்லை; உட்கருத்துடையோனுகும். உயர்ச்சியானது பெருகுவன்.

## வால்மீகபந்தன ரேகையின் பலன்.

உயர்ச்சியா யின்னமுந்தான் ரேகைமைந்தா
உண்மையுள்ள ரேகையொன்று உரைக்கக்கேளு
வமர்ச்சியாய் வால்மீக பந்தனந்தான்
வண்மையாய்க் கைகளிலே கண்டதானுல்
பயிர்ச்சியாய்ப் பருவரைகள் ரெண்டுகீறு
பண்பாக இருமூலை பயில்வால்காணும்
வியிர்ச்சியாய் நடுக்கீற்று லிருக்குமைந்தா
விண்ணுலகு மண்ணுலகு மெச்சும்பாரு

இ-ள். உயர்ச்சியாகத்தானே இன்னம் உண்மையுள்ள ரேகை ஒன்றுசொல்வேன் கேளும்: அதாவது வால்மீக பந்தனரேகை கைதனில் கானில் அது யெவ்விதமிருக்குமெனில் பெருத்தவரை இரண்டுகீறும் இருமூலையும் வால்போல் காணும். அது நடுக்கீற்றிலிருக்கும்; அதனுல் விண்ணுலகமும் மண்ணுலகமும் மெச்சும்.

பார்க்கவே யிவன்வயது வால்மீகபந்தனம்
பண்பாக யிருக்குமென்றுல் பகரக்கேளு
ஈர்க்கவே யிவன்பிறந்த வாரஞ்செவ்வாய்
இயல்பான இரவுதனில் யிருபத்தைந்தில்
வார்க்கவே அநுஷமது ரெண்டாங்காலம்
வண்மையாய்ப் பிறந்திவன் வண்மைகேளே
கார்க்கவே காணிக்கை யுள்ளபேர்க்கு
கைகண்ட வால்மீக பந்தனுமே

இ-ள். பார்க்க மேற்கூறியவண்ணம் வால்மீக பந்தனரேகை யிருக்குமாகின் சொல்லக்கேளும்: இன்னோன் பிறந்தவாரம் செவ்வாய்; அன்றிரவில் இருபத்தைந்து நாழிகையில் அனுஷ நட்சத்திரம் இரண்டாங்காலில் இவன் பிறந்தோன். இவனுடைய வண்மையைக் கேளும்; அதுகாணிக்கையுள்ள பேர்க்குக் கை கண்ட ரேகையாம், எ-று.



ஆமென்ற யிவன்பிறந்த வருஷநாளில்
அன்பான யிவன்பிறந்த யோகத்தாலே

வாமென்ற யிவனுக்கு உத்தியோகந்தான்
வண்மையாய் வந்ததென்று வரிசைகூறு
தாமென்ற யிவனுக்கு ஆறுபிள்ளை
தயவாகப் பிறக்குமென்று சார்புசொன்னேன்
வேமென்ற யிவனுக்கு கண்டம்நாலாம்
வெகுமான மாகயிவன் வாழ்வான் பாரே.

இ-ள். ஆமெனும் இவன்பிறந்த வருஷம்நாளில் இவன் பிறந்த யோகத்தினால் உத்தியோகம் வந்ததென்றும் சொல்ல வேண்டும். அன்றியும் இவனுக்கு ஆறுபிள்ளைகள் பிறக்கும்; கண்டம் நாலுண்டாகும். ஆகினும் அதிக செல்வமோடு வாழ்கு வோன் எ-று. 90

பார்க்கவே யிவனுக்கு நீரால்கண்டம்
பண்பான நரியாலே கண்டமுண்டு
ஏர்க்கவே யிவன்பிறந்த யோகத்தாலே
இயம்புவேன் சக்கரத்தி னியல்புநன்றாய்
மார்க்கவே மனுநெறியே தவறாமைந்தன்
மன்னவன்தான் மந்திரங்கள் மகிழ்ந்துஓதும்
ஆர்க்கவே யிவன்கோத்திரம் விளங்கவைப்பான்
அன்பான யிவன்வயதோ ரெழுபத்தெட்டே

இ-ள். பார்க்க மேற்கூரியோனுக்கு சலகண்டமும் நரியால் கண்டமும் உண்டு. இவன்பிறந்த யோகத்தால் சக்கரத்தின் இயல்பு சொல்வேன். அதாவது இவன்மனுநெறி தவறாதவன்; மந்திரங்கள் மகிட்சியாக ஓதுவன்; கோத்திரத்தை விளங்கவைப் பன்; இவனுக்கு வயது எழுபத்தெட்டாகும் எ-று. 91

எட்டான யிவன்வயதும் யோகஞ்சொன்னேன்
எம்பிரா னருளாலே வாழ்க்கைசொன்னேன்
மட்டான வால்மீக பந்தனத்தை
வரிசைபெறச் சொல்லிவிட்டேன் உண்மையாக
கட்டான ரிஷிகளென்போற் சொல்லவில்லை
கந்தபிரான் சொன்னதிந்தக் கருத்துமைந்தா
இட்டான சுகமெல்லாஞ் சொன்னாற்போலே
இனிதாக நடக்கவென்று எண்ணிச்சொன்னேன்.

இ-ள். மேற்கூறியோனுடைய வயதும் யோகமும் சொன் னேன்; எம்பிரானருளாலே வாழ்க்கைச்சொன்னேன்; வால்மீக பந்தன ரேகையின் வரிசையைச்சொன்னேன்; கட்டாகிய ரிஷி கள் யென்போல் சொல்லவில்லை. அன்றியும் கந்தசுவாமி சொன் னதிந்த கருத்தாகும் அதுபோல் இஷ்டமாகிய நடக்கைகள் யாவுஞ் சொன்னேன் எ-று. 92

சொன்னேனையா வெகுசுருக்காய்ச் சுருக்கித்தானே
சொற்பெரிய வால்மீக பந்தந் தன்னை
அன்னைமுதல் தந்தைவரை ஆய்ந்துசொன்னேன்
அப்பனே யிவன்வாழ்வும் இரவுசொன்னேன்
என்னையே தொழுகின்ற பேர்கட்கெல்லாம்
எம்பிரா னருளாலே யியற்றுவேன்யான்
அன்னையைப்போ லின்னமுண்டு மைந்தாகேளு
அரனார்தன் னுதவியெலாம் ஆண்மைதானே.

இ-ள். சொன்னேன் சுருக்காகச் சுருக்கியும் வால்மீக பந்தனத்தை. அன்னைமுதலாகத் தந்தைவரைக்கும் ஆய்ந்துச்சொன்னேன். இவன்வாழ்வும் இரவும் சொன்னேன் என்னைத் தொழுகின்ற பேர்கட்கெல்லாம் எம்பிரான் அருளால் சொல்வேன் யான் அன்றியும் அன்னையைப்போல் இன்னமுமுண்டு அரனுடைய உதவியினாலும் ஆண்மையாம், எ-று. 93

தானமெனு மென்தாயைத் தோத்தரித்து
தயவாகப் பூரணியை வந்துநிற்பாய்
வானமெனும் மனோன்மணியே உமையேதாயே
வர்ணவிழி மாமயிலே மாயிஆயி
பானமெனும் பராசத்தி யென்றுவானோர்
பதம்போற்றி யர்ச்சித்து புரிந்துவாழ்த்தித்
தானமெனுந் தங்கையடித் தரணியாளி
சரணமுவந் தெங்களை நீ காப்பாய்தாயே

இ-ள். தானமாகிய என் தாயை ஸ்தோத்தரித்து பூரணமாக வைத்துநின்று மனோன்மணியே உமையே தாயே மாயி ஆயி பராசத்தியென்று வானோர்கள் பாதத்தைப்போற்றி பூசை புரிந்து வாழ்த்தி ஓ மாயவன் தங்கையே! சரணமடைந்தோம், எங்களை நீ காப்பாய் ஓ தாயே, எ-று. 94

கார்க்கவென்று தேவர்களும் முனிவோர்வாழ்த்த
காருணிய முடையவள்தான் மனதிரங்கி
ஏர்க்கவென்று ஈஸ்வரனா ரருளினாலே
இயம்புகிறேன் பிரம்மாவே யிசைந்துகேளு
பார்க்கவென்று பராபரனும் உமையாள்சோதி
பத்தினியாள் மனதுவைத்து பகர்வாள்சேதி
சேர்க்கவென்று திருமாலின் உதவியாலே
திருஷ்டித்த ரகசியத்தின் திரத்தைக்கேளே

இ-ள். இப்படியாகக் கார்க்கவேணுமென்று தேவர்களும் முனிவர்களும் வாழ்த்த அப்போது உமையவள் மனமிறங்கி ஈஸ்வரருடைய அருளினால் சொல்லுகிறேன் பிரம்மாவே கேளுமென்று பராபரமாகிய உமையாள் மனதுவைத்து சொல்வாள் திருமாலினுடைய அருளினால் சிருஷ்டித்த ரகசியத்தைக்கேளும்,

கேளப்பா அகஸ்தியனே பிரம்மாவேநீ
கேவலமாய் வதிஷ்டர்முதல் ரிஷிகளென்று
வாளப்பா உலகத்தி லனேகசீவர்
வர்னலட்சங் கோடியதாய் வகுத்தாரீசன்
நாளப்பா சீவர்கட்குப் புராணஞ்சேர்ந்து
நலமான சீவாத்மா எல்லோருக்குந்தான்
வேளப்பா கருதகிர்த்தர் மூவர்தாமும்
விதிப்படி சொல்லுகிறேன் விகற்பமாமே.

இ-ள். கேளுமப்பா அகஸ்தியனே பிரம்மாவே வதிஸ்டரே முனிவர் முதலானோரே. உலகத்தில் அனேக சீவர் வர்னலக்ஷங் கோடியாக ஈஸ்வரனார் வகுத்தார். சீவர்கட்கு புராணஞ்சேர்ந்து சீவாத்மா எல்லோர்க்கும் கருதகிர்த்தர் மூவர்களும் விதித்தப் படிச் சொல்லுகிறேன் விகற்பமாகத்தானே, எ-று. 96

ஆகவே முன்காண்டந் தன்னிலேதான்
அறிந்தமட்டு மெல்லாந்தான் சொல்லிவிட்டேன்
வாகவே வகைதுறவும் அமைப்புமைந்தா
வாகாகச் சொல்லிவிட்டேன் வரிசையாக
தாகவே தரணியிலே மக்கட்காக
தாய்கார்க்க என்னையவர் தொழுததாலே
பாகவே பலபேர்கட் காகவென்று
பத்தினியாள் சொன்னமொழி கேட்பார்பாரே.

இ-ள். ஆகும்படியாக முற்காண்டத்தில் அறிந்தமட்டும் எல்லாஞ் சொல்லினேன் வகையுந்துரவும் அமைப்பும் வரிசையாகச் சொன்னேன் தரணியின்மீது மக்கட்காக யென்னை அவர்கள் தொழுததினால் பலபேர்க்கும் ஆகவென்று பத்தினியாகிய பார்வதி சொன்னமொழிபாரும். எ-று. 97

கேட்கவே தேவர்களும் முனிவோர்போற்ற
கேவலமா முமையவள்தான் சொன்னாளப்பா
ஆட்கவே பருவதரா ஜன்குமாரி
அன்பாக வாய்திறந்து அளித்தாள்மைந்தா
நீட்கவே கவுரிமாரி வடுகிஆதி
நீலிதிரி சூலியவள் நிகழ்த்தினாள்பார்
வாட்கவே யுலகமெல்லாம் வாழவேண்டி
மனோன்மணித்தா யுரைத்தனள்பார் மகிழ்வதாயே.

இ-ள். கேட்கதேவர்களும் முனிவர்களும்போற்ற உமையவள் சொன்னாள்; பர்வதராஜனுடையக் குமரியாகிய பார்வதி வாய்திறந்தளித்தாள்; உலகமுழுதும் வாழவேண்டி மனோன்மணியாகிய மாதா உரைத்தாள், எ-று. 98

ஆகவே முன்காண்ட மூன்றுசொன்னேன்
அறிந்தமட்டு மெல்லாந்தா னன்பாய்ச்சொன்னேன்

வாகவே வகைதுகைகள் வகுத்துச்சொன்னேன்
வளமையுள்ள நாள்கோள்கள்மகிழ்ந்துசொன்னேன்
ஏகவேமுன்காண்டத் தெல்லாஞ் சொன்னேன்
என்மக்க ளறிவதற்கா யியம்பினேன்பார்
வாகவே கருணைவைத்து கருதிநன்றாய்க்
கைலாச மனோன்மணித்தாய் கடாட்சித்தாளே.

இ-ள். ஆகமுக்காண்டமாகிய மூன்றும் சொன்னேன் அறிந்தமட்டும் யாவுஞ்சொன்னேன், வகையுந் துகையும் வகுத்துச்சொன்னேன், வளமையுடன் நாளும் கோளும் மகிழ்ந்து சொன்னேன், முக்காண்டத்திலுள்ளது யாவுஞ் சொன்னேன், உலகோர்கள் அறியும்படியாய் இயம்பினேன்; கருணையானது வைத்துச்சொன்னாள் கைலாசமனோன்மணியாள் கடாட்சித்தாள்

மூன்றாவது காண்டம் முற்றிற்று.
ஆக காண்டம் 3-க்கு பாடல் 254

---

## நான்காவது காண்டம்.

ஆதியெனும் பராபரத்தி னருளினாலே
ஆனந்தசிவயோக மம்பாள் சொல்வாள்
சோதியெனும் பரப்பிரம்ம சோதிமாதா
சொல்லுவாள் நாலாங்காண்டத்திலேதான்
நீதியெனும் பரஞ்சோதி யுமையாள்தாயே
நீணிலத்தில் தேவர்களும் முனிவோரெல்லாம்
வாதியெனுங் கேசரியின் வண்மைதன்னை
வகுத்துரைப்பேன் தேவர்கட்கும் வண்மைகேளே.

இ-ள். ஆதியாகிய பராபரத்தின் அருளால் ஆனந்தசிவ யோகியாகி விளங்கும் அம்பாள் சொல்வாள்; சோதியாகியப் பரப்பிரம்ம சோதிமாதா சொல்லுவாள்; நாலாங்காண்டத்தில் நீதியாகிய பரஞ்சோதி உமையாள் என்தாயருளால் உலகத்தில் தேவர்கள் முனிவர்களுக்கெல்லாம் வாதியாகிய கேசரியின் வண்மைதன்னை வகுத்துரைப்பேன் தேவர்கட்கும் எ-று. 1

### சங்கு சக்கிர குளிச ரேகையின் பலன்.

கேளீரோ சக்கரத்தின் ஆறுங்கூட்டி
கேவலமாய்ச் சங்குசக்கிரங் குளிசப்பாடல்
நாளீரோ சங்குசக்கரக் குளிசைமைந்தா
நலமாக மால்விரலில் வுயர்ந்துகாணும்
கேளீரோ இதன்கையிலே ஏழுரேகை
கார்க்கடக ரேகையது இருக்கும்பாரு
ஆளீரோ விடக்கம்பந் திருவையோடு
ஆனதல்ல கையிலேதா னிருக்கும்பாரே.

கேட்பீராக சக்கரத்தின் ஆறுங்கூட்டி சங்குசக்கிரக் குளி சத்தைப்பார்க்க மால் விரலில் உயர்ந்துகாணும்; அதனோடு அவன் கையில் ஏழுரேகை கர்க்கடகரேகை யிருக்கும்; விடக்கம் பம் திருவையோடு கையிலிருக்கும் எ-று. 2

பாரப்பா சக்கரமாம் குளிகைதானும்
பரமனிட அருளாலே ரேகைகாணும்
காரப்பா கடாட்சிபெற்ற ரேகைமைந்தா
கருணையினால் மால்கையி லிருக்கும்பாராய்
சாரப்பா சற்குருவாம் பிரமரேகை
சாஷ்டாங்கம் சிவன்செயலுஞ் சற்குருவாகும்
பேரப்பா பேரின்பம் பேணிவாழ்த்தும்
பெரியவன்பார் இவன்ரேகை பெரியதாச்சே.

இ-ள். பார்க்க சக்கரகுளிகையெனும்படியால் பரமேஸ்வரனுடைய அருளினாலே ரேகையானதுக்காணும் காட்சியானது பெற்றரேகை மால்விரலி லிருக்கும்; சர்க்குருவாகிய பிரமரேகை சிவன் செயலால் சர்க்குருவாகும் பேரின்பவழிகாட்டும் பெரியவனாக இவன்ரேகை பெரியதாகும். எ-று. 3

ஆச்சென்ற இவன்செயலும் திசையும்யோகம்
அன்பான விவாகமது ஆனதெல்லாம்
வாச்சென்ற முடிகிடைப்பில் நாலாங்காண்டம்
வச்சிரமணி யோகமடா வரிசைகேளு
நீச்சென்ற இவன்யோகங் குபேரனப்பா
நிதியுடைய வல்லவன்பார் நேர்மைகேளு
வாச்சென்ற வகைநடத்தி யுள்ளமைந்தன்
வாகான அழகியின்மா வர்னனுமே.

இ-ள். ஆச்சென்னும்படியாக இவனுடைய செயலும் திசையும் யோகமும் விவாகமானதோடு யாவும் முடிகடப்பாகிய நாலாங்காண்டம் வச்சிரமணிபோல யோகம் வரிசையாய்க் கேளும் இவன்யோகம் குபேரனுக்கும் நீதியுடையவல்லவன்; இவனுடைய நேர்மையைக்கேளும் யாதொருக் காரியமும் நடத்தி வைக்கும் பாலன் அழகிய வர்னனும் எ-று. 4

வர்னமடா அழகியனும் இடக்கண்சாயல்
வாகான மச்சங்கள் மூன்றுஉண்டு
சொர்னமடா இவன்வாழ்வு குபேரன்வாழ்கான்
சொற்பெரிய தேகத்தில் வல்லவன்காண்
தீர்னமடா ஒல்லியிவன் உருவமையோ
நீலாதிசொல்தவறான் பொய்சொல்லானே
கர்னனடா கீர்த்திகள் யோகவாழ்க்கை
காசினியி லிப்பிரவி வேணுந்தானே

இ-ள். மேற்கூறியோன் வர்னமுடைய அழகியன் இடக்கண் சாயலுள்ளான், மச்சமானது மூன்றுடையான், சொன்னவாறு இவன்வாழ்வு குபேரன்வாழ்வாகும் தேகத்தில்வல்லவன்; ஒல்லியான உருவமுடையோன்; நீதியாகிச்சொல்தவரான்; பொய்யானது சொல்லான்; கர்னனுகுவன்; கீர்த்தியிலும்யோக வாழ்க்கையிலும் பூமியின்மீது இவனைப்போல் பிறவிவேணும் எ-று. 5

வேணுமென்ற இவன்போலுந் தவங்கள் செய்து
வேதாந்த குருவருளால் வரங்கள்வாங்கி
ஆணுவங்கள் போலவுந்தன் பாக்கியத்தோடே
அன்பாகப் பூமியிலே பிறக்கவேணும்
தாணுவங்கள் தனயோகம் இல்லாமைந்தன்
தவஞ்செய்த மகிமையினுல் வந்ததன்றோ
பானுவங்கள் பரமனிட அருளேமைந்தா
பார்வதியாள் பெற்றமைந்தன் பாக்கியமாச்சே

இ-ள். வேணுமென்றுத்தானே மேற்கூறியவன்போல் தவங்களானது செய்துவேதாந்த குருவினருளால் வரங்களானது பெற்று பாக்கியத்தோடு பூமியில் பிறக்கவேணும். தாணுவாகிய தனயோகமானது இல்லாதமைந்தன் தவத்தினுடைய மகிமையினுல் வந்தமைந்தனுக்கும் பரமனுட அருளால் பார்வதியாள் பெற்ற மைந்தனுல் பாக்கியங்களாச்சுது எ-று. 6

ஆச்சப்பா முதற்சனனம் சொல்வேன் மைந்தா
அன்பான பாலகனும் பிருமணன்பார்
மூச்சப்பா விஷ்ணுவின் தன் மூச்சதாகும்
முற்பிறவி யீஸ்வரனுர் பாதத்துளாம்
பாச்சப்பா பரமனிட அருளாலேதான்
பார்தனிலே பிருமணனுய்ப் பிறந்தான்பாரு
காச்சப்பா உமையவட்கும் விஷ்ணுவுக்கும்
காட்சியாய்ப் பூஜைவிதி செய்தான்காணே.

இ-ள். ஆகினும் முதற்ஜெனனம் சொல்வேன்; மைந்தன் பிராமணனுகும்; விஷ்ணுவினுடைய மூச்சாகும்; முற்பிறவி ஈஸ்வரனுர் பாதத்துளாகும் பரமனிட அருளால் பார்மீது இவன்பிராமணனுகப் பிறந்தான், உமையவட்கும் விஷ்ணுவிற்கும் காட்சியாகத்தானே பூசைகள் செய்தான் எ-று. 7

செய்திடவே முன்னேதான் முத்திபெற்முன்
செப்பமுடன் அறமிகுதி செலுத்தினுன்பார்
மெய்திடவே மேதினியில் யாரும்வாழ்த்த
மெய்ப்பரனுஞ் சந்தோஷம் விளங்கினுன்பார்
ஐதிடவே இவன்தேடுந் திரவியந்தான்
அந்தணர்கள் பூமியிலே மறைத்ததுண்டு

உய்திடவே யுலகமதில் சனனம்ரெண்டு
ஒகோகோ விஸ்வனுமாய்ப் பிறந்தான்ரெண்டே.

இ-ள் செய்ததினுல் மூன்னும் முத்தியானது பெற்றுன்; அறமானது அதிகமாகப் புரிந்தான்; பூமியின்மீது யாவரும் வாழ்த்தபரமசிவனும் சந்தோஷங்கொண்டு மகிழ்ந்தார்; இவன் தேடும் திரவியத்தை அந்தணர்கள் பூமியின்கண் மறைத்ததுண்டு; அன்றியும் இவனுக்கு உலகத்தில் ஜெனனம் இரண்டு; விஸ்வ கர்மாவாய் இரண்டாவது ஜெனனமாகப் பிறந்தான் எ-று. 8

ரெண்டான ஜெனனந்தான் உலகுதன்னில்
ரேகையுடன் விஸ்வனுமாய்ப் பிறந்தென்ன
வண்டான முதற்சனன மூன்றுக்குமுன்
வளமான விஸ்வகர்மா சிவபூஜைக்கு
நன்றான புஷ்பவகை சமிதைகந்தம்
நலமாகக் கொண்டுவந்து நல்கினன்பார்
அன்றான சிவதூளிதஞ் செய்ததாலே
ஆனதொரு பாக்கிய விஸ்வனுனும்பாரே

இ-ள். இரண்டாவது ஜெனனத்தில் உலகமீது இரேகையுடன் விஸ்வனுமாய்ப் பிறந்த தென்னவெனில் முன் ஜெனனம் மூன்றுக்கு முன் விஸ்வகர்மாவாகப் பிறந்து சிவபூஜைக்கு புஷ்ப வகையும் சமிதைகந்தம் இவைகளை நலமாகத்தானே கொண்டு வந்து நல்கினன் அப்படி சிவதூளிதஞ் செய்ததால் பாக்கியத் தோடு விஸ்வகர்மாவாகினன் எ-று 9

ஆனதென்விஸ்வகர்மா மனதுவந்து
அன்னவர்க்குப் பலமீந்து உலகுதன்னில்
வானவரி லோர்பிறவி செய்துவைப்பேன்
வங்கிசத்தில் போய்பிறக்களன்று சொன்னுன்
சானதென்ன கருணையினுல் வரங்கள்வாங்கி
கயிலாசலருளாலே பிறந்தான்மைந்தன்
நானதென்ன உமையுடைய குலமேமைந்தா
நாகரீகமானதிவை நயந்துபாரே.

இ-ள். ஆனதுயென்ன விஸ்வகர்மாவாய் மனதுவந்துயெனில் அன்னவர்களுக்குப் பலன்களீந்து உலகத்தில் வானவரில் ஓர் பிற வியாகச் செய்துவைப்பேன், விஸ்வகர்மாவின் வங்கிசத்தில் போய்ப் பிறப்பாயென்று பரமனருளியபடி வரங்கள் வாங்கி கைலாசவாசகரின் அருளால் பிறந்த மைந்தனுகும்; இது உமை யவளுடைய குலமேயாமென்று நயந்துபார்க்கவும் எ-று. 10

பார்க்கவே பராபரியும் வந்துதித்த
பத்தினியார் மைந்தர்களும் ஆவார்பாரு

ஏர்க்கவே யீஸ்வரியும் அரனுங்கூடி
ஏகாந்த மாயிருந்த வமிசமாகும்
கார்க்கவே பரசமயம் உண்டுசெய்து
கயிலாச பகவானும் வாக்கிட்டார்பார்
ஆர்க்குந்தான் இவ்வகையாம் பொருளேமைந்தா
அகப்படா தென்றுவுமை அருளினாலே.

இ-ள். பார்க்கப் பராபரியாள் வந்திருக்கும் அந்தப் பத்தினியின் மைந்தர்கள் இவர்களாவார்; ஏற்கையாகத்தானே ஈஸ்வரியும் அரனுங்கூடி ஏகாந்தமாக இருந்ததோர் வமிசமாகும் அதில் கார்க்கும்படியாக பரசமையம் உண்டுசெய்து கயிலாசப்பதியாகிய பரமசிவனும் ஆக்கிவிட்டனர்; இதுபார்க்கும் இவ்வகையானப் பொருள் அகப்படாதென்று உமையவளருளினாள் எ-று. 11

நாளென்ற இவ்வசனம் பிரம்மாவதிஷ்டர்
நலமான நந்திகேஸ்பரங் கௌதமர்
ஆளென்ற வேதவியாசர் அகஸ்தியருந்தான்
அன்பான வாசவனும் போகர்தானும்
வானென்ற வுமையவளுஞ் சொன்னமாத்திரம்
வரிசையா யிவர்களெல்லாம் வணங்கினார்கள்
தானென்ற தாழ்வில்லாத் தரணியாளத்
தங்கமுத்தைப் பெற்றெடுத்த தாய்சொல்வாளே.

இ-ள். மேற்கூறிய இவ்வசனம் பிரம்மா வதிஷ்டர் நந்திதேவர் கௌதமர்வேதவியாசர் அகஸ்தியர்மகாவிஷ்ணுபோகர் இவர்கள் முன்னே உமையவள் சொன்னமாத்திரம் வரிசையாகத்தானே இவர்களெல்லாம் வணங்கினார்கள். அப்போதுத் தாழ்வில்லாமற்றானே தரணியையாளத் தங்கமுத்தைப்பெற்ற தாயாகிய உமையவள் சொல்வாள். எ-று. 12

சொல்லுவா யுலகமெல்லாம் படைத்தசோதி
சொற்பெரிய பத்தினியே சோதிமாதா
நல்லுவாய் நாரணியே வைகுண்டத்தாய்
நற்பதவி யீன்றருளும் நாயகியே
வெல்லுவாய்ப் புவனமெல்லாம் வேதரூபி
வேதாந்த வேதியம்மா விமலிசூலி
நல்லுவாய் மக்களைநீ ரட்சியம்மா
நலமாகப் பரகதியை நாட்டுந்தாயே.

இ-ள். சொல்லத்துடங்கினாள் உலகமாதியந்தமும் படைத்த சோதியாகிய மாதாநாரணி வைகுண்டத்தாள் நற்பதவியீயும் நாயகிபுவனமெங்கும் நிறைந்த வேதரூபி வேதாந்தவேதி விமலி சூலி மக்களைநீ ரட்சியம்மா. நலமாக பரகதியை நாட்டுந்தாயே.

தாயென்று கனவிலுமென் மனதிலுந்தான்
தார்குழலேயுன் திருத்தாள் தலைமேல்வைத்தோம்

ஆயியென்று அனுதினமும் போற்றுவோமே
அன்பாக எங்களைநீ காக்குந்தாயே
வாயென்று சொல்லவுந்தான் போராதம்மா
வங்கிசத்தைக் காக்குமுன் வருவாய்த்தாயே
பேயென்றும் பித்தனென்றும் பிள்ளையைத்தான்
பெற்றெடுத்த மாதாவே பெருமைசெய்ய

இ-ள். தாயென்றும் கனவிலும் மனதிலும் தாயாமே உன் திருத்தாளைத் தலைமேல் வைத்தோம்; ஆயியென்றும் அநுதினமும் போற்றுவோம் அன்புவைத்து எங்களைக் காக்குந் தாயேயென்றும் வாயினால்சொல்லப் போதாதம்மா, வங்கிசத்தைக் காக்குமுன் வருவாய்த்தாயே. பேயென்றும் பித்தனென்றும் பிள்ளையைப்பெற்ற தாயே பெருமைசெய்வாய் எ-று. 14

செய்யவென்று முனிவர்களும் தொழுதுபோற்ற
சேதிசொல்வா ளுத்தமியுஞ் செப்பக்கேளீர்
வையகத்தில் சக்கரக் குலிசைகண்டால்
வைகுண்ட நாரணனார் மூச்சதாகும்
மெய்யனென்ற மெய்யனவன் வேதாந்தவேதன்
மேன்மைபெற்று வந்துதித்தான் மேதினித்தான்
செய்யவுந்தான் திருமுடியில் புஷ்பஞ்சூடும்
செகராஜன் குபேரனிவன் செலுத்தும்வாழ்க்கை.

இ-ள். பெருமைசெய்ய வேண்டுமென்று முனிவர்களுந் தொழுதுபோற்ற உமையவள் சொல்வதைச் சொல்லக்கேளீர். வையகத்தின்மீது சக்கரக்குலிசை ரேகையைக்கண்டால் அது வைகுண்டத்தில் வாழும் நாராணனுருடைய மூசசாகும். அவன் மெய்யென்ற வேதாந்த வேதமேன்மையைப்பெற்று வந்து பிறந்தான்; முடியின்மீது திருமுடியில் புஷ்பஞ்சூடும்படியான ஜெகராஜராகிய வாழ்க்கை செலுத்துவன் எ-று. 15

வாழ்க்கையடா யிவன்பிறந்த செனனயோகம்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசைகேளீர்
நாள்கையடா இவன்பிறந்த இல்லரந்தான்
நலமான புதுமனையு மிரண்டுவாசல்
ஆள்கையடா செவ்வாயில் இரவுதன்னில்
அன்பான நாழிகைதான் இருபத்தைந்தாம்
வாழ்க்கையடா ராகுவுட வுச்சமாகும்
வண்மையா லிவனுக்குக் கிரகம்ராசி.

இ-ள். வாழ்க்கையாகத்தானே மேற்கூறியோன் பிறந்த ஜெனனயோகம் வண்மையாகச் சொல்லுகிறேன் அதைவரிசையாகக்கேளீர். இவன்பிறந்த இல்லறம் புதுமனையாகும், இரண்டு வாசலுண்டாம்; செவ்வாய்க்கிழமை இரவு நாழிகை அன்பத்தைந்தாமிவன்ஜெனனம். அப்போது இராகு உச்சமாகும்; வண்மையாகிய இவனுக்கு கிரகமும் இராசியும். 16

கிரகமென்ற இவன்பிறந்த வடவாசல்வீட்டில்
கிளையாலே மனிதர்களும் உரிமைமெத்த
துரகமென்ற சதுரங்க பலத்தினாலே
சுகம்பெற்று வாழலாஞ் சுசிகரந்தான்
அரகமென்ற அறத்தையிமன் பேணுவான்பார்
அன்பான பாலகனுக்கு சிறுகுரலதாகும்
வரகமென்ற இவன்பிறக்கும் போதுமைந்தா
வாகான அவ்விடத்தில் பெண்கள்மூன்றே.

இ-ள். கிரகமாகிய இவன் பிறந்த வடவாசல் வீட்டில் மனிதர்களும் உரிமைமெத்த உண்டு; துரவமோடுச் சதுரங்கபெலத்தினால் சுகம்பெற்று வாழ்குவன் சுசிகரனாகவும் அறமானது புரிவன். சிறுகுறலாகப் பேசுவன்; இவன் பிறக்கும்போது அருகிருந்தவர்கள் மூன்று பெண்களாம், எ-று. 17

பெண்களென்ற மூன்றுபேர் பெண்கள்மைந்தா
பேணியே யிருக்குமப்போ பூமிபார்த்து
அங்களென்ற மைந்தனிவன் பிறந்தானப்போ
ஆச்சரியஞ் சதையமதி லவதரித்தான்
கொங்குமுத வினம்வரைத் தேடினாலும்
கோளனைப்போல் குலிசமுடன் பிறப்பறிந்து
அங்கையிலே ரேகையைந்துண் டாகுமைந்தா
அதிகாரம் வாழ்வுண்டாம் ஆய்ந்துசொன்னேன்.

இ-ள். மேற்கூறிய வண்ணம் மூன்றுபெண்கள் அருகிருக்கும்போது பூமியைப்பார்த்துப் பிறந்தோனாகும். நட்சத்திரம் சதையம் இனங்கள் முழுதுந்தேடினாலும் குலிசமுடையோன்; பிறப்பறிந்து அவன் உள்ளங்கையில் ரேகையானது ஐந்துண்டாம் அதிகாரம்வாழ்வுண்டாம் ஆய்ந்துசொன்னேன், எ-று. 18

ஆய்ந்துநான் இன்னமுந்தான் சொல்லக்கேளு
ஆகார இவன்கெர்ப்பம் ஆறும்நாள்
வாய்ந்துமுள்ள மனையாளும் மன்னன்தானும்
வரிசையால் தென்பாலில் புணர்ச்சியானார்
சேர்ந்துமிக தரித்துகெர்பந் திசையோகத்தில்
சேர்மானம் உச்சமது கெர்ப்பம்நாலாம்
ஏர்ந்துமிகப் பிறவியிலே ராகுஉச்சம்
என்சொல்வே னவமாண்டு இருப்பான்பாரே.

இ-ள். ஆய்ந்து இன்னமும் சொல்லக் கேட்பாயாக இவன் கெர்ப்பம் ஆறுநாளிலானவன் மனையாளும் மன்னனும் தென்பாற்பக்கமாகப் புணர்ச்சி செய்தார் அது தரித்தது திசையோகத்திலாம். உத்தமாகியக் கெர்ப்பம் நாலாம் ஜென்மலக்கினத்தில் இராகு உச்சம்பெற்றுயிருந்தான் அவன்றிசையுமின்னம் ஒன்பது வருடமிருப்பான், எ-று. 19

இருக்கவும்தான் இவனுக்கு மூன்னேமைந்தா
இயல்பாக மூன்றுபேர் பிறந்தார்பாரு
தருக்கவும்தான் இரண்டுபேர் இருப்பாரப்பா
தரித்துதப்பா கர்ப்பமொன்று தாழ்ந்துப்போச்சு
பருக்கவும்தான் மனையிலுள்ள பொருள்களெல்லாம்
பண்பான பணமுதலும் ஆரும்போகும்
திருக்கவுந்தான் ஆண்நான்கு பெண்தான்ஐந்து
திரமாகப் பிறக்குமென்று செப்பினேனே.

இ-ள். இருக்கத்தானும் இவனுக்குமுன் மூன்றுபேர்கள் பிறந்திருப்பார்கள்; அதில் இரண்டுபேர் இருப்பார்கள். ஒன்று தரித்து கெர்ப்பத்திலேயே அழிந்துப்போம்; அன்றியும் மனையிலுள்ளப் பொருள்களும் பணமுதலானதும் ஆரும்போகும். ஆண் நான்கும் பெண் ஐந்தும் பிறக்கும், எ-று 20

செப்புகிறேன் இவனுக்குத் திசையோகம்தான்
சேயனுக்கு நவமாண்டில் வருகும் அப்பா
ஒப்புகிறேன் நிதியாலே யோகம் தானும்
ஓகோகோ வருகுமடா மைந்தனுக்கு
மெய்ப்புகிறேன் இவன்பிறந்த போதுமைந்தா
மேன்மையாய் கண்டாந்திரம் உண்டுகண்டாய்
தப்புகிற துண்டுமைந்தா தீட்சைசெய்ய
சற்குருவாம் ஈஸ்வரனைப் போற்றிசெய்யே.

இ-ள். செப்பியபடி இவனுக்குத் திசையும் யோகமும் ஒன்பதாம் வருஷத்தில் வருகும். வருகினும் நிதியாலும் யோகம் மேன்மேலாக வருகும். இவன் பிறந்தபோது கண்டாந்திரமுண்டு; அதுத்தப்பிப்போகும்; தீட்சையானது செய்ய சர்குருவாகிய ஈஸ்வரப் பூசைசெய்குவாய், எ-று. 21

செய்யப்பா இவனுடைய யோகவாழ்க்கை
சேயனுக்கே திசையோகம் செப்பக்கேளு
வையப்பா ரிஷிகளெல்லாம் இதுபோல்தானே
வகையாகச் சொல்வதுண்டோ வையகத்தில்
மெய்யப்பா இந்நூலைப் பழித்தபேர்கள்
மீளாத நரகத்தில் வீழ்வார்பாரு
பையப்பா என்குருவாம் அரனார்பாலன்
பைங்கொடிக்கு ரகசியமாய்ப் பகர்ந்ததன்றே.

இ-ள். செய்யவும் இவனுடைய யோகவாழ்க்கையும் திசையும் சொல்லக்கேளாய். வையகத்தில் ரிஷிகள் இதுபோல் வகையாகவும் சொல்வதுண்டோ. மெய்யாகிய இந்நூலைப் பழித்த பேர்கள் மீளாத நரகத்தில் வீழ்குவார். என் குருவாகிய அரனுடைய பாலன் பைங்கொடிக்கு ரகசியமாகப் பகர்ந்ததாம், எ-று.

பகர்ந்திடவே இன்னமும்தான் குலிசமார்க்கம்
பக்குவமாய்ச் சக்கரங்கள் பகரக்கேளு
நிகர்ந்திடவே இவன்வயதே ஆகுமுன்னே
நிட்சேபம் ரெண்டதுதான் கிடைக்கும்பாரு
அகர்ந்திடவே இவன்வயது இருபத்தாறில்
அகப்படுமே புதைத்துவைத்த தனம்தான்மைந்தா
மகிழ்ந்திடவே வாலைசொன்ன மைந்தற்கப்பா
வண்மையால் இன்னமுண்டு வரிசைகேளே

இ-ள். பகரும்படியாக இன்னமும் குலிசமார்க்கம் சக்கரங்கள் பகரக்கேளும்: இவன் வயதாகுமுன்னமே புதையானது. இரண்டு கிடைக்கும். இவனுக்கு வயது இருபத்தாறில் பூமியில் புதைத்துவைத்ததனங் கிடைக்கும். மகிழ்வாக வாலையானவள் சொன்னமைந்தனுக்கும் வண்மையாக இன்னமுமுண்டு வரிசையாகக் கேளும், எ-று. 23

கேட்கவே இவன்மாதா பிதாவுக்கப்பா
கேவலமாய் வைத்திருப்பான் கேள்வியாக
வாட்கவே இவன்வயது பத்துக்குள்ளே
வளமையாம் சிறிதுபொருள் போகும்பாரு
ஆட்கவே இவன்வயது எழுபத்தைந்தாம்
ஆசியனே விதமொன்று அன்பாய்ச்சொன்னேன்
தாட்கவே இவன்தானும் மிகவேவாழ்வான்
சந்தான மகண்டமது நாலுமுண்டே.

இ-ள். கேட்கவும் இவன் மாதாபிதாவைக் கேவலமாகத் தானே வைத்திருப்பான் கேள்வியாகவும். இவனுக்கு வயது பத்துக்குள்ளே வளமையாகி சிறுது பொருள்போகும் இவன் வயது எழுபத்தைந்தாகும் இவன் மிகவும் மேன்மையாக வாழ்வன் சந்தானக் கண்டம் நாலுண்டாம், எ-று. 24

உண்டாண கண்டந்தான் மைந்தாகேளு
உறுதியாய்ச் சொல்லுகிறாள் உமையாள்தானே
நன்றான இவன்வயது ஒன்பதுக்குள்
நலமான மாதமொரு நாளிலேதான்
குன்றான் காலிலே விஷமுள்பட்டு
கொடியதொரு வியாதிகொண்டு ரோகமுற்று
வண்டான மாசமது ரெண்டுமாகும்
வண்மையாம் மைந்தனிவன் மெலிவான்பாரே

இ-ள். உண்டாகியக் கண்டங்களைக் கேளும் உறுதியாக உமையாள் சொல்லுகிறாள். இவன் வயது ஒன்பதுக்குள் ஒரு நாளில் காலில் விஷமுள்பட்டு அதனால் வியாதிகொண்டு ரோகமுற்று இரண்டு மாதம் வரையிலும் வண்மையாகிய மேற்கூறிய மைந்தனும் மெலிவான், எ-று. 25

பார்க்கவே தீட்சைகளைப் பின்காண்டத்தில்
பாகமதாய்த் தீர்க்கவும்தான் பாடினேன்பார்
ஏர்க்கவே இவன்வயது இருபத்துநாளில்
என்னசொல்வேன் கடினமுள்ள கண்டமப்பா
ஆர்க்கவே பதினெட்டு நாள்தான்மைந்தா
அதிகமுந்தான் வியாதியினல் மெலிவானப்பா
கார்க்கவே முன்சொன்னேன் பின்னும்சொன்னேன்
கருணையால் விரதத்தில் நிவர்த்திசெய்யே.

இ-ள். பார்க்க தீட்சைகளைப் பின்காண்டத்திற் பாகமாகத் தீர்க்கும்படியாகப் பாடினேன் இவன் வயது இருபத்திநாலில் இயம்பமுடியாதக் கடினமாகியக் கண்டம் சம்பவிக்கும் அது பதினெட்டுநாள் வரைக்கும் வியாதியினல் மெலியவைக்கும் கார்க்கும்படியாக முன்னும் பின்னுமாகச் சொன்னேன் அதைக் கருணையாகிய விரதத்தினல் நிவர்த்திச் செய்வாய், எ-று. 26

செய்யவே இவன் வயது நாற்பத்தாறில்
தீமையால் சத்துருவால் வியாதியாலும்
வையவே வயிற்றிலே வாய்வுபோலும்
வளகான கெண்டையைப்போல் வளரும்பாரு
உய்யவே ஈசனைத்தான் பூசைசெய்து
உற்றதொரு கண்டத்தைத் தீர்க்கவேண்டும்
மெய்யவே பின்காண்டம் தனிலேசொன்னேன்
மேண்மையாய் உள்ளபடி நடத்துவாயே.

இ-ள். செய்யும்படியாக இவன் வயது நாற்பத்தாறில் தீமையாலும் சத்துருவாலும் வியாதியாலும் வயற்றில் வாய்வுபோலும் கெண்டையைப்போல் வளர்வதாலும் துன்பமணுகும் அதுநீங்கச் சிவபெருமானைப் பூசைசெய்து உற்ற கண்டங்கள் இவைகளைத் தீர்க்கவேண்டும் இதைப் பின்காண்டமதிற் சொன்னேன் அவ்வாறு நடத்துவாம், எ-று. 27

வாயென்று இவன்வயது எழுபத்துநாலில்
வருகுமடா பெரியகண்டம் வண்மையாக
சாயென்று ஒருவருஷம் ஒடுக்கிப்பின்னும்
சணணுமடா சக்கரத்தின் அமைப்பினலே
காயென்று கருத்ததுபோல் நடக்கவேண்டிக்
கருணையால் சொல்லிவிட்டேன் கண்டுகொள்ளு
தாயென்று என்னைத்தான் தோழுதத்தாலே
தயவுவைத்தேன் மனதிரங்கித் தண்மையாலே.

இ-ள். வாயென்றபடி மேற்கூறியோன் வயது எழுபத்து நாலில் பெரிய கண்டமான வருகும் அது ஒருவருஷம் ஒடிக்கி பின்னும் கண்ணும் சக்கரத்தின் அமைப்பினல் கருத்துபோல் நடக்கவேண்டுமென்றுக் கருணையாகச் சொன்னேன் கண்டு

கொள்வாய் தாயென்று யென்னைத் தொழுதத்தினால் தயவுனைத் 28
தேன் மனமானதை யிறங்கி தன்மையாகவும், எ-று.

தண்மையப்பா இவன்வயது இருபத்தாறில்
தலைவனிடப் பிதாவும்தான் இறப்பான்பாரு
வண்மையப்பா இவன்வயது முப்பத்தாறில்
வகையாக மாதாவும் இறப்பாளப்பா
உண்மையப்பா யிவன்வயது நாற்பதுக்குள்
உற்றதொரு மூத்தாளும் இறப்பாள்பாரு
நன்மையப்பா இவன்வயது அறுபத்தெட்டில்
நலமான தமையனவன் இறப்பான்பாரே.

இ-ள். தண்மையாக இவன் வயது இருபத்தாறில் தகப்பன் மரணமாகுவன் இவன்வயது முப்பத்தாறில் தாயாரும் மரணமாவாள் வயதுநாற்பதுக்குள் இவனுக்குமூத்தாள் இறப்பாள் வயது அறுபத்தெட்டில் தன்னுடைய தமயனவன் மரணமாகுவன்

பார்க்கவே யிவன்வயசு எழுபத்தைந்தில்
பண்பாகப் புனலாறு கொள்வதுண்டு
ஏர்க்கவே இவன்வயது மூன்றுக்குள்ளே
ஏற்றதொரு மாரிகண்டம் ஆச்சுதன்றே
மார்க்கவே இவன்வயது ஆறேழுக்கால்
வண்மையால் அலகுகண்டம் ஆச்சுதன்றே
தீர்க்கவே இவன்வயது பதினைந்தப்பா
திரமான வியாதிகண்டம் ஆச்சுதன்றே.

இ-ள். பார்க்க இவன் வயது எழுபத்தைந்தில் ஆற்றில் கண்டம் நேரும் அன்றியும் இவன் வயது மூன்றுக்குள்ளே அம்மையானது கண்டு நீங்கிப்போனதுண்டு வயது ஆறேழுக்காலில் அலகுகண்டம் வாய்த்ததுண்டு வயது பதினைந்தில் வியாதி கண்டம் வந்து தீரும் எ-று. 30

அன்றெனவே இவனுக்கு வுணர்வுமெத்த
ஆச்சரியம் உள்ளமைந்தன் வேதம்பார்ப்பன்
கொன்றெனவே வினோதவித்தை மிகவேகற்பான்
கூறரிய சாஸ்திர வாதியாவான்
நன்றெனவே வைத்தியமுதற் கண்ணியாகும்
நலமான புராணங்கள் கீதைபார்ப்பான்
சென்றமிகுசெல்வனிவன் லிபிதான்நாலு
திறமாகப் பிடித்திடுவான் செல்வன்தானே.

இ-ள்.மேற்கூறிய இவனுக்கு உணர்வுமெத்தவுண்டாம் ஆச்சரியமுள்ள மைந்தனாகவிருப்பான் வேதங்களைப் பார்ப்பான் வினோதமாகிய வித்தைகளை கற்பன் சாஸ்திரவாதியாவன் வைத்திய முதலானதுஞ்செய்வன் புராணங்கள் கீதைகள் பார்ப்பன் செல்வத்தில் மிகுந்தவனாகுவன் வித்தைநாலுங் கற்பன் செல்வனிவனும்

தானமெனும் இவனுக்குத் தாரம்ரெண்டு
தன்மையுள்ள மக்களவர் ஏழுபேரும்
வானமெனும் ஆண்நாலு பெண்தான்மூன்று
வண்மையுள்ள மக்களிவன் பெருவான்பாரு
கானமெனும் அமைப்பதுதான் ஒன்றதாகும்
கருணையால் தேவிமார் மூன்றுபேரும்
பானமெனும் பாலுடனே அன்னம் உண்ணல்
பைங்கிளிமார் மூன்றினிலே ஒன்றுபோமே.

இ-ள். இவனுக்குத் தாரம் இரண்டாகும் சந்ததிகள் ஏழுண்டாம். அதில் ஆண்நாலு பெண் மூன்றாகும் வண்மையாகப் பெருவான். அமைப்பு ஒன்றாகும் தேவிமார்கள் மூன்றுபேருகும் பாலும் அன்னமுமாக உண்ணும் மூன்றுபெயர்களில் ஒன்று போகுமாம் எ-று. 32

போகுமடா ஜென்மாந்திர வினைதான்ரெண்டு
பொல்லாத கண்டமது ரெண்டும்சொன்னேன்
ஆகுமடா கண்டமிவை அடித்துப்போடும்
அப்பனே மின்காண்டத் தரைந்தேன்மார்க்கம்
ஏகுமடா மார்க்கம்போல் செய்துக்கொள்ளு
என்னசொல்வேன் பிதாமகனை எடுக்கப்பார்க்கும்
தாகுமடா பொல்லாத துன்பம்வந்து
தனக்குமுதற் பிதாவையுந்தான் சார்வதாமே.

இ-ள். போவதுஜென்மாந்திர வினையாம் இரண்டாம் பொல்லாதக்கண்டமாகிய இரண்டும் சொன்னேன் ஆகிய இக்கண்டம் அடித்துப்போடும். அதை மின்காண்டத்திற் சொன்னேன் அது போவதற்கு மார்க்கம்போல் செய்துக்கொள்ளவும். அது பிதாமகனை யெடுக்கப்பார்க்கும் பொல்லாத துன்பமாகவந்து தனக்கு முதல் பிதாவிற்கும் சாறும் எ-று. 33

ஆகவேயிவையறிந்து மைந்தாநீதான்
ஆச்சரியம் ஓமமும் தர்ப்பணமும்செய்து
பாகமாய்ப் பரமனிட பூசைசெய்து
பற்றியது துறிதியிலே பாய்ந்துநிற்பாய்
போகவே முன்சாபம் உண்டுமைந்தா
பொல்லாத சாபமடா சொல்லப்போமோ
வாகவே விலகுமோ இந்தச்சாபம்
மனோன்மணித்தாய் கிருபைமிகு வாக்கியமாமே.

இ-ள். ஆகும்படியாக இதையறிந்து மைந்தா நீயும் ஓமமும் தர்ப்பணமுஞ்செய்து பரமனிடப் பூசையுஞ்செய்து துறிதியில் பாய்ந்து நிற்பாய் உனக்கு முன்சாபமுண்டு. அதுபொல்லாத சாபம் சொல்லப்போகாது இந்தச் சாபம் விலகுமோ மனோன்மணித்தாய் கிருபை மிகுத்துரைத்த வாக்கியம் எ-று. 34

வாக்கியமேன் என்வாக்கியம் சௌக்கியம்பார்
வசனிப்பேன் இன்னமுந்தான் மகிழ்ந்துகேளு
பாக்கியமென்ன மைந்தனுக்கு வேளையென்ன
பார்வதியாள் சொல்லுகிறேன் பரிந்துகேளு
ஆக்கியமென்ன இவன்வயது எண்பதேழுக்கால்
அன்பான பாலகனுக்குத் தர்மம்ஈந்தேன்
பாக்கியமென்ன இவனுக்குச் சென்மம்தொட்டு
பாகான வருஷமது ஒன்பதப்பா.

இ-ள். வாக்கியன்ன வாக்கியம் சர்வாக்கியம் வசனிப்பேன் அதை மகிழ்ந்துகேளும் பாக்கியமென்ன மைந்தனுக்கு வேளை யென்னபார்வதியாள் சொல்கிறேன் பரிந்துகேளும் இவன் வயது எழுபதேழுக்கால் இப்பாலகனுக்குத் தர்மமாக ஈந்தேன் இவ் வாக்கியம் இவனுக்குச் சென்மந்தொட்டு ஒன்பதுவருஷந் தப் பாதாம், எ-று. 35

தப்பாதே ஒன்பதுடன் ஏழுமாதம்
தருவான கன்னியென்ற மாதமாகும்
மிப்பாதே இருபதுக்குள் மதியாம்வாரம்
மேன்மையாம் என்தமயன் வந்துதானே
ஒப்பாதே பிதாவினிடம் சொல்லினாலும்
ஓகோகோ தலங்காட்டி நின்றிட்டேனே
வைப்பான சொர்னமது மெத்தவாகும்
வரிசைபெற ஈந்திட்டேன் வண்மைமகேளே.

இ-ள். தப்பாமற்படிக்கு ஒன்பதுவருடமோடு ஏழுமாதம் அது கன்னியமாதமாகும் இருபதுக்குள் திங்கட்கிழமை என்னு டையத்தமையன் வந்து ஒப்பாத பிதாவினிடம் சொல்லி னாலும் தலங்காட்டி நின்றேன் சொர்னமது மெத்தவும் வரிசைபெற ஈந்தேன் எ-று. 36

கேட்கவே இவன்வயது இருபத்தாறில்
கேவலமாய் மகரமென்ற மாதம்தன்னில்
ஆட்கவே இவன் உறங்கும் வேளைதன்னில்
அன்பான வாழிநந்தி சடையோன்போல
வாட்கவே இவனுக்குத் தம்பிவொன்று
வகையாக ஈன்றிடவே முன்னோர்சொன்னார்
ஏட்கவே எம்பிரான் அருளினாலே
இயம்பிட்டேன் தன்மியம் இணங்கத்தானே.

இ-ள். கேட்க இவன் வயது இருபத்தாறில் தைமாதத்தில் இவன் உறங்கும் வேளையில் நாழிஐந்தில் சடையோன்போல் வாழ்க இவனுக்கு தம்பி ஒன்றுவகையாக ஈன்றிட முன்னோர் சொன்னார் ஏர்க்கும்படியாக எம்பிரான் அருளால் இயம்பினன் தன்மீயம் இனங்கத்தானும் எ-று. 37

தானென்ற இவன்பிறந்த குலிரமாகும்
தருவாக இவன்யோகம் சுக்கிரயோகம்
ஊனென்ற இவன்யோகம் கனத்தயோகம்
உண்மையாய்த் தனம்வந்து உதவிற்றன்ரு
நானென்ற நன்மைமெத்த செய்தபேர்கள்
நல்லவர் முன்செய்த பாக்கியத்தாலே
நானென்ற ஆணவங்கள் மெத்தமைந்தா
நான்சொன்ன கட்டளைப்போல் நடக்கும்பாரே.

இ-ள். தானென்னும்படியாக இவன் பிறந்த குலிசமாகும். இவன் யோகம் சுக்கிரயோகமாகும்; அது கனத்தயோகமாகும். உண்மையாகத் தனமானது வந்துபெருகும்' நன்மையானது மெத்தப்பேர்கள் செய்வார். முன்செய்த பாக்கியத்தாலும் நானென்ற ஆணவமானது மெத்த உண்டாகும். இதுவெல்லாம் நான் சொன்னக் கட்டளைப்போல் நடக்கும் எ-று. 38

பாரப்பா இவனுக்குத் திசையோகங்கள்
பண்பாகச் சொல்லுகிறேன் பலிதம்கேளு
காரப்பா இவன் வயது இருபத்துமூன்றில்
கட்டுவான் லாயத்தில் அசுவயோகம்
தாரப்பா இவன்வயது முப்பதுக்குள்
தருவான புதுமனைதான் எடுப்பான்பாரு
பேரப்பா இதற்குமேல் பதின்மூன்றுக்குள்
பேர்பெரிய பூமியவன் கொள்வான்பாரே.

இ-ள். பார்க்க இவனுக்குத் திசையோகம் பண்பாகச் சொல்கிறேன் அதின் பலன்கேள். இவன்வயது இருபத்திமூன்றில் அவ்வயோகம் வாய்க்கும்; லாயத்தில் குதிரைகட்டுவான். வயது முப்பதுக்குள் புதுமனையானது கட்டுவான் வயதுநாற்பத்திமூன்றுக்குள் பூமியானது கொள்வான் எ-று. 39

பாரென்ற புவனமதில் இவனைப்போலும்
பாக்கியங்கள் பெற்றவர்கள் ஒருவரில்லை
சீரென்ற திசையோகம் இந்தமட்டும்
செப்பினேன் பெருமைபெற்ற சேயனுக்கும்
காரென்ற கருணைவைத்தாள் உமையாள்தானும்
கருணைபெறப் பிறப்பித்தார் கடவுளர்த்தான்
வாறென்ற வையகத்தில் இவனைப்போலும்
வரிசைபெற்ற மக்களில்லை வண்மைகேளே.

இ-ள். பாரென்னும் படியான புவனத்தில் இவனைப்போல் பாக்கியம் பெற்றவர் ஒருவருமில்லையாம்; சீராகிய திசையோகங்களை இந்த மட்டும் சொன்னேன் பெருமைப்பெற்ற இந்தப் பாலனுக்கும் உமையவள் கருணையானது வைத்தாள்; கருணைப் பெரும்படியாகக் கடவுளும் பிறப்பித்தார். இந்த வையகத்தில் இவனைப்போல் வரிசைப் பெற்றவர்களில்லையாம் எ-று. 40

கேட்கவே இவர்வழியில் பிதாமுதல்தான்
கேவலமாய்ச் சிறுவயதில் அலைவார்பாரு
வாட்கவே இவர்கள்தான் மீறிவந்தால்
வரிசைபெற்று நடந்துநன்றாய் வாழ்வார்மைந்தா
தாட்கவே யினிமேலுங் கெடுதியில்லை
சஞ்சலங்கள் இல்லையடா தரணிமீதில்
வீட்கவே யில்லாமல் திசையோகத்தால்
விண்ணிலவர் புண்ணியமாம் மைந்தாபாரே.

இ-ள். கேட்க இவர் வயதில் பிதாமுதலோர்கள் கேவலமாகத்தானே சிறுவயதில் அலைவார். இவர்கள் மீறிவரில் வரிசையானது பெற்றுவாழ்வார்கள். இவர்கட்கு யினிமேல் கெடுதியானது இல்லை; சஞ்சலமானது மணுகாது; திசையோகத்தினால் விண்ணில் இவர் புண்ணியமாகும் எ-று. 41

மைந்தராய்ப் பிறந்த சக்கிரக்குலிசமாகும்
மகத்துவந்தான் வந்தந்த மகிமையாலே
சொந்தமாய் இருந்திட்ட மனிதர்தானும்
தொல்லைமெத்த சமுசார வாழ்க்கையாலே
இந்தநல்ல பதவியது எதினாலென்றால்
ஈஸ்வரருக்குத் தொண்டுசெய்த இயல்பினாலே
கந்தருட அருள்மிகுந்து வந்ததென்று
காட்சியினால் உமையவள்தான் கருணித்தாளே.

இ-ள். மைந்தராகப் பிறந்தச் சக்கரக் குலிசையாகும். அதனால் மகத்துவம் வந்ததாம் மகிமையினால் சொந்தமாயிருந்த மனிதர்களுக்கு தொல்லையானது உண்டாயினவாம். சமுசார வாழ்க்கையால் இந்தப்பதவி எதனாலென்றால் ஈஸ்வரருக்குத் தொண்டு செய்த இயல்பினால் கந்தசுவாமியுட அருள்மிகுந்து வந்ததாமென்று காட்சியினால் உமையவள் கருணித்தாள் எ-று. 42

கருணையினால் இன்னமுந்தான் மைந்தனுக்குங்
காட்சிசொல்வேன் சக்கரக் குலிசைமைந்தா
கருணையால் இவன்சீவன் கொஞ்சசீவன்
தாஷ்டீகம்தான் இவனுக்குப் போதாதன்றோ
வருணையால் கிளைகோத்திரம் வாழ்த்துவார்பார்
வஞ்சனைகள் இல்லாத மைந்தனுக்கும்
பருணையால் பலஉபகாரங்கள் செய்வான்
பாக்கியவான் வீண்செலவு செய்வான்பாரே.

இ-ள். கருணையினால் இன்னமும் மைந்தனுக்குக் காட்சி சொல்வேன் சக்சரக் குலிகையை மைந்தா. இவன்சீவன் கொஞ்ச சீவன், தாஷ்டீகம் இவனுக்குப் போதாதாம்; இவனுடைய கிளை கோத்திரம் யாவரும் வாழ்த்துவார். வஞ்சனையில்லாத மைந்தனென்றும் இவன் பல உபகாரங்களும் செய்வான் பாக்கியவான் வீண்செலவு செய்வான். எ-று. 43

பாரப்பா இவன்தானும் பாஞ்சாலந்தான்
பத்தினியாள் பெற்றதொரு பாலகன்தான்
காரப்பா யிவன்வயது ஒட்டியாகும்
காத்திரமென்ற ஆக்கையது ஒல்லியாகும்
ஏரப்பா கழுத்திலே வரைதான்மூன்று
இயல்பான வயற்றிலே மடிப்புநான்கு
கோரப்பா கோசமது அங்குலம்தான்மூன்று
கொற்றவன்தான் ஸ்திரீமுகம் சிவப்பதாமே.

இ-ள். பார்க்க இவன் பாஞ்சாலனாகும்; பத்தியாகிய தாய் பெற்றபாலனிவன்; வயது ஒட்டியாகும், தேகமானது ஒல்லியாகும், இவன் கழுத்தில் வரையானது மூன்று உண்டு, வயற்றில் மடிப்புநாலுண்டாம்; கோசமானது அங்குலம் மூன்று; இவன் ஸ்திரீ முகமுடையவன், சிவப்பன் எ-று. 44

ஆமென்ற பரப்பொருளும் உண்டுசெய்வான்
அன்பான பாலகனுக் கறிவுமெத்த
ஓமென்ற அகாரமுதல் உகாரமட்டும்
உத்தமன்தான் பிறந்ததொரு தசமியாகும்
ஏமென்ற அரசனிடச் சேவைசெய்வான்
என்னசொல்வேன் ஸ்திரீகூட்டம்மெத்த வுண்டாம்
காமியென்ற காமியங்கள் மெத்தவாகும்
கண்டிப்பு மெத்தவாடா கோபியாமே.

இ-ள். ஆமெனும் படியாகப் பலபொருளும் உண்டுசெய்வான். பாலனுக்கு அறிவானது மெத்தஉண்டாம். ஓமெனும் பதமான அகாரமுதல் உகாரமட்டும் உத்தமன் பிறந்ததும் தசமிதிதியாகும். இவன் அரசர்களிடத்தில் சேவைசெய்வான். இவனுக்கு ஸ்திரீகூட்டம் மெத்தஉண்டாம். காமி என்றகாமியங்கள் மெத்தஉடையோனாகும், கண்டிப்புடையக்கோபியாவான்எ-று.

கோபமென்றால் கடுங்கோபம் உள்ளமைந்தன்
கோத்திரத்தில் இவனைப்போல் யில்லையப்பா
தாபமென்றால் யிவள்தனக்குத் தாபம்மெத்த
தலைவன்தான் தச்சணத்தில் ஆள்வான்பாரு
ஆபமென்றால் யிவன்பிதா ஆக்கையொன்று
அறிவான மாதாவின் ஆக்கையொன்றும்
பாபமென்றால் பரிகரிக்கும் மைந்தனுக்கு
பக்குவமாம் அவதரித்தபாலனமே.

இ-ள். கோபமென்றால் கடுங்கோபமுடைய மைந்தன் கோத்திரத்தில் இவனைப்போல் ஒருவருமில்லை. தாபமுடையவன் தலைவன் தட்சணத்தையாள்வன்; இவன் பிதாவினுடைய ஆக்கை ஒன்றாகும் மாதாவினுடைய ஆக்கையும் ஒன்றாகும் பாபமானது பரிகரிக்கும் இப்பாலனுக்கும் பக்குவமாகத்தானே அவதரித்தோனாகும் எ-று. 46

ஆமப்பா யிவனுக்குப் பஞ்சரேகை
ஆண்டவனே வந்ததிவன் அறிவாய்ப்பாரு
வாமப்பா வயிரவனார் அருளினாலே
வரமென்றால் மாயவனார் வருமைநீங்க
காமப்பா காணிக்கை யாகமைந்தன்
கருணையால் வாழ்த்திடுவன் கனிவுகூர்ந்து
வீமப்பா யிவன்வீட்டில் உள்ளமார்க்கம்
விபரமாய்ச் சொல்லுகிறேன் விரைந்துகேளே.

இ-ள். ஆமெனும் படியாகத்தானே இவனுக்குப்பஞ்சரேகை, அதனையறிவாகப்பாரும் இவன் தனக்கு வயிரவரின் அருளினால் வரம் என்றனர் மாயனார்; அப்போது வருமையானதுநீங்கக் காணிக்கையாகவும் கருணையால் வாழ்குவன்; கனிவானது கூர்ந்தும் இவன்வீட்டில் உள்ளமார்க்கம்; அதனைவிபரமாகச் சொல்கிறேன்கேளும் எ-று. 47

கேளப்பா யிவன்வீட்டில் தெய்வக்காரி
கேவலமாய் அனல்மாய்ந்த கன்னிப்பெண்ணும்
வாளப்பா யிவனுடைய வங்கிஷத்தின்
வகையாக அனல்பாய்ந்து வறுமையாக
நாளப்பா நல்லதொரு கன்னிதானும்
நலமானவீட்டிலே விரோதமாகி
ஏளப்பா எம்பிரான் அருளாலேதான்
ஏற்றமாம் மனோன்மணியாள் யியல்பலாமே.

இ-ள். கேட்பாயாக இவன்வீட்டில் தெய்வக்காரி அவள் அனலில் பாய்ந்த கன்னியாம். அவள் இவனுடைய வங்கிசத்தில் அனல்பாய்ந்தும் வறுமையாக அந்நல்ல கன்னிதானும் வீட்டில் விரோதமாகி எம்பிரான் அருளால் மனோன்மணியாள் பால் சேர்ந்தனள் எ-று. 48

ஆமடா ஞானகுரு உபதேசத்தால்
அளவற்ற பலகலைகள் படிப்பான்பாராய்
போமடா பொல்லாத பேர்களோடே
போயிவன் தான்கூடான் பொறுமையாளன்
வாமடா வஞ்சனைகள் நடந்தான்பாரு
வண்மையாம் புலைகளவு செய்யானப்பா
காமடா கனபண்டம் அநேகம்தானும்
கருணையாய்த் தேடுவான் கண்டுபாரே.

இ-ள். ஆமென இவனுக்கும் ஞானகுருவின் உபதேசத்தால் அளவிறந்தகலைகள் பலதும் படிப்பான். பொல்லாதப் பேர்களோடு இவன்போய் கூடான்; பொருமையுள்ளவன் வஞ்சனையானதொழில் நடக்கான்; புலைகளவு முதலான துர்ச்செய்கைகள் புரியான்; கனபண்டங்கள் அனேகமாகத்தானே கருணையால் இவன் தேடுவான் எ-று. 49

பாரப்பாயிவனுக்கு நாளுங்கோளும்
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்மைந்தா
சீரப்பா யிவனுக்குப் பிள்ளையேழாம்
சிறப்பான ஆண்நாலு பெண்தான்மூன்று
காரப்பா காட்சியால் பிள்ளைரெண்டு
கனக்காகவே பிழைத்திடுவார் பிள்ளைரெண்டாம்
வீரப்பா முன்பிறப்பில் ஓர்குழவியாகும்
விவரமதைச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

இ-ள். பார்க்க இவனுக்கு நாளுங்கோளும் பக்குவமும்சொல்கிறேன் கேட்பாயாக. இவனுக்குப்பிள்ளை ஏழாம்; அதில் ஆண் நாலு பெண்மூன்று. காட்சியாக பிள்ளைகளில் இரண்டுபிழைக்கும்; மூன்று பிறப்பில் ஓர் குழந்தையாகும்; அதின்விபரத்தைச் சொல்கிறேன் வியந்துகேளும் எ-று. 50

கேளடா யிவன்வயது யிருபத்துமூன்றில்
கெட்டியாய் ஆண்பிள்ளை பிறப்பதுண்டு
நாளடா நான்முகனார் அருளினாலே
நாயகந்தான் பிறந்திடுவான் நன்மையாக
கேளடா யில்லாமற் பிறந்தமைந்தன்
கொற்றவனாய்க் குபேரனாய் வாழ்வானன்றே
ஆளடாஉத்திரத்தில் காலும்கூடி
அன்பான பாலனவன் அவதரித்ததாமே.

இ-ள். கேட்பாயாக இவன்வயது இருபத்திமூன்றில் ஆண் பிள்ளையானது ஒன்றுபிறக்கும் நான்முகனுடைய அருளால் நாயகன் பிறப்பான் நன்மையாகவும் குற்றமில்லாமற் பிறந்தமைந்தன் கொற்றவனாகியும் குபேரனாகியும் வாழ்வான் உத்திர நட்சத்திரத்தில் நாலுங்கூடி அன்பாகிய இப்பாலன் அவதரித்தான். 51

ஆமப்பா யிவன்தானும் பிறக்கும்போது
அரனுடைய கடாட்சம்வந்து லபித்ததாகும்
வாமப்பா வயிரம்போல் உமையாள்சொல்லை
வகையாக கேட்டினிதாய் வருந்துவாய்நீ
ஏமப்பா இக்குழவி யோகம்தன்னில்
எம்பிரான் தேவியரு இசைந்துபாரு
காமப்பா திசையோகம் பிதாவுக்கப்பா
காரணமாய்க் கண்டமது பருகும்பாரே.

இ-ள் மேற்கூறிய இன்னோன் பிறக்கும்போது பரமசிவனுடைய கடாட்சம்வந்து லபித்திடும். அன்றியும் வயிரம்போல் உமையாள் சொல்லக்கேட்டும் வருந்திச்சொல்வாய்;இக்குழவியின் யோகமதனில் எம்பிரானுடைய தேவியின் அருளானது பெருகும்; திசையும்யோகமும் பிதாவிற்குப்பருகும் அன்றியும் கண்டமுண்டாம்

பார்க்குமது கண்டந்தாம் உண்டாமென்று
பைங்கொடியேசொன்னதென்னபாவஞ்சொல்வாய்

ஏற்குமது திருவாக்கால் உரைத்ததென்ன
எம்பிரா னிடத்திருக்கும் கௌரிமாரி
கார்க்குமப்பா மாதாவே சூலிநீலி
சண்முகனைப் பெற்றெடுத்த எங்கள்தாயே
ஏர்க்கவே எங்களைத்தான் கார்க்குஞ்சோதி
ஏகாந்த மாதாவே இசைந்திடாயே.

இ-ள். பார்க்கக் கண்டாந்தம் உண்டாமென்று பைங்கொடி பாள் சொன்னவண்ணம் பாவம்சொல்வாய்; ஏற்கும்படியாகத் தானே திருவாக்கால் உரைத்ததென்ன; எம்பிரான் இடமிருக்கும் கௌரிமாரி காருமம்மா மாதாவே சூலிநீலி சண்முகனைப் பெற்றதாயே ஏற்கும்படியாக எங்களைக் கார்க்குஞ்சோதியே ஏகாந்தமாகிய மாதாவே இசைந்திடுவாய் எ-று. 53

மாதாவே யென்றுமிகத் தொழுதாரெல்லாம்
மனமகிழ்ந்து உமையவள்தான் வசனிப்பாளே
சீதரன்தான் பிறவியிலே வைத்தசூட்சம்
சிறப்பாக நிவர்த்திசெய்யத் தீரும்பாராய்
வாதாடி வந்ததொரு பிணிதான்தீரும்
வண்மையுள்ள உமையவள்தான் வசனிப்பாள்பார்
போதான பொற்புடைய புண்ணியத்தாலே
பொல்லாத கண்டமெல்லாம் போகும்பாரே.

இ-ள். மாதாவேயென்று யாவர்களுந் தொழுதபோது மனமானது மகிழ்ந்து உமையவள் சொல்வாள் சீதரன் பிறவியில் வைத்தசூட்சம் அதை நிவர்த்திசெய்யத் தீரும். வாதாடிவந்தப் பிணியுந் தீருமென்று வண்மையாகிய உமையவளும் சொல்வாள். தான்செய்த பொற்புடையப் புண்ணியத்தினால் பொல்லாத கண்டங்கள் யாவும்போகும் எ-று. 54

பார்க்கவே உமையவளே எந்தன்தங்கை
பத்தினியே உடன்பிறப்பே பரஞ்சோதியாளே
ஏர்க்கவே யேந்திழையே இன்னமுந்தான்
இயல்பாகச் சொல்லுமம்மா இளையாளேநீ
தார்க்கவே பராபரியே சொல்வாயென்று
சர்க்குணியே நிர்க்குணியே தயாளுவேநீ
சார்க்கவே வையத்தைப் படைத்தமாதா
தயாபரியே பராசத்தி தங்கைநீயே.

இ-ள். பார்க்க உமையாளாகிய என் தங்கையே பத்னியாகிய உடற்பிறப்பே பரஞ்சோதியே ஏந்திழையே இன்னமுமியல்பாகத் தானே சொல்லுமம்மாஇளையாளே பராபரியேசொல்வாயென்று சற்குணி நிற்குணி தயாளுவே இந்த வையகத்தைப்படைத்த மாதாவே தயாபரியே பராசத்தியான தங்கையே நீயே சொல்லும்

தங்கையென்று மாயவனுர் கேட்டபோதே
சாங்கமாய் உமையவளும் தயவுகூர்ந்து

பொங்கரவம் அணிந்துசங்கத்தோ டணிந்து
புரமதனை நகைத்தெரித்த புங்கவன் தான்
கங்கைமுடி தரித்தவன்யான் மழுவிரண்டும்
கரந்தணிந்த கண்ணுதலோன் கருதக்கேட்டு
செங்கைதனில் திரிசூலி சொன்னமார்க்கம்
செப்பினேன் மக்களுக்குத் திரமாய்த்தானே.

இ-ள். தங்கையே என்று மாயனார் நின்று கேட்டபோது உமையவளும் மனதானது கூர்ந்துசொல்வாள்: பொங்கரவம் பூண்டு சங்குசக்கரம் தோளணிந்தமாயனேகேளும். திரிபுரத்தை நகைத்து எறித்த புங்கவன் கங்கையை முடியிற்றரித்தவன் மான் மழு இரண்டும் கரத்திற் பிடித்தவராகியக் கண்ணுதல் சொல்லக் கேட்டும் செங்கையிற்றிருசூலம்பிடித்தோன் சொன்னமார்க்கம் யான்சொன்னேன்; மக்கட்குத் தெரியும்படியாகத்தானே நன்று யறியத் திரமாகத்தானும் எ-று. 56

தானென்ற சக்கரத்தின் குலிசயோகம்
தன்னையினி யென்சொல்வேன் தரணியோர்க்கு
மானென்ற மகுடமுடி மன்னர்போற்றும்
மகாபாக்கிய யோகமிது மகேசர்பூசை
ஆனென்ற முதற்செனனம் முடித்ததாலே
ஆதிபரா பரப்பொருள்தான் அன்புகூர்ந்தார்
பானென்ற பாக்கியத்தால் வந்தரேகை
பண்பாக யினிசுருக்கிப் பகருவேனே.

இ-ள். தானாகிய சக்கரத்தின் குலிசையோகந்தனை இனி என்னசொல்வேன் தரணியிலுள்ளோர்க்கு. மகுடமுடிமன்னவர்கள் போற்றும் மகாபாக்கியயோகம்; இது மயேசர்பூசையுமாகும்; முதற்சனனம் முடிந்தால் ஆதிபராபரவஸ்துவானவர் அன்பானது கூர்ந்து பாக்கியத்தினால் வந்த ரேகையின் பலனைப் பண்பாகத்தானே இனி சுருக்கிச் சொல்வேன் எ-று. 57

பகருவேன் யிவனுக்கு வயதுக்குமார்க்கம்
பலன்களைதனை நன்றாகப் பகரக்கேளு
நிகருவேன் யிவன்வயது ஆறுக்குள்ளே
நிட்சயமாய் வீட்டிலுள்ளபொருள் செலவேயாகும்
வகருவேன் யிவன்வயது பத்துக்குள்ளே
வளமாக மூன்றுபேர் பெண்பிறப்பார்
தகருவேன் யிவன்வயது பத்துக்குள்ளே
தனஞ்சேயனார் வாழ்வதுண்டு தன்மையாக

இ-ள் பகரக்கேளும்மேற்கண்டரேகையோனுக்கு வயதும்யோகமும் பலாபலன்களும் நன்றாய்பகரக்கேளும். இவன்வயது ஆறுக்குள் நிச்சயமாகத்தானே இவன்வீட்டிலுள்ள பொருள்கள் யாவும் செலவாகும் வயதுபத்துக்குள்ளே வளமாகத்தானே மூன்றுபெண் குழவிபிறக்கும்; வயதுபத்துக்குள் தனஞ்சயன்போல வாழ்வார்

## மூலமும்-உரையும்

தன்மையப்பா இவன்வயது பதினாலாண்டில்
 தருவான விவாகமது ஆகும்பாரு
உண்மையப்பா யிவன்வயது முப்பத்திரண்டில்
 உற்பனமாய் ஆண்புத்திரன் பிறக்குமென்றே
வண்மையப்பா யிவன்வயது இருபத்தாறில்
 வரிசையுள்ள பிதாவுந்தான் இறப்பதுண்மை
பண்மையப்பா இருபத்தொன்பதிலேதான்
 பண்பான மாதாவும் அடைவதாமே.

இ-ள். தன்மையாகத்தானே மேற்கூறியோனுக்கு வயது பதினாலில் விவாகம்கூடும். வயது இருபத்திரெண்டில் ஆண்புத்திரர்கள் பிறக்கும் வயது இருபத்தாறில் தகப்பன் மரணமாகுவன். வய்து இருபத்தொன்பதில் தாயார் மரணமாகுவள் எ-று. 59

ஆகுமடா யிவன்வயது ஒன்பதாண்டில்
 அன்பான பிதாவுந்தான் பூமிவாங்கும்
வாகுமடா யிவன்வயது முப்பத்தாறில்
 வளமான யிவனுக்கு விவாகமாகும்
தாகுமடா யிவன்வயது முப்பத்தாறில்
 சகடையென்ற யோகம்வந்து தயங்கும்பாரு
ஆகுமடா அட்டசத்தி யிவனுக்கப்பா
 அட்சணத்தில் திசையோகம் நடக்கும்பாரே.

இ-ள். ஆகவும் இவன் வயது ஒன்பதில் இவன் தகப்பன் பூமியானது வாங்குவான். வயது முப்பத்தாறில் விவாகமானது ஆகும். வயது முப்பத்தாறில் இவனுக்கு சகடையென்ற யோகமானது வந்துத்தயங்குவான்; அஷ்டசத்தியும் இவனுக்குண்டாகி அட்சணமே திசையும் யோகமும் நடக்கும். எ-று. 60

## இரேணுகை ரேகையின் பலன்.

ஆமப்பா சக்கரக் குலிசமார்க்கம்
 அன்பாகச் சொல்லிவிட்டேன் அறிவுபாரு
ஓமப்பா இன்னமொரு ரேகைதானும்
 ஓகோகோ சொல்லுகிறேன் உறுதியாக
வாமப்பா வகையுடனே சொன்னமார்க்கம்
 வரிசைசொல்வேன் ரேகையிட வளமைபாராய்
ஏமப்பா ரேணுகையாம் ரேகைதானும்
 ஏடுத்துரைப்பேன் இதனுடைய விபரங்கேளே.

இ-ள். ஆசச்சக்கரக் குலிசையின் மார்க்கம் அன்பாகத்தானே சொல்லிவிட்டேன். அன்றியும் இன்னமொரு ரேகை சொல்லுகிறேன் உறுதியாகத்தானும் அவைவகையுடன் சொன்னமார்க்கம் வரிசையைச்சொல்வேன்; ரேகையின் வளமையைப் பாராய் இரேணுகையென்னும் ரேகையானது எடுத்துரைப்பேன் அதின் விபரங்கேளும் எ-று. 61

கேளப்பா ரேணுகையாம் ரேகைதானும்
கேவலமாய் நடுவேதான் ரெண்டுபுள்ளி
வாளப்பா அங்குலியாம் விரலுக்கிட்ட
வளமாக யிருக்குமடா வரிசைகேளு
தாளப்பா வாழ்வில்லா பெற்றமைந்தன்
தனஞ்செயனும் ஓர்தாயிக் கொரேமைந்தன்
கொள்ளப்பா இல்லாமற் பிறந்தான்மைந்தன்
கொற்றவனும் பிறந்ததொருகீழ்வாசல்மணியே.

இ-ள். கேட்பாயாக ரேணுகையென்னும் ரேகையானது கரத்தினடுவிலே யிரண்டுபுள்ளியிருக்கும் அங்குலியென்னும் விரலின்கிட்ட வளமாகத்தானே யிருக்கும். அவ்வித ரேகையுள்ளோன் தாழ்வில்லாமற்படிக்கு பிறந்தமைந்தனுகும். தனஞ்செயனுகவும் ஓர்தாய்க் கொருமைந்தனுகும் குற்றமொன்றுமில்லாமற் பிறந்தபாலனுகும் இவன்பிறந்த கீழ்வாசல்மனையாகும் எ-று. 62

மனையான சிறுகூரை மனைத்தான்மைந்தன்
மகத்தான யிருமனையாந் தென்பால்வீட்டில்
துணையான இவன்பிறக்கும் போதேயப்பா
துப்பரவால் ஒருவர்தான் இல்லையன்றே
வனையான இவன்பிதா மனையிலில்லை
வண்மையால் பிதாவுந்தான் துலைவில்போனுன்
கனையான இவன்பிறக்கும் போதேயப்பா
காட்சியாய் உண்ணுதற்கும் அன்னமின்றே.

இ-ள். மேற்கூறியமனை சிறுகூரையாகும்; அந்த மகத்தாகிய மனைத்தென்பால் வீட்டில் இவன் பிறக்கும்போது அந்தமனையில் துப்பரவாக அங்கொருவருமில்லையாம்; அன்றியும் இவன் பிதா மனையில் போயிருப்பான்; இவன் பிறக்கும்போதே உண்பதற்கு அன்னமில்லையாம் எ-று. 63

இல்லையென்று இவன்பிறந்த எட்டாம்மாதம்
இயல்பான இவன்யாவும் மனையும்விட்டு
தொல்லைவென்று தொல்லைபட்டு துயரத்தாலே
தோன்றுதலும் வெறுமைகொண்டு துலைநடந்தாள்
அல்லையென்ற ஓரூரில் குடிஇருந்து
அன்னவளும் பசிமயங்கி கீரைகிள்ள
நல்லையென்று ஓர்தலத்தின் பால்ஜெலத்தில்
நலமான கீரையது பரித்தாள்மங்கை.

இ-ள். மேற்கூறிய இவன்பிறந்த எட்டாம்மாதம் இவனுடையத்தாயும் மனையைவிட்டு தொல்லையானதுப்பட்டு துயரத்தினுல் அவன் வெறுமையானதுகொண்டு துலவில்நடந்தாள். ஒருஊரிற் போய்க் குடியிருந்துக்கொண்டு பசியினுல்மயங்கி கீரையானதும் கிள்ள ஓர் தலத்தின் பால் சலத்தில் கீரையானது பரித்தாள் மங்கை எ-று. 64

மங்கைதான் கிரையது பறிக்கும்போது
மகத்தான நிதியொன்று குடந்தானப்போ
செங்கைநிற மான்திரு வாலையோதி
சிவந்தவொரு திரவியந்தான் நிரையநின்றாள்
பங்கயம்போல் நிதியெடுத்து மங்கைதானும்
பத்தினியாள் குபேரன்போ லானாள்பாரு
திங்கள்முக மீசனருளாலே மைந்தன்
திகழ்வாகப் பிறந்ததட்டா மாதமெட்டே.

இ-ள். மேற்கூறிய மங்கை கிரையானது பறிக்கும்போது மகத்தாகிய நிதி ஓர் குடந்தானப்போ செங்கை நிறமாகத்தானேயிரா நின்ற திருவாலைச் சோதியானவள் சிவந்த திரவியமானது நிறைய சுந்தனள் அந்த மங்கை அந்த நிதியை யெடுத்துவந்து மனையில் வைத்துக்கொண்டு குபேரனைப்போலானாள் திங்களை அணிந்த 65
ஈஸ்வரனுர் அருளால் மைந்தனானவன் பிறந்த எட்டாமாதம்

எட்டான மாதத்தில் பிதாவுந்தான்
எடுத்துரைப்பேன்முன் தலமேபோய்ச் சேர்வார்கள்
மட்டான யிவன்பிதுர்த் துயரமப்பா
வண்மையாய்த் தீர்ந்ததப்பா வரிசையாக
இட்டான உறன்முறையார் பந்துசீவன்கள்
இயல்பாகப் புதுமனைதான் எடுத்தார்பாரு
முட்டான முட்டெல்லாம் தீர்ந்ததப்பா
முளையான இளையவளும் குடியிருந்தாள்.

இ-ள்மேற்கூறியவண்ணம்எட்டாமாதத்தில்தகப்பனும்தானும் முன்தலத்திற்போய்ச் சேர்ந்தான். இவனுடைய தகப்பன் துயர் வண்மையாகத்தானே வரிசையாகத் தீர்ந்தனவாம்; அப்போது இஷ்டமாகத்தானே உறவின்முறையாரும் பந்துஜனங்களும்வந்து சேர்வார்கள்; புதுமனையானது கட்டுவான் முட்டாகிய முட்டு பாவும் தீர்ந்தனவாம்; இலட்சுமி இவன்மனையில் குடியிருப்பாள்

இருந்திடவே இவனுடைய நாளுங்கோளும்
இயல்பான மாதமுதல் கண்டமுதலான
பொருந்திடவே யிவனுடைய சக்கிரவாழ்வு
பொல்லாத வேளைக்கு எல்லாங்கேளு
வருந்திடவே யிவன்தானும் சுக்கிரவாரம்
வண்மையாம் பூரமது ரெண்டாங்காலம்
தருந்திடவே மகரமென்ற மாதந்தன்னில்
சார்வாக உதயத்திற் பிறந்தானன்றே.

இ-ள். இருக்கினும் இவனுடைய நாளுங்கோளும் மாதமுதலாகவுங் கண்டமும் பொருந்தும்படியான இவன் சக்கிரத்தின் வாழ்வும் பொல்லாதவேளை இவையெல்லாங்கேளும்; இவன் சுக்கிரவாரம் பூரநட்சத்திரம் இரண்டாங்காலம் தைமாதம் உதை 67
யத்தில் பிறந்தோனாகும் எ-று.

பிறந்திட்ட பாலகன்தான் அழகனப்பா
பிரபலமாய் நாளிலேதான் மிளிர்வானப்பா
மறந்திட்ட யிவன்தானும் ஏழாங்கர்ப்பம்
வண்மையாம் இருபேரும் ஒரு மனதாய்நிற்பர்
சுறந்திட்ட நலமான் கனியினங்கள்
சுயம்பெறவே தென்முகமாய்ப் புணர்ச்சியானுர்
சுறந்திடவே அனுபோகம் செய்ததாலே
காசினியில் நால்கிரகம் உச்சமாமே.

இ-ள். மேற்கூறிய வண்ணம் பிறந்தபாலன் அழகுடையவன்; பிரபலமாக நாளில் மிளிர்வான்; இவன் தாய் குளித்த ஏழாம்நாள் கெர்ப்பத்தில் தரித்தவனுகும் இவன்தாயும் தகப்பனும் ஒருமனதாகநின்று கனியின் வர்க்கங்கள் புசித்துத் தென்புறமாகபடுத்துப் புணர்ச்சியானுர்கள் அவர்கள் அனுபோகம் செய்ததால் இவன்காசினியில் பிறந்தான் நால்கிரகம் உற்சமாகநிற்க எ-று.

கறந்திட்ட காசியினுல் கனத்தயோகம்
கருணையினுல் பிறந்ததொரு தேவனுகும்
பறந்திட்ட இவன்தான்முற் செனனமப்பா
பாக்கியமாய்ப் பிராமணனே ஆவான்மைந்தா
பிறந்திட்ட யிவனுக்குப் பாதபூசை
பிரபைமுதல் யிவனெடுத்து பூசைசெய்தான்
பறந்திட்டான் மிகநொந்து கேட்டதாலே
பரிவாக வரம்வாங்கிப் பாக்கியமாச்சே.

இ-ள். இவனுக்குக் கிடைத்த தனத்தினுல் கனத்தயோகம் வாய்க்கும் கருணையாகப் பிறந்த தேவனுகும். இவனுடைய முன் ஜென்மம் பிராமணனுகும் இவனுக்குப் பாதபூசைசெய்ய பிரபை முதலானதும் இவன்யெடுத்துப் பூசையானது செய்தான். பின்பு நொந்துபாமனை கேட்டதால் பரிவாகத்தானே வரமானது வாங்கியும் பாக்கியவானுகினுன் எ-று. 69

ஆச்சென்ற யிவன்தானும் குருபத்தனப்பா
அன்பான சிவபூசை உள்ளமைந்தன்
வாச்சென்ற இவன்தானும் குபேரன்போலாம்
மகத்தான பல்லக்கு ஏறிவாழ்வான்
கூச்சென்ற வினுவுவித்தை பார்ப்பான்மைந்தன்
குவலயத்தில் ஏழுபிள்ளை பிறக்குமன்றே
வாச்சென்ற யிவனுக்கு தாரம்ரெண்டு
வண்மையாய் முடியுமென்று வகுத்திட்டேனே.

இ-ள். ஆகினும் இவன் குருபத்தனாகும் சிவபூஜை மறவாமல் செய்வன்; குபேரனைப்போல் இவனும் பல்லக்கேறுவன் வித்தை முதலானதும் கற்பன்; ஏழுபிள்ளைகள் பிறக்கும்; இவனுக்குத் தாரம் இரண்டாகும் வண்மையாகத்தானே எ-று. 70

வகுத்திட்ட ரேகைதான் இன்னம்மைந்தா
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளும்
இகுத்திட்ட நீராலே இரண்டுகண்டம்
இனியதொரு வரத்தாலே கண்டமொன்று
நிகுத்திட்ட சுரத்தினுல் கண்டமொன்று
நிச்சயமாய்ச் சத்துருவால் கண்டமொன்று
கழுத்திட்ட சண்முகர்க்குப் பூசைதானும்
கருத்துவந்து செய்திடவே கண்டம்போச்சே.

இ-ள். வகுத்த ரேகையானது இன்னமும் வண்மையாகத் தானே சொல்கிறேன் இன்னமுங் கேட்பாயாக; இவனுக்கு சலத்தில் இரண்டு கண்டமுண்டாம் மரத்தால் ஓர்கண்டமாம் சுரத்தினுல் ஓர் கெண்டமுண்டாம் சத்துருக்களால் ஒரு கண்டமாம்; இவை நீங்க சண்முகனை பூசைசெய்யக் கண்டம் தவரிப்போம்.

கண்டமப்பா அஞ்சுகண்டம் கடினகண்டம்
கனத்ததொரு கண்டாந்தம் நீங்கும்பாரு
வண்டமப்பா கண்டாந்தம் நீங்கும்பாரு
வரிசையாய்த் தீட்சைகளைச் செய்குவாய்நீ
இண்டப்பா யிவனுக்கு வயதுகூறில்
இயல்பாக அன்பத்து எட்டதாகும்
துண்டமப்பா யிவன்வயது திஷ்டாந்தரந்தான்
தூய்தாகச் சொன்னகுரு பலிக்கும்பாரே.

இ-ள். மேற்கூறியக் கண்டங்களில் ஐந்து கண்டம் கடினமான தாம் அதுதீர ஓமதீட்சை செய்ய கண்டம் நீங்கும் ஆகையால் வரிசையாக தீட்சைகளைச்செய்து வருகுவாய்; இவனுக்கு வயதுகூறவேண்டில் அன்பத்தெட்டாகும்; இவன் வயது திருஷ்டாந்தமாகும் சொன்னகுறியும் பலிக்கும் எ-று. 72

பார்க்கவே யிவன்வயதோ திருபதுக்குள்
பண்பான பிதாவுந்தான் யிறப்பான்பாரு
ஏர்க்கவே மிவன்வயதோ திருபத்திரண்டில்
இயல்பான மாதாவும் மரணமன்றோ
ஆர்க்கவே யிவன்குழந்தை ரெண்டுதானும்
அப்பனே போகுமென்று அறிந்துசொல்லு
வார்க்கவே குழவிதான் அஞ்சுமப்பா
வகையாக நிலைக்குமென்று வகுத்திட்டானே.

இ-ள். பார்க்க இவன்வயது இருபதுக்குள் தகப்பன் மரணமாகுவன் வயது இருபத்திரண்டில் தாயார் மரணமாகுவள் இவனுடையக் குழந்தைகள் இரண்டும் மரணமாகிப்போய்விடும்; குழவிகள் ஐந்தும் தீர்க்கமாகத்தானே களைத்திருக்குமென்று வகுத்தேன் எ-று. 73

வருத்திட்ட ரேணுகையின் யோகமெல்லாம்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளும்
இருத்திட்ட யிவன்யோகம் சகடமென்னும்
இயம்பினேன் உமையவள் யியல்பினாலே
தொகுத்திட்ட திசைகர்மம் யோகவாழ்க்கை
சொல்லிவிட்டேன் வரலாறு கருதியாலே
அகுத்திட்டேன் ஆயுசுடன் எல்லாந்தானும்
அப்பனே ரேகையின்னம் அறைகிறேனே.

இ-ள். வருத்த ரேணுகை ரேகையின்பலன்களெல்லாம்வண்மையாகச் சொல்லுகிறேன் கேளும்; இவன்யோகம் சகடயோகமென்று இயம்பினேன்; உமையவளினுடைய இயல்பினால் திசைகர்ம யோகவாழ்க்கைகளை சொன்னேன்; கருத்தின்படி வரலாற்றையும் ஆசையுடன் யாவையும்சொன்னேன்; ரேகையின்னமுஞ் சொல்வேன் எ-று. 74

## விஷ்ணுபந்த ரேகையின் பலன்.

அறைகிறேன் ரேகையொன்று அருமையாக
ஆச்சரியம் ரேகையிட அருமைகேளு
விறைகிறேன் விஷ்ணுவந்த ரேகையொன்று
விகற்பமின்றி உண்டதனை விரும்பிக்கேளு
துறைகிறேன் மால்விரலில் தாய்விரலில்தான்
துயம்பெறவே ஐந்துபுள்ளி ரெண்டுரேகை
மறைகிறேன் மால்விரலில் ஏறிநின்றால்
மகத்தான யோகமடா மைந்தாகேளே.

இ-ள். சொல்வேன் ரேகையானது ஒன்று அருமையாகத்தானும் கேட்பாயாக: விஷ்ணுபக்தரேகை ஒன்றுண்டு அதனைவிளம்பக்கேளும் மால்விரலும் தாய்விரலிலும் ஐந்துபிள்ளையும் இரண்டுரேகையும் மால்விரலின்மேல்யேறி நிற்குமாகின் அவன்தனக்குமகத்தாகிய யோக முண்டாம் எ-று. 75

கேட்கவே விஷ்ணுபந்த ரேகையானால்
கேள்வியால் புண்ணியங்கள் செய்தமைந்தன்
ஆட்கவே யிவன்தானும் பிறக்கும்போது
ஆச்சரிய மாகயிவன் பிறந்தான்மைந்தன்
நாட்கவே நன்மைபெற்ற மைந்தனப்பா
நலமான யோகத்தை நாட்டுவேனே
வாட்கவே யிவன்பிறவி ஐந்துபேராம்
வகையாகப் பிறந்திட்ட வண்மையாலே.

இ-ள். கேட்பாயாக மேற்கூறிய விஷ்ணுபந்த ரேகையாயின் புண்ணியம்செய்தப் பாலனாகும் இவன் பிறக்கும்போது ஆச்சரியமுடன் பிறந்தான் நன்மைபெற்ற மைந்தனாகும்; இவனுக்குண்டாகிய நலமான யோகவாழ்க்கையை சொல்வேன் இவனுடன்பிறந்த பிறவி ஐந்து பெயராகும் இவன் வகையாகப் பிறந்தோனாகும் 76

வண்மையாம் யிவன்மூன்றும் பிறவியாகும்
வாகாக வடவாசல் வீட்டில்ஜென்மம்
உண்மையாய் யிவன்பிறக்கும் போதுமைந்தா
உற்றதொரு அவிடம்வுற்ற பெண்கள்நான்காம்
அண்மையா யப்பொழுது பிறவிபார்த்து
அடவான பாலன்யென அன்புகூர்ந்து
கண்மையா யிவன்பிதா வீட்டிலுற்றான்
காட்சியாய்த் தாய்மாமன் மூன்றுபேரே.

இ-ள். மேற்கூறிய ஐந்துபெயரில் இவன்மூன்றும் பிறவியாகும்; வடவாசல்வீட்டில் ஜெனனமானவன் இவன்பிறக்கும்போது அவ்விடத்திலிருந்த பெண்கள் நாலு பெயராகும்; அவர்கள் அப்போது இவன் பிறப்பைப்பார்த்து நன்மையுடைய பாலனென்று அன்பானது கூர்ந்தனர்; இவன்பிதாவும் வீட்டிலிருக் 77
தான் இவனுக்கு அம்மான் மூன்று பேராகும் எ-று.

பேரான மைந்தனிவன் பிறந்தபோது
பேணியே வீட்டிலே துயர்கள்போச்சே
காரான உமையவள்தன் கடாட்சத்தாலே
கனத்ததொரு யோகமது வந்ததப்பா
தூரான பிதாவுடைய துயரம்போச்சு
துன்பமென்ப தெல்லாமும் தூரம்போச்சே
தாரான சார்பதுதான் அனேகவாழ்க்கை
சாங்கமாய் யிவன்பெருமை சொல்லுவேனே

இ-ள். பேராகத்தானே இவன் பிறந்தபோது வீட்டிலிருந்தத் துயரங்கள் யாவும் நீங்கிப்போச்சுதாம்; உமையவள் கடாட்சத்தினல் கனமாகியயோகமொன்று வந்ததாம்; தகப்பனுடைய துயரமும் போச்சாம் துன்மையானது யாவும் விலகிற்றும் சார்பாகத் தானே அனேகவாழ்க்கையும் இவன் பெருமையும் சொல்வேன்

சொல்லவே யிவன்தானும் ஏழாங்கெற்பம்
சொல்லுமொரு முதற்சாமம் தரித்தகெற்பம்
அல்லவே யிவன்பிதா மாதர்தானும்
அன்பான புணர்ச்சியும்நல் யோகமப்பா
மல்லவே யிவன்தானும் மகரமாதம்
வளமான ஓணம்நாலினிற் பிறந்தான்
நல்லவே தசமியொடு மதியின்வாரம்
நலமாகப் பிறந்ததிவன் நாடிக்கேளே

இ-ள். சொல்லிய இவன்தாய்குளித்த ஏழாம் நாள் கெர்ப்பந்தரித்தவனாகும்; அதினும் முதற்சாமமாகும்; இவன் பிதாவும் மாதாவும் அன்பாகத்தானே புணர்ச்சிசெய்த வேளையின் பலத்தால் யோகவானாய் இவன் தைமாதம் திருவோண நட்சத்திரம் நாலாங்காலில் பிறந்தான்; திதிதசமி வாரம் திங்கள் இவன் 79
பிறந்தனனும், எ-று.

கேளப்பா விஷ்ணுபந்தம் இன்னந்தானும்
கேவலமாய் யிவன்பிறந்த நாலாமாதம்
கேளப்பா இதுவுமன்றி பத்தாமாதம்
வெய்யவன்போல் வீட்டிலே அனல்தான்கொள்ளு
வீளப்பா வருமையினி பிடித்துக்கொண்டு
விற்பனமாய்த் தாயிறந்தாள் விழலதாக
ஆளப்பா உறன்முறையார் பகைவரானர்
அன்பாக அதன்மேலே அருளுண்டாச்சே

இ-ள். கேட்பாயாக விஷ்ணுவந்த ரேகையின் பலன் இன்னமும் இவன் பிறந்த நாலாமாதம் அல்லது பத்தாமாதம் வீட்டில் அனலானது கொள்ளும் அத்துடன் வறுமையும் பிணியும் பிடித்துக்கொண்டு இவன் தாயார் மரணமாகினள்; விழலாகவும் உறவின் முறையாரும் பகையானர்கள் அதின்மேல் இவனுக்கு அருளானது உண்டாயினவாம் எ-று. 80

ஆகவே இன்னமுந்தான் கேட்பாயப்பா
ஆச்சரியம் பெற்றமைந்தன் அதிகயோகம்
ஆகவே இவன்வயதோ ரெழுபத்தைந்தாம்
அப்பனே இவனுக்குத் தாரமூன்றும்
வாகவே யிவனுக்குப் பிள்ளையாறும்
வரிசையாய் ஆண்மூன்று பெண்தான் மூன்று
போகவே தேவிமா ரிரண்டுபேர்க்குள்
புகலவே பிள்ளையொரு தாரத்தின்றே

இ-ள். ஆகும்படியாக இன்னமுங் கேட்பாயாக; இவன் ஆச்சரியமுள்ள அதிக யோகசாலியாகும்; இவனுக்கு வயது எழுபத்தைந்தாம்' தாரமானது மூன்றும், சந்ததிகள் ஆறும் அதில் ஆண் மூன்று பெண்மூன்றும்; இவனுடைய மனைவியார் இரண்டுபேருக்குள் ஒரு தாரத்திற்குப் பிள்ளை யில்லை எ-று. 81

இல்லையென்று இன்னமுந்தான் சொல்லக்கேளு
இயல்பாகச் சொல்லுகிறேன் யியன்றமட்டும்
அல்லையென்று சொல்லுகிறேன் அறிவுள்ளோர்க்கு
அப்பனே யின்னமுந்தான் அறிந்துபாரு
கல்லையென்ற கண்ணுதலாள் சொன்னமார்க்கம்
கருணையால் உமையவள்தான் கடாட்சிப்பாள்பார்
தொல்லையென்றும் இல்லையடா விஷ்ணுபந்தம்
சொல்லுகிறேன் இன்னமுந்தான் சுருதிகேளே

இ-ள். மேற்கூறியதில் இன்னமுஞ் சொல்வேன் கேளும்; இயல்பாகத்தானே ஈன்றமட்டுஞ் சொல்வேன் அறிவுள்ளோர்க்கு இன்னமும் அறிந்துப்பார்ப்பாய். கண்ணுதலாகிய உமையாள் சொன்னமார்க்கம் காட்சியாகும் தொல்லையானது ஒன்றுமில்லை விஷ்ணுபந்தரேகையால் அன்றியும் சொல்குறேன் இன்னமும் சுருதியைக்கேளும் எ-று. 82

கேட்கவே இவன்வயது பதினாறுக்குள்
கெணிதமுள்ள விவாகமுந்தான் முடியும்மைந்தா
ஆட்கவே இவனுக்கு அஞ்சுகண்டம்
அப்பளே உண்டாம் என்றுயந்து சொல்லு
வாட்கவே இவனுக்குப் பிள்ளை தானும்
வண்மையுள்ள பத்துபிள்ளை வரிசையாகும்
கோட்கவே இவன்யோகம் தனயோகம்தான்
கொற்றவன்தான் அதிகாரம் செய்குவானே

இ-ள். கேட்பாயாக இவன்வயது பதினாறுக்குள் விவாகம் முடியும்; இவனுக்கு ஐந்துகண்டமுண்டாம் சந்ததிபத்துண்டாம்; இவன்யோகம் தனயோகம் இவன் கொற்றவன்போல் அதிகாரம் செய்வான் எ-று. 83

செய்யவே இவன்தான் சற்சனனே ஆகும்
செப்புகிறேன் நீராலே இரண்டுகண்டம்
வையவே மிருகத்தால் கண்டம் ஒன்று
வரிசையாய்ச் சொல்லுகிறேன் சத்துருவால்ஒன்று
மெய்யவே வியாதியினால் இரண்டுகண்டம்
மேன்மையாய் உண்டென்று விளம்பினேன்பார்
வெய்யவே கண்டமெல்லாம் தீரவேண்டி
வேதவருக் கர்ச்சனைதான் விரும்பினானே.

இ-ள். செய்யினும் இவன் சர்ச்சனனாகும்; சலத்தினால் கண்டம் ரெண்டாம்; மிருகத்தினால் கண்டம் ஒன்றாம்; சத்துருக்களால் கண்டம ஒன்று, வியாதியினால் கண்டம் இரண்டு, இவைகள் வந்து வாய்க்கும்; இவைகள் தீரும்படி வேலவர்க்கு அர்ச்சனைப் புரிவான் எ-று. 84

விரும்பிட்ட இவன்வினைத் தொழில்கள்சொல்வான்
விரிவான வேதத்தை விரும்புவான்பார்
அரும்பிட்ட சிவபூசை நாளும் செய்வான்
அப்பனே இன்னமுந்தான் அறையக்கேளு
பொரும்பிட்ட இவனுக்குப் பூமியோகம்
பொருந்துமடா மைந்தனே புண்ணியமாக
தரும்பிட்ட புதுமனையும் குதிரைலாயம்
சார்வாக அஷ்டம் உண்டாய் வாழ்குவானே.

இ-ள். விரும்பும்படியாக இவன் வினைவினால் தொழில்கள் சொல்வன் வேதநூற்களை விரும்புவன் சிவபூசைகள் நாளும் செய்வான்; இன்னமுஞ் சொல்லக்கேளும் இவனுக்குப் பூமியோகமும் பொருந்தும் புண்ணியத்தினால் அத்துடன் புதுமனையும் குதிரைலாயமும் கட்டி அஸ்வமுண்டாகி வாழ்வான் எ-று. 85

வாழ்வான விஷ்ணுபக்த ரேகைமைந்தா
மானிலத்தில் சொல்லிவிட்டேன் உள்ளதெல்லாம்
நாழ்வான நாயமெல்லாம் மறைப்பொன்றில்லை
நலமான மனோன்மணியாள் நவின்றமார்க்கம்
ஆழ்வான ஞாதியந்தம் கண்டுதேறு
அப்பனே இன்னமும் உண்டாய்ந்துகேளு
வீழ்வானதில்லாமற் சொல்வேன்மைந்தா
விகற்பமாய் ரேகையொன்று சொல்லுவேனே.

இ-ள். வாழ்க விஷ்ணுபக்த ரேகையின் பலன் மானிலமீதுச் சொல்லிவிட்டேன் உள்ளயாவும் நாயமேயல்லாமல் மறப்பான் தொன்றுமில்லை; நலமாகத்தானே மனோன்மணியாள் சொன்ன மார்க்கம்தனில் ஆதியந்தமும் கண்டு தேர்வாய்; அன்றியும் இன்னமுமுண்டு அதை ஆய்ந்துக்கேட்பாய்; இழிவானதில்லாமற் சொல்வேன் விகற்பமாகியரேகை ஒன்று கேளும் எ-று. 86

## வஜ்ஜிரமணிரேகையின் பலன்.

சொல்லுகிறேன் ரேகைஒன்று இன்னம்கேளு
சொல்லரிய முப்பொருள்கள் துலங்கத்தானே
அல்லுகிறேன் வச்சிரமணி ரேகை ஒன்று
அப்பனே சொல்லுகிறேன் அடவாய்க்கேளு
சொல்லுகிறேன் நடுக்கரத்தில் ஐவிந்தம்ரெண்டு
உற்பனமாம் வச்சிரமணி ரேகைமூன்று
மல்லுகுவேன் இரண்டுபுள்ளி மூன்றுரேகை
வளமாக இருக்குமப்பா வண்மைபாரே

இ-ள். சொல்கிறேன் ரேகை ஒன்று கேளும் சொல்லுதற் கரிதாகிய பழம்பொருள் யாவும் துலங்கும்படியாகவும் அல்ல வஜ்ஜிரமணிரேகை ஒன்று சொல்குறேன் அடவாகக்கேளும் நடுகரத்தில் ஐவிந்தம்ரெண்டு வச்சிரமணிரேகை மூன்றும் அதில் இரண்டு புள்ளியும் மூன்றுரேகையும் வளமாகத்தானே யிருக்கும் வண்மையைப் பார்ப்பாய் எ-று. 87

பார்க்கவே வச்சிரமணி வைவிந்தம்ரெண்டு
பண்பாக இருக்குமென்றால் குணத்தைக்கேளு
ஏர்க்கவே இவன்பிறவி நல்லயோகம்
இயம்புகிறேன் இவன்பிறவி மூன்றுபேராம்
கார்க்கவே இரண்டாணும் ஒன்றுபெண்ணும்
கருணையால் மூன்றுபேர் பிறவியாகும்
தார்க்கவே இவன்தானும் அஞ்சாங்கெர்ப்பம்
தாஷடகந்தான் மகநாளிற் பிறப்பான்றனே

இ-ள். பார்க்க வச்சிரமணிரேகையும் ஐவிந்தரேகையு மிவ்வி ரெண்டு மிருக்குமாகின் அதின் குணத்தைக்கேளும் அவ்வித

ரேகையுள்ளோன் பிறவியோகவானாகும் இவனுடன் பிறந்தவர்கள் மூன்றுபெயராம் அதில் இரண்டு ஆணாகும் ஒன்றுப் பெண்ணாகும்; கருணையான மூன்றுபேரும் பிறவியாகும்; இவன் தாயார் துளித்த ஐந்தாநாள் கெற்பந் தரித்தவன், மகநட்சத்திரத்தில் ஜெனனமானவனாகும் எ-று. 88

ஆனதொரு கிழக்கான வாசல்வீட்டில்
அடவாகப் பிறந்தகிவன் ஆண்மையாக
வானதொரு குருவாரம் மத்தியானந்தான்
வண்மையாம் சஷ்டியென்ற திதிதானாகும்
போனதொருபுரட்டாசி மாதத்தில்தான்
கொற்றவன்தான் பிறந்திட்டான் திசையினாலே
நானதொரு யிவன்பிறந்த போதுமைந்தா
நலமான தன்பிறவிக் காகாதன்றே.

இ-ள். ஆனகிழக்கு பக்கமானவாசலுள்ள வீட்டில் பிறந்தோன்; ஆண்மையுள்ளவன், வியாழக்கிழமை மத்தியானம் சஷ்டிதிதியில் புரட்டாசிமாதத்தில் இவன்பிறந்தான்; திசையால் பிவன்பிறந்தது தன்னுடைய பிறவிக்கு ஆகாதாம் எ-று, 89

அன்றெனவே தன்பிறவி அப்பாலேசொல்வேன்
அன்னவந்தான் பிறந்திட்டான் எட்டாமாதம்
குன்றெனவே ஒருபிள்ளை அடுப்பில்விழ்ந்து
குறிப்பாக யிறந்ததென்று கூறினோகாண்
நன்றெனவே யிவன்பிறந்த நாலாமாண்டு
நலமான பிதாவிடத் துயரமாச்சே
வன்றெனவே யிவனுடைய யோகவாழ்க்கை
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளே

இ-ள். மேற்கூறியோன் பிறவியைச் சொல்வேன்' இவன் பிறந்த எட்டாமாதம் ஒருபிள்ளை அடுப்பில் விழ்ந்து மாணமாகினதுவாம். இவன் பிறந்த நாலாம் வருடம் தன்தகப்பனுக்கு துயரம் ஆகும்; இவனுடைய யோகவாழ்க்கையதனைச் சொல்லுகிறேன் கேளும் எ-று. 90

கேளப்பா யிவனுக்குத் தேவியொன்று
கிருபையுடன் வாழ்ந்திருப்பார் கீர்த்திகேளு
வாளப்பா வகையுடனே வாழ்ந்திருந்து
வரிசையாய்ப் பிள்ளைகள் பதின்மூன்றாம்
கோளப்பா யில்லாமல் பிறப்பார்மைந்தா
கொற்றவன்றான் பாக்கியமுற்று வாழ்வானன்றே
வேளப்பா பிள்ளைதான் அஞ்சுபேரும்
வேதாந்த சற்குணன்பொன் கிடைக்கும்பாரே.

இ-ள். கேட்பாயாக; அவனுக்குமனைவி ஒன்றாகும்; கிருபை யோடுக் கூடிவாழ்ந்திருப்பார்கள்; கீர்த்தியானதைக் கேளும்; வரிசையாகத்தானே வாழ்ந்திருந்தும் பிள்ளைகள் பதின் மூன்றும் பெறுகுவர் குற்றமில்லாதமைந்தராகும் தலைவனும் பாக்கியமுற்று வாழ்குவான்; அம்மைந்தர்களில் இவன் ஐந்தாம் பேராகும் இவனுக்குப் பொன்னானது கிடைக்குமாம் எ-று. 91

கிடைக்குமென்று உத்தரவு சொன்னாய்தாயே
கிருபையுடன் ஏதாலே கிடைக்குமம்மா
படைக்குமென்று எந்தனுக்குப் பகர்ந்தசோதி
பார்வதியே பராபரியே சொல்லுமம்மா
அடைக்கலம் உன்பாதமெனப் பிரமதேவன்
ஆனந்தமதியமிர்த அம்பிகைத்தாய்
துடைக்கவே சாஸ்திரங்கள் அநேகங்கோடி
சொன்னஅம்பாள் இன்னமுந்தான்சொல்லுவாளே

இ-ள்- கிடைக்குமென்று சொன்னதாயே அது யேதாலே கிடைக்கும் படைக்குமென்று யெந்தனுக்குப் பகர்ந்த சோதியே பார்வதி சொல்லும் அம்மாவென்று கேட்க அடக்கல் முன்பாத மென்றும் பிரமதேவன் அப்போது ஆனந்த மதியமிர்தமாகிய அம்பிகையாள் மனது கூர்ந்து சாஸ்திரங்கள் அனேகங்கோடிச் சொன்ன அம்பாள் இன்னமும் சொல்லத்துடங்கினாள் எ-று. 92

சொல்லுவாள் மனோன்மணியாள் என்னைப்பெற்ற
சுந்தரிதான் தனங்கிடைக்கும் வகையைத்தானே
மல்லுவாள் வாலைபரஞ் சோதியான
வச்சிரமணி நிகரானமுறவலாள்தான்
ஒல்லுவாள் உபதேசம் உறுதியாக
உத்தமனும் பிரமனுளம் உவகைபூப்ப
அல்லுவாள் அகிலாண்ட கோடிமாதா
ஆயிழையாம் சிற்பரிதாம் அருள்செய்வாளே.

இ-ள். சொல்லுவாள் மனோன்மணியாகிய என்னைப்பெற்ற சுந்தரியும் தனங்கிடைக்கும் வகையைச் சொல்லுவாள் அவள் யாரெனில் வாலை பரஞ்சோதியாய் வச்சிரமணிபோன்ற உமை யாள் கூறும் உபதேசம் உருதியாக உத்தமனாகிய பிரமன்மனங் களிக்க அல்லுவாள் அகிலாண்டக்கோடியானமாதா ஆயிழை யாயும் சிற்பரியாயு விளங்கிய யென்தாய் அருள்செய்வாள் எ-று.

செய்யவே யிவனுக்கு அஞ்சாம்பிள்ளை
செய்ததொரு தவத்தாலே மைந்தாகேளு
வையவே ஈஸ்வரர்க்குப் பாதபூசை
வண்மையாய்ச் செய்ததினால் எல்லாஞ்சித்தி

உய்யவே அதனாலே யிவன்தனக்கு
உற்றதொரு ரிஷபவாகன மீதேறும்
ஐயரவர்ஐயமில்லாப் பொருள்களீந்தார்
அனந்தயோகம் இதுவே அருளாமன்றே

இ-ள். செய்யவும் இவனுக்கு ஐந்தாம்பிள்ளை பாலன்செய்த தவத்தாலும் ஈஸ்பரனாருக்குப் பாதபூசை பிண்மையாகத்தானே செய்ததினால் எல்லாம் சித்தியாகி இதனால் இவன்றனக்கு ரிஷப வாகன மேரும்பரமேஸ்வரனார் கிருபையானது கூர்ந்து இவனுக் குப்பொருள் யீந்தார் ஆனந்தயோகத்தின் அருளாகும். எ-று.

அன்றப்பா இக்குழந்தை அஞ்சுபேறும்
அருளான சதயத்தில் நாலாங்காலாம்
குன்றப்பா குலமகனும் இவனைப்போலும்
குவலயத்தி லில்லையில்லை குபேரன்ஒப்பு
மன்றப்பா மண்ணும்விண்ணும் வந்துபோற்றும்
மகாபாக்கிய யோகமிது மருவிக்கேளு
நன்றப்பா பூருவத்திற் செய்தபுண்ணியம்
நரேந்திரனாய் வந்துதித்தான் நயந்துபாரே

இ-ள். ஆனதால் இக்குழந்தை ஐந்தாம்பேறுகும் சதைய நட்சத்திரம் நாலாங்காலாம் குலமகனுகும் இவனைப்போல் குவலயத்தில் யாருமில்லையாம்; குபேரனுக்கு ஒப்பாகுவன் மண் ணும் விண்ணும் வந்து போற்றும் மகாபாக்கிய யோகமாகும் இவன்பூர்வத்திற் செய்தபுண்ணியமாகும்; இப்போது நரேந்திர னாகத்தானே பூமியில்வந்துதித்தான் எ-று. 95

பார்க்கவேயினுடைய யோகத்தாலே
பண்பான குழந்தைக்கு வயதுமூன்றில்
ஏர்க்கவே அக்குழந்தை தானேமைந்தா
இயல்பாக நிலத்திலேகுழிதான்கெல்லி
வார்க்கவே விளையாடும் போதுதானே
வண்மையாய்ப் பணம்கண்டு பிதாவுக்குறைத்தான்
தார்க்கவே பிதாவும்போய்க் கண்டுதானே
சற்சனனாய்நிதியெடுத்து வாழ்ந்தானன்றே

இ-ள். பார்க்கயிவனுடைய யோகத்தினால் பண்பாகிய குழந்தைக்கு வயதானமூன்றில் அக்குழந்தையானது பூமியில் குழியானது கெல்லி விளையாடும்போது வண்ணமாகிய பணப்பு தையல்கண்டு தந்தையிடம் வந்துரைக்க அதைப்பிதாவும்போய் கண்டெடுத்துக்கொண்டு வாழ்வன் எ-று. 96

அன்றெனவே அன்னமுந்தான் நிதியெடுத்து
ஆனந்த மகா யோகம் அணுகிற்றன்றே

குன்றெனவே இவனுடைய யோகவாழ்க்கை
குவலயத்தில் பிரமாவே யெல்லாஞ்சொல்வேன்
நன்றெனவேநானுனக்குச் சொல்லுமார்க்கம்
நலமுடனே முடியுமென்று நாடிக்காண்பாய்
ஒன்றெனவே இருந்ததொரு சகலஜீவன்
உண்மையாய் ரட்சைய தாம் உறுதிசொல்லே.

இ-ள். அன்றெனை இன்னமும் நிரியானது யெடுத்து ஆனந்தமாகிய யோகமானது அனுகி குன்றைப்போல் இவனுடைய யோகவாழ்க்கையை பூமியின்மீது சொல்லக்கேளும், பிரமாவே நானுனக்குச் சொல்லும்படியான மார்க்கம் நலமாகத்தானே முடியுமென்றுங்காண்பாய் இருக்கும்படியாகிய சகலஜீவன் உண்மையாக ரட்சிப்பது உண்மையாம் எ-று. 97

சொல்லவுந்தான் தேவர்களும் முனிவோரெல்லாம்
சொற்பெரிய உமையவளைத் தொழுதுநின்றார்
வெல்லவுந்தான் மூவுலகு தன்னைவெல்ல
வேதாந்தம் உணர்ந்தபெரியோரும்வெல்ல
அல்லவும் அஷ்டதிக்கு பாலர்மெச்ச
அருளான கும்பமுனி வசிஷ்டர்மெச்ச
வல்லமையாய்ச் சொன்னசொற்கள் எல்லாம்கேட்க
வண்மையாய்த் தொழுதிறஞ்சி வழிகேட்பாளே.

இ-ள். மேற்கூறிய வண்ணம் உமையாள் சொல்ல தேவர்கள் முனிவர்கள் யாவரும் உமையவளைத் தொழுதுநிற்க மூவுலகத்தையும் வெல்லவேதாந்த முணர்ந்த பெரியோர்களும்வெல்ல அஷ்டதிக்குப்பாலர்களும் மெச்ச அருளாகிய கும்பமுனியும் வசிஷ்டர் மெச்சவல்லமையாகத்தானே சொன்ன சொற்களை யெல்லாங்கேட்ட வண்மையாகத்தானே தொழுதுவழிகேட்பா

கேட்கவே முன்சொன்ன மூன்றுகாண்டம்
கேவலமாய் யிக்காண்டம் ஒன்றுங்கூட
ஆட்கவே காண்டந்தான் நான்கதாச்சு
அப்பனே சாலமுந்தான் அன்பாய்ச்சொன்னேன்
வாட்கவே வம்சமுதற் கோத்திரமெல்லாம்
வண்மையாம் நடக்கைமுதல் பிறவிசொன்னேன்
ஏட்கவே யிந்நூலிற் சகலசெய்தி
எம்பிரா னருளாலே இயம்பிட்டேனே.

இ-ள். கேழ்க்க முன்சொன்ன மூன்றுகாண்டமும் இக்காண்டம் ஒன்றையுங்கூட்ட காண்டம் நான்காச்சு; அதிலுள்ளதைச் சகலமுஞ் சொன்னேன்; வாழ்க்கை முதலாக வம்சமும் கோத்திரமும் நடைக்கை முதலான விபரமுஞ் சொன்னேன்; இந்நூலிற் சகல செய்தியும் எம்பிரானருளால் இயம்பினேன் எ-று.

இயம்பிட்டேன் நாலாங்காண்டத்தை மைந்தா
இன்னமுந்தான் சுவாமிசொன்ன தியம்புவேன்யான்
நயம்பிட்டேன் நான்முகனே கைலாசர்சொன்ன
நலமுள்ள கேசரியின் நடத்தையெல்லாம்
வயம்பிட்டேன் மழுவிடையான் சொன்னமார்க்கம்
வஞ்சனைகள் இல்லாமல் வகுத்துச்சொன்னேன்
துயம்பிட்டேன் தூய்சடையோன் சொன்னமார்க்கம்
சுந்திரம்போல் இந்நூலைத் துலக்கிடாயே.

இ-ள். இயம்பினேன் நாலாங்காண்டத்தையும் இன்னமும் சுவாமி சொன்னதை இயம்புவேன் ஓ நான்முகனே கயிலாசநாதர் சொன்னக்கேசரியின் நடக்கையாவும் மழுவிடையான் சொன்ன மார்க்கத்தையும் வஞ்சனைகள் இல்லாமல் வகுத்துச்சொன்னேன்; தூயசடையோனாகிய பரமசிவன் சொன்னமார்க்கத்தைச் சுந்திரமாக இந்நூலைத் துலக்கஞ் செய்வாய் எ-று. 100

துலங்கிட்ட இந்நூலைப் பழித்தபேர்க்கு
தொலையாத நரகம்வந்து எய்துங்கண்டாய்
அலங்கிட்ட அநேகநாள் ஈசனைவேண்டி
அன்பாகத்தவமது செய்தறிந்தேன் மார்க்கம்
நலம்பெறவே கயிலாசநாதர்பார்த்து
நயமாக எந்தனுக்கு உபதேசித்தார்
வலம்பெறவே மகாரிஷிகள் கேளுங்களென்று
வசனித்தாள் கேசரியை ஆதித்தாயே.

இ-ள். துலங்கும்படியாகிய இந்நூலைப் பழித்தபேர்க்கு தொலையாத நரகமானது வந்தெய்தும்; அனேகநாளாயீஸ்வரனைவேண்டி அன்பாகத்தானே தவங்கள் செய்து யான்தெரிந்தேன். இந்த மார்க்கம் நலம் பெறும்படியாக கயிலாச நாதரானவர் பார்த்து நயமாகத்தானே எந்தனுக்கு உபதேசித்தார் மகாரிஷிகளே கேளுங்களென்று வசனித்தாள் கேசரியை ஆதித்தாயாகிய உமையவளும் எ-று. 101

நான்காவது காண்டம் முற்றிற்று.

ஆககாண்டம் ச-க்கு பாடல் ௩0௫.

---

## ஐந்தாவது காண்டம்.

ஆதியே ஐந்தெழுத்தாம் உமையேதாயே
அற்புதமே மெய்ப்பொருளே ஆதிசோதி
நீதியே பரஞ்சுடரே நிர்மலத்தாய்
நீலவர்ண கலாபமயில் சாயலாளே

வாதியேவாலைபர மேஸ்வரியே அம்பாள்
வச்ரமணி மரகதப்பெண் உலகமாதா
சோதியே சொக்கர்மகிழ் மீனாட்சிதாயே
சொல்லுவாய் நடனசபை துலங்குவாளே.

இ-ள். ஆதியாகியும் ஐந்தெழுத்தாகியும் நின்ற உமையே தாயே அற்புதமாகிய மெய்ப்பொருளே சோதியே நீதியாகியப் பரஞ்சுடரே நிர்மலமாகியத் தாயேவாதியே வாலைபரமேஸ்வரியே வச்சிரமணியான மரகதப் பெண்ணாகிய உலகமாதாவே சொக்கர்மகிழும் மீனாட்சித்தாயே சொல்வாய் நடனசபைத் துலங்கியத் தாயே எ-று. 1

துலங்கவே யென்தாயே பரஞ்சோதி அம்பாள்
துன்பவினை தீர்த்தருளத் துலங்குவாயே
அலங்கவே ஆதியந்தம் நிறைந்தசோதி
அற்புதமேசிற்பரியே ஆதிசத்தி
பலங்கவேபராபரியே பராசத்திதேவி
பகருமம்மா உள்ளதெல்லாம் பாவியோர்க்கு
நிலங்கவே நிமிலிதிரி சூலியென்று
நின்றுதொழ ஐந்தாங்காண்டம் சொன்னாள்பாரே.

இ-ள். துலங்கும்படியாகிய யென்தாயே பரஞ்சோதியே துன்பவினைகளைத் தீர்த்தருளத் துலங்குவாயே; ஆதியந்தமாக நிறைந்தசோதி அற்புதமாகியச் சிற்பரியே ஆதிசத்தியே பராபரியே பராசத்தியாகிய தேவியே பகருவாய் அம்மணி; உள்ளது யாவும் பாவியாகிய எங்கட்கு நிமிலிதிரிசூலி என்று இவ்விதமாகத்தொழுக ஐந்தாங்காண்டமதை யெடுத்துக்கூறினாள் எ-று. 2

சொல்லவென்று முனிவர்களும் தேவர்கேட்க
சொல்லினாள் உமையவள்தான் சொல்லினாள்பார்
அல்லவென்று மகிமையுள்ள சிலதுரேகை
அன்பாக சொல்லிவைத்த அருமைகேளு
மல்லவென்று வண்மையினாற் சொல்லப்பட்ட
வாகான பிரமாவும் வணங்கிக்கேட்க
நல்லதென்று நாயகியாள் சொன்னமார்க்கம்
நான்சொல்வேன் கமலமுனி நன்றாய்க்கேளே.

இ-ள். சொல்லவேண்டுமென்று தேவர்களும் முனிவர்க்கங்களுங்கேட்க உமையவள் சொல்லுவாள். மகிமையுள்ள சிலதுரேகை அன்பாகத்தானே சொல்லிவைத்த அதின் அருமையைக் கேளும் அல்லவென்று வண்மையினாற் சொல்லப்பட்ட பிரமாவும் வணங்கிக்கேட்க நல்லதென்றுத்தானே நாயகியாள் சொன்ன மார்க்கம்போல் தானேகமலமுனி சொல்வேன் நன்றாகக்கேளீர்.

## மால்விந்தரேகை சமலிரேகையின் பலன்.

கேளப்பா மால்விந்த ரேகைகண்டால்
கேவலமாய்ச் சமலியென்பர் யிரண்டுரேகை
வாளப்பா யிரண்டுபுள்ளி நான்குரேகை
வளமாக நடுவிரலில் யிருக்கும்பாரு
ஆளப்பா மால்விரலில் கிழேநிற்கும்
அன்பான ரேகைகண்டால் அறைகுவேன்கேள்
நாளப்பா யிவனுடைய யோகவாழ்க்கை
நலமாக நானுனக்குச் சொல்லுவேனே.

இ-ள். கேட்பாயாக: மால்விந்தரேகையைக் கண்டால் சமலி யென்பார் இரண்டுரேகை அது இரண்டு புள்ளியும் நான்குரேகை யும் நடுவிரலிலிருக்கும் மால்விரலில் கிழேநிற்கும். அப்படிக் கொத்த ரேகையைக் கண்டால் சொல்வேன் கேள் அவ்வித ரேகையுடையோனுடைய யோகவாழ்க்கையை நலமாகத்தானே நான் உனக்குச் சொல்வேன் எ-று. 4

சொல்லுவேன் யிவன்பிறந்த யோகவாழ்க்கை
சொல்லரிது மைந்தாநீ சுருதிகேளு
அல்லுவேன் யிவன்பிறந்த மனைதான்மைந்தா
அப்பனே சிறுகூரை கிழக்குவாசல்
ஒல்லுவேன் யிவன்பிறக்கும் போதுமைந்தா
உத்தமனே பிதாவுந்தான் வீட்டிலில்லை
இல்லுவேன் யிவன்தானும் தலைச்சனப்பா
இயல்பாக யிவன்பிறவி ஏழுபேரே.

இ-ள். சொல்லுவேன் கேட்பாயாக இவன்பிறந்த யோக வாழ்க்கையைச் சொல்லுதற்கரிதாகும் அன்றியும் சுருதியை கேளும் இவன்பிறந்த மனையானது சிறுகூரையாகும் கிழக்குவா சலுடையது இவன்பிறக்கும்போது இவன்பிதா வீட்டிலில்லை இவன் தலைச்சன் பிள்ளையாகும் இவனுடன் பிறவி ஏழுபேராம்.

பேரான ஆண்நாலு பெண்தான்மூன்று
பெரியவனாய் யிவன்தானும் வாழ்வதற்கு
கூரான யிவன்பிறந்த நல்லயோகம்
குணமான யோகமொன்று கூறலாகும்
வாரான யிவன்பிறந்த போதேயப்பா
வம்சமுதல் எல்லாமும் பிரபலமாச்சு
கோரான யிவன்குடிதான் பெருகிற்றப்பா
கூர்மையுள்ள மனிதர்கள்தான் உறவுகூறே.

இ-ள். பேராகிய அவர்களில் ஆண்நாலு பெண்மூன்று அதில் பெரியவனாக யிவன்வாழ்வதற்கு இவன்பிறந்த யோகம் நலமாகும் அதில் ஒன்றுக்கூர்வேன் இவன் பிறந்தபோதே வம்மிச முதலான தும் பிரபலமாச்சு இவன் குடியும் பெருகிற்று கூர்மையாகிய மனிதர்கள் உறவார்கள் எ-று. 6

கூறியதோர் யிவன்பிறந்த அஞ்சாமாகும்
குணமான பிதாவுக்குச் சகடயோகம்
ஆறியதோர் யோகமெல்லாம் வந்ததப்பா
அரசர்களின் சன்மானம் அதிகமாச்சு
தேறியதோர் தேவாலயப் பிரதிஷ்டையப்பா
செய்துவந்தான் சிதறிவிட் டதன்மேல்தானே
தாறியதோர் யோகம்வந்து வந்துமாறும்
தாழ்வில்லா திருந்தனன்பார் இருபத்தாண்டே.

இ-ள். மேற்கூறிய யிவன்பிறந்த ஐந்தாமாகும் பிதாவிற்குச் சகடயோகமுண்டாம் அதனுடன் யோகம்யாவும் வந்ததாம் அரசர்களின் சன்மானம் அதிகமுண்டாகும் தேவதாபிரதிஷ்டைச் செய்வன் சிலநாளில் செதரிப்போகும் யோகமானது வந்து மாறும் தாழ்வில்லாதிருப்பான் இருபதாண்டும் எ-று. 7

ஆண்டப்பா யிவனுக்குத் தாரம்ரெண்டு
அப்பனே முடியுமென்று அன்பாய்ச்சொல்லு
தாண்டப்பா யிவனுக்குத் தாரம்ரெண்டு
தகைமையாய்ப் பிறந்தவரும் யோகமாவார்
நாண்டப்பா யிவன்வயது முப்பத்தாறில்
நலமில்லா அரவத்தால் அடைவான்பாரு
ஈண்டப்பா இவனுடைய யோகவாழ்க்கை
இயல்பாகச் சொல்லிவிட்டே னிசைந்துகேளே.

இ-ள். மேற்கூறிய இவனுக்கு தாரம்ரெண்டு உண்டாகும் இவனுக்கு நாலுபிள்ளைகள் உண்டாம் அவர்களும் யோகசாலிகளாவார் இவனுக்குவயது முப்பத்தாறில் அரவத்தால் மரணமடைகுவன் இவனுடைய யோகவாழ்க்கையாவும் இயல்பாகத்தானே சொல்லிவிட்டேன் இசைந்துகேட்கவும் எ-று. 8

கேளப்பா வச்சிரபங்கி ரேகைமார்க்கம்
கிருபையுடன் சொல்லுகிறேன் பெருமைமெத்த
நாளப்பா வச்சிரபாங்கிரேகைதானும்
நன்றாகத் திரிகோண நடுமையத்தில்
ஆளப்பா ஆள்காட்டி விரலிலேதான்
அன்பாக விருக்குமடா வாய்ந்துபாரு
கேளப்பா விருகோண மிரண்டுபுள்ளி
கொற்றதொரு ரேகையிடங் கோர்வைகாணே.

இ-ள். கேட்பாயாக வச்சிரபங்கி ரேகையின் மார்க்கம் அதைக் கிருபையோடுச்சொல்லுகிறேன் அதின்பெருமையானது மெத்த அந்த வச்சிரபங்கி ரேகைத் திருகோணமாக நடுமையத்தில் ஆள்காட்டிவிரலில் அன்பாக விருக்கும் அதை ஆய்ந்து பார்க்கவும் அதில் இரண்டு கோணமும் இரண்டுபுள்ளியுங் கூடிக் கோர்வையாகயிருக்கும் கைரேயிட சூரிக்காண்பாய் எ-று. 9

காணப்பா விவனுடைய வலதுகையில்
கனக்கவே வளர்ந்திருக்கும் ரேகைதானும்
ஆனப்பா வலப்பாக மிரண்டுபுள்ளி
அப்பனே யிருக்குமடா மச்சம்ரெண்டு
வாணப்பா வச்சிரபங்கி பெருமைதன்னை
வளமான குபேரியெனும் ரேகைரெண்டும்
தாளப்பா குருசீஷனுகமேவதான்
சார்ந்திருக்கும் மென்றுமையுஞ் சொன்னாள் தானே.

இ-ள். காண வலதுகையிலிருக்கும் ரேகையானது அதில் வலபாகத்தில் இரண்டு புள்ளியும் மச்சம்ரெண்டும் இருக்கும். அவ்விதமுள்ள வச்சிரபங்கியின் பெருமையதனை வளமாகிய குபேரியெனும் ரேகையிரண்டும் குருசீஷனுகவும் சார்ந்து இருக் 10
குமென்று உமையவள் சொல்லினாள் எ-று.

சொன்னாள் தான் உமையவளும் வதிஷ்டர்க்கப்போ
துரிதமுடன் வதிஷ்டரவர் சுத்தமாக
அன்னாடா ஆயிழையே யுமையே என்று
அடிவணங்கி மிகத்துதித்து அன்பாய்க்கேட்க
முன்னாடா முனிக்குரைத்த மார்க்கம்போல
முயற்சியுள்ள வுத்தமியும் வுளவாய்ச்சொன்னாள்
வன்னவடா னுரைத்தபடி சொல்வேன்யானும்
மகத்தானரேகையிட வண்மைகேளே.

இ-ள். சொல்லினள் உமையவளும் வதிஷ்டர் அப்போ அதைத் துரிதமுடன் வதிஷ்டரானவர் அதைச் சுத்தமாகவும் அடிவணங்கியும் துதித்தும் அன்பாகக் கேட்கசொல்வாள். முன் முனிக்குறைத்த மார்க்கம்போல் முயற்சியாக உத்தமியாள் சொன்னாள்; அவ்வாறாக யானும் சொல்வேன் ரேகையினுடைய 11
வண்மையைக் கேளும் எ-று.

வண்மையென்ற வச்சிரபங்கி ரேகையோகம்
வகுத்திதனைச் சொல்லுகிறேன் வகையாய்க்கேளு
உண்மையென்ற விவன்பிறந்த யோகவாழ்க்கை
உறுதியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தண்மையென்ற இவ்விரண்டு ரேகையிற்றான்
சாற்றிடுவோர் தமயந்தி ரேகையொன்று
அண்மையென்ற நளச்சக்கிரவர்த்தி ராஜன்
அன்பான ரேகையொன்று மறிந்துசொல்லே.

இ-ள். வண்மையாகிய வச்சிரபங்கி ரேகையின்யோகம் அதனை வகுத்துச்சொல்லுகிறேன் கேளும். அவ்விதரேகையுள்ளோன் பிறந்த யோகவாழ்க்கையை உறுதியாகச் சொல்கிறேன் கேளும். தன்மையாகிய இவ்விரண்டு ரேகையாதெனில் தமயந்திர ரேகை ஒன்று நளச்சக்கிரவர்த்திராஜன் ரேகை ஒன்றும்.

சொல்லப்பா யிவ்விரண்டு ரேகைதானும்
சித்தமாய் இருக்குதென்றாற் றேவனானன்
அல்லப்பா வாச்சரிய மிவன்றானப்பா
அன்பான ஓர் தாய்க்கோர் மைந்தனாகும்
நல்லப்பா யிவன்யோக சாலிமெத்த
நலமுள்ள யோகவான் நன்றாய்க்கேளு
வல்லப்பா யிவன்பிறந்த நாளுங்கோளும்
வரிசையாய்ச் சொல்லுகிறேன் வண்மைகேளு.

இ-ள். சொல்லும்படியாகிய இவ்விரண்டு ரேகையுஞ் சுத்தமாகத்தானே இருக்குமாகின் அவன் தேவனாவன்; ஆச்சரியமுள்ளவனாகும் ஓர் தாய்க்கோர் மைந்தன் அவனாகும்; அவன்யோகத்தில் மிகுந்தவன். இவன் பிறந்தநாளுங் கோளும் வரிசையாகச் சொல்லுகிறேன் வண்மையைக்கேளும் எ-று. 13

கேளப்பா யிவன்பிறந்த வீடதாகும்
கேவலமான சிறுகூரை வீடதாகும்
ஆளப்பா பிறக்கையிலே யொருவரில்லை
அன்பான மாதிவாரமிரண்டாஞ் சாமம்
வாளப்பா மாசமது மகரமாகும்
வண்மையுள்ள துதிகையிலே பிறந்தான்பாலன்
நாளப்பா உத்திரந்தான் மூன்றதாகும்
நலமான கிரகநா லுச்சமாமே.

இ-ள். கேட்க மேற்கூறியோன் பிறந்தவீடு ரொம்பவும் சிறுகூரை வீடாகும்; இவன்பிறக்கையில் அருகிலொருவருமில்லை; திங்கட்கிழமை இரண்டாஞ்சாமம் தைமாதம் திதி துதிகை உத்திர நட்சத்திரம் மூன்றும் பாதம் இவன் பிறந்த வேளையாகும்; அப்போது கிரகம் நாலு உச்சமாகினவாம் எ-று. 14

உச்சமென்ற யிவன்பிறந்த ராசிக்குத்தான்
உறுதியுள்ள நவக்கிரக ஒன்பதுக்குள்
மச்சமென்ற சுக்கிரனும் புதனுமின்னம்
பாங்கான சனியுடனே வியாழனுச்சம்
அச்சமென்ப தொன்றுக்கு மில்லையப்பா
அன்பான விரவுதனிற் பிறந்தான்மைந்தன்
நிச்சமென்ற நிதியெடுத்து வாழவந்தான்
நீனிலத்தி லிவன்யோக மில்லையன்றே.

இ-ள். உச்சமாகி இவன்பிறந்தராசிக்குள் நிற்கும் கிரகம் ஒன்பதில் சுக்கிரன் புதன் சனி வியாழம் இவர்கள் உச்சமாம் இவன் தனக்கு அச்சமென்பது ஒன்றுமில்லையாம். இரவில் பிறந்தவன் நிதியானது யெடுத்துவாழ வந்தோனாகும் நீநிலத்தில் இவன் யோகமில்லையாம் எ-று. 15

இல்லையென்ற யிவன்றாய்தான் வமங்கிலிஸ்திரீ
இயல்பான சிறுவயதிற் கணவன்மாண்டான்
அல்லையென்ற மற்றொரு மாப்பிள்ளைக்குத்தான்
அவதரித்த பாலனிவ னுய்ந்துசொன்னேன்
நல்லையென்ற வக்கணவன் றாய்க்கோர்பாலன்
நலமுள்ளான்றனக்கிவன்றான் பிறந்தான்காணும்
வல்லையென்ற சூதக நாளிற்கூடி
வரிசையாயனுபோகம் செய்ததாலே.

இ-ள். மேற்கூறியோனுடையதாய் அமங்கலியஸ்திரியாகும்; சிறுவயதிலேயே கணவன் மரணமடைந்தனன். அவள் மற்றொரு மாப்பிள்ளைக்கு அவதரித்தமைந்த னிவனாகும்; அக்கணவன் ஓர் தாய்க்கு ஓர்ப்பாலனாகும்; அவன்றனக்கு இவன் பிறந்தோனாகும், சூதகநாளிற்கூடி அனுபோகஞ் சேய்தார்கேளும் எ-று. 16

நாலெனவே ஸ்திரீபுருஷா ளிரண்டுபேரும்
நன்மையுடன் றென்முகமாம்முதற்சாமத்தில்
ஆலெனவே நலமுள்ளவாசஞ்செய்து
அன்பாக ஒருமனதாய் கூடினார்கள்
நாலெனவே நல்லமுகம் விழித்ததாலும்
நன்மையுள்ள மைந்தனிவன் றரித்தான்பாரு
பாலெனவே பைங்கிளியாள் பெற்றபாலன்
பாக்கியங்கண் மிகப்பெறவே பிறந்திட்டானே.

இ-ள். நாளாகத்தானே ஸ்திரீபுருஷாள் இரண்டு பேரும் தென்முகமாகக்சயனித்து முதற்சாமத்தில் இருவரும் ஒரு மனதாகத்தானே கூடினார்கள்; கூடியும் அவள் நல்லமுகத்தில் முழித்ததாலும் நன்மையாகிய இந்தப் பாலன் தரித்தான். அந்தைபைங்கிளியாள் பெற்றபாலன் பாக்கியங்கள் மிகவும் பெறபிறந்தான்.

பிறந்திட்ட இவன்றாய்தா னுத்தமிப்பெண்
பிரியமுள்ள பிதாவுந்தான் பாஞ்சாலன்பேயன்
அறிந்திடவே வாஸ்தியில்லை இவனுக்கப்பா
அன்பான சீவனுந்தான் கூலிநாலி
வறிந்திடவே பொய்சொல்லா பிதாவுமாதா
வஞ்சனைகள் கொலைகளவு செய்யமாட்டார்
சறிந்திடவே சற்சனரா முத்தமியாமங்கை
சாபத்தான் முன்கணவ னிறந்தான்பாரே.

இ-ள். பிறந்த இவன் தாய் உத்தமியாகும் இவன் பிதாப் பாஞ்சாலன் பேயன் இவனுக்கு ஆஸ்தியானது ஒன்றுமில்லை; சீவனம்கூலிநாலி செய்துப்பிழைப்பன். மாதா பிதா பொய் சொல்லாதவராகிய வஞ்சனை முதலாகியகொலை களவு யாதொன்றும் புரியாத சர்ச்சனராகுவர் தாயார் உத்தமியான மங்கை; 18
அவளுக்குச் சாபத்தினால் முன்கணவனிறந்தான் எ-று.

பாரடா வச்சிரபங்கி ரேகைமைந்தா
பராபரத்தின் கிருபையினு லவதரிப்பான்
காரடா உமையவளை யநேகநாளாய்
காட்சிபெறக் காத்திவன்றான் றொழுததாலே
கூறடா குணமுள்ள பாலனென்று
கொடுத்தான்பார் பாக்கியங்கள் கூர்மையாக
வாரடா பூலோகந் தன்னிற்சென்று
வண்மையுள்ள பாலகனைப் பிறப்பித்தாளே.

இ-ள். பார்க்க வச்சிரபங்கி ரேகையுள்ளவன் பராபரத்தின் கிருபையினுல் அவதரிப்பன். இவன் உமையவளை அநேக நாளாகக் காட்சிபெறக்காத்திவனும்தொழுததால் கூறத்தக்கக்குணமுடையப்பாலனென்றுகொடுத்தார் பாக்கியங்கள்யாவும் கூர்மையாகத் தானும்; அன்றியும் சொல்வார் பூலோகத்தினிற்சென்று வண்மையுள்ள பாலகனைகப்பிறக்கவும் வரம் தந்துப்பிறப்பித்தார் 19

பிறக்கவுந்தான் பிதாவினிடத் துயரம்போச்சு
பிறபலமாய் மாதாவும் வாழலாச்சு
உறக்கவுந்தா னிவனுடைய யோகந்தன்னை
உண்மையாய்ச் சொல்லுகிறே னுகந்துகேளு
பறக்கவுந்தான் பாடுமிகப் படவுமாட்டேன்
பார்வதியாள் தான்கொடுத்த பாக்கியத்தாலே
சிறக்கவுந்தா னரிமாலுங் கடாட்சம்வைத்து
சிதம்பரத்திற் பிறப்பித்தார் சீராய்த்தானே.

இ-ள். மேற்கூறிய பாலன் பிறந்தவுடன் பிதாவினுடையத் துயரமானதுபோச்சு பிரபலமாகத் தாயாரும் வாழலாச்சு இவனுடைய யோகத்தைச் சொல்கிறேன்கேளும் இப்பாலன் பாடுபடமாட்டான் என்தாய் பார்வதியாள் கொடுத்திருக்கும் பாக்கியத்தினுலும் மாலுடைய கடாட்சத்தினுலும் சிதம்பரத்திற்பிறந்தான் சீராகவும் எ-று. 20

ஆகவே யிவனுருவஞ் சிவந்தவர்ணம்
அன்பான விவன்றலையிற் தனஞ்சியனென்று
பாகவே இரண்டுசுழி கூடிநிற்கும்
பண்பான விடகண்ணுஞ் சிறுத்திருக்கும்
வாகவே வலக்காற்று னுகந்துகாணும்
வண்மையுள்ள யிவன்தேக மொல்லியாகும்
தாகவே யிவன்தேகம் தூக்கமைந்தா
தருவான பலமதுதா நூற்றருபதாமே.

இ-ள். ஆகவும் இவனுடைய உருவம் சிவந்த வர்ணமாகும் இவனுடையத் தலையிலும் தனஞ்சயனென்றுச்சொல்லும்படியாக இரண்டு சுழியானதுகூடி நிற்கும்; இடதுகண் சிறுத்திருக்கும் வலதுகால் உகந்துகாணும் இவனுடைய தேகம் ஒல்லியாகும் இவனைத்தூக்க பாரம் நூற்றருபது பலமிருப்பான் எ-று. 21

ஆமெனவே யிவனுடைய வலதினிடைத் துடையில்
அன்பான மச்சமென்ற ரூபமாகும்
வாமெனவே மேனியெங்கும் பூமயிர் தானப்பா
வற்பமாய்ச் சனம்வளருந் திடவான்பாரு
காமெனவே புலாலுடனே போஜனந்தான்
கருதியிவ னருந்தான்பார் கருணையுள்ளோன்
நாமெனவே யிவன்றான்பார் பழங்கடன்னை
நலமாகப் புசித்திடுவர் னன்மையாமே.

இ-ள். மேற்கூறிய இன்னோனுடையத் துடையில் மச்சமென்ற ரூபமாகவிருக்கும். இவன் தேகமெங்கும் பூமயிர் தோன்றியிருக்கும்; அற்பமாகிய சனம் வளருந்திடவான். புலாலுடன் போசனம் புசியான் கருணையுள்ளவன்; இவன் பழங்கள் தன்னைப் புசித்திருப்பான் எ-று. 22

நன்மையப்பா இவன்விர்த்தி கோபியாகும்
நலமுள்ளான் சீலமுட னடப்பான்பாலன்
அம்மையப்பா வரனுரைப் போற்றிசெய்வான்
அன்பான சிவபூசை மறக்கான்பாரு
வண்மையப்பா யிவன்கோத்திரம் விளங்கச்செய்வான்
வம்மிசத்தை மறக்காம னடத்திடுவானப்பா
இம்மையப்பா யிவன்பிறவி முதற்சனனந்தன்னில்
இகத்திலன்ன பட்சியதாய்ப் பிறக்கின்றானே.

இ-ள். நன்மையாகிய விருத்தியுடையவன் கோபியாகும் நலமுடையவன் சீலமுடன் நடப்பான் அம்மையோடு அரனுரையும் பூசைசெய்குவன்; ஒருக்காலும் சிவபூசையை மறக்கமாட்டான்; இவனுடையக்கோத்திரத்தை விளங்கச்செய்குவான் வமிசத்தாரை மறக்காமற் காப்பான் இவனுடையப் பிறவி முதல் சென்மத்தில் இகத்தில் அன்னபட்சியாகப் பிறக்கின்றான் எ-று.

பிறக்கவே யன்னமொழிந் திவன்றானப்பா
பிரபலமாய் வச்சிரபங்கி ரேகையோடு
திறக்கவே யிவன்பிறந்தான் யோகசாலி
திரமுள்ளான் யிவன்யோகம் செப்பக்கேளு
துறக்கவே யிவன்பிறந்த நான்காம்மாதம்
துரவான யிவன்பிதா வோரிடத்தில்
கறக்கவே மலபாதை செய்யும்போது
கண்டெடுத்தான் னிதியொன்று செம்புதானே.

இ-ள். பிறந்து அன்னப்பட்சியின் ரூபமழிந்து வச்சிரபாங்கி ரேகையோடு பிரபலமாகத்தானே இவன் பிறந்தான். யோகசாலியாகவும் பொருளுடையவன்; இவனுடைய யோகத்தைச் சொல்லமுடியாதாம் இவன் பிறந்த நான்காம்மாதம் இவனுடை

யத் தகப்பன் ஓரிடத்தில் மலபாதைச் செய்யும்போது கண்டெடுத்தான் நிதியானதொன்றுச் செம்பாம் எ-று.

24
தானென்ற யிவனுடைய சகோதரங்கள்
தயவாக வைந்துபேர் பிறப்பாரப்பா
வானென்ற வாண்மூன்று பெண்ணிரண்டு
வரிசையாய்ப் பிறப்பார்கள் வண்மையாக
ஊனென்ற விவன்பிறவி நல்லபேர்கள்
உத்தமர்க ளாய்ப்பிறந்தார் துணைவரப்பா
ஏனென்ற வில்லறத்தின் துயரம்போச்சு
என்னசொல்வே னிவனுடைய பெருமைதானே.

இ-ள். இவனுக்குச் சகோதரர்கள் ஐந்துபேர் பிறப்பார்கள்; வண்மையுடையவராகவும் அதில் ஆண் மூன்று பெண் இரண்டாம் வரிசையாகத்தானே பிறப்பார்கள்; இவனுடையப் பிறவி நல்லோராகவும் உத்தமராகவும் பிறந்தார்; துணைவர்கள் இவனுடைய இல்லறத்தின் துயரமானது போய்விடும். இவன் பெருமையை யென்சொல்வேன் எ-று.

25
தேனடா யிவன்பிறந்த பத்தாமாதம்
தயவான விவன்மாதா புஞ்சைகொய்ய
வானடா வவள்சென்ற விடத்தில்வாய்க்கால்
வளமாக வுண்டதிலோர் செம்புகண்டாள்
ஊனமடா மங்கையது யெடுத்துநல்ல
உற்பனமாம் புஞ்சைகொய் துடனேவந்தாள்
ஆனடா அவ்ளெடுத்த செம்பிற்சொர்னம்
அதிகமா யிருந்ததைக்கொண் டழகாய்வாழ்ந்தார்

இ-ள். இவன்பிறந்தப் பத்தாமாதம் இவன் தாயார் புஞ்சையானது கொய்ய அவள் சென்றவிடத்தில் ஒருவாய்க்காலுண்டு; அதில் ஓர் செம்பு கண்டு அம்மங்கை யதனையெடுத்துப் புஞ்சையானது கொய்து உடனே மனைக்கு வந்து பார்க்க செம்பு சொர்ன்னமாக அதை வைத்துக்கொண்டு அழகாகத்தானே வாழ்ந்து வந்தார்கள் எ-று.

26
வாழ்ந்திடவே மைந்தனுக்கு கன்னிகாயோகம்
வளமையான் மிகவாழ்ந்தான் மைந்தனப்பா
ஆழ்ந்திடவே இதனுடைய யோகவாழ்க்கை
அறிந்தமட்டுஞ் சொல்லுறேன் பிர்மதேவர்
தாழ்ந்திடவே தலைவனிவ னனேகம்பேர்கள்
தாள்வணங்கி தொழுதுநிற்பார் தலைவனுக்கு
ஆழ்ந்திடவே யிவன்வயதோ ரைம்பதுக்குள்
நலமான மனைநாலு வெடுத்திட்டானே

இ-ள். வாழ்கையில் மேற்கூறியபாலனுக்குக் கன்னிகாயோகமானது வாய்க்க வளமையாகத்தானே மிகவும் வாழ்வுண்டாகி வாழ்ந்தான் அதனுடைய யோகவாழ்க்கையை அறிந்தமட்டும்

சொல்கிறேன்; பிரமதேவர் இத்தலைவனுக்கு அநேகம்பேர்கள் தாள்வணங்கித் தொழுது நிற்பார்கள்; இவன்வயது அன்பதுக்குள் நாலுமனையானது யெடுப்பான் எ-று. 27

எடுத்திடவே குதிரைகட்ட மைந்தன்தானும்
ஏகமுள்ள லாயந்தான் கட்டும்போது
வடுத்திடவே மண்வாங்கி வெட்டும்போது
வளமான வம்மனையிற் காதுவைத்த
தொடுத்திடவே கொப்பரையுண் மைந்தன்தானும்
துகையுளறு பத்துலட்சம் பொன்னெடுத்தான்
அடுத்திடவே யிளையவளும் வாலையிட்டு
அன்பான விவன்வீட்டி லிருந்திட்டாளே.

இ-ள். மேற்கண்டபடி யெடுத்தபின் குதிரையானது கட்ட இலாயமானது கட்ட மண்வாங்கி வெட்டும்போது அம்மனையிற் காதுவைத்த நிதியுடையக் கொப்பறையில் அறுபது லட்சம் பொன்னெடுத்தான்; அப்போது இளையவளாகிய இலட்சுமி இவன் வீட்டில் வந்திருந்திட்டாள் எ-று. 28

இருந்திடவே யிளையவளும் பிரியாமற்றான்
இவனில்லை யறுபத்தெட் டாண்டிருந்தான்
வருந்திடவே வாலையுடை யீந்தபாக்கியம்
வம்மிசத்தை மெத்தவும்பெருகி வாழ்ந்திட்டார்கள்
பொருந்திடவே பூலோகந் தன்னிலேதான்
போகமுட னிவன்றானும் வாழ்வதாகும்
சரிந்திடவே சாயுச்சியம் பெற்றபாலன்
சற்குணவான் பெறும்போகந் தனைச்சொல்வேனே.

இ-ள். இருக்கத்தானே இலட்சுமியும் பிறியாமல் இவன் வீட்டில் அறுபத்தெட்டு வருடமிருப்பாள்; இந்தபாக்கியத்தினால் வம்மிசத்தோடும் பெரும்வாழ்வு வாழ்ந்திருந்தார்கள்; பூலோகமதனில் இவன் வாழ்வு யோகபாக்கியமாகும் சாயுச்சம் பெற்ற இப்பாலன் பெரும்யோகஞ் சொல்வேன் எ-று. 29

சொல்வனப்பா வச்சிரபாங்கி ரேகையாகும்
செகத்திலே பெரிதப்பா நலங்கள்கேளு
அல்லுவேன் அஷ்டசித்தா டிடுவான்மைந்தன்
அன்பனிவன் சிவபூசை செய்வானப்பா
நல்லுறவா யிவனுக்குத் தாரம்ரெண்டு
நலமாகப் பன்னிரண்டு தனிலேவாச்சு
இல்லவே யிவன்வயதோ பதினாறுக்குள்
இயல்பான தாரமிரண்டதாச்சுபாரே

இ-ள். சொல்லும்படியாகிய வச்சிரபாங்கி ரேகை செகத்திற் பெரிதாகும் அதின் நலங்கேளும் இவ்விதரேகையுடையோன் அஷ்டசித்துக்களாடுவன் அன்பனைச் சிவபூசை செய்குவன்;

நல்லவுறவாகத்தானே தாரம் இரண்டுண்டாம் வயதுபனிரெண்டில் விவாகமாகும் வயது பதினாறுக்குள் இரண்டாவது விவாகமுமாகும் எ-று. 30

பாரடா விவனுக்குப் புத்திரபாக்கியம்
பக்குவமா யன்பதொன்ப தாண்டுக்குள்ளே
ஆரடா பிள்ளைகளைந்துண் டாச்சுதப்பா
அதிலேமூன் றிறந்திரண்டே வாழாநிற்கும்
காரடா வவையிலொன்றாண் பெண்ணொன்றாகும்
கனக்கவே நிலைத்ததப்பா கருணையாக
சீரடா வவனுக்கு கண்டாந்திரமைந்தா
சிறப்பாக வேழுகண்ட நட்க்கும்பாரே

இ-ள். பார்க்க இவனுக்குப் புத்திரபாக்கியம் அன்பத்தொன்பதாம் வருஷத்தில் பிள்ளைகள் ஐந்துண்டாகும்; அதில் மூன்று இறந்துபோய் இரண்டு வாழாநிற்கும் அதில் ஆண் ஒன்று பெண் ஒன்றாக நிலைத்ததாம்; இவனுக்கு கண்டம் ஏழுண்டாம்.

பாரப்பா யிவனுக்கு கண்டம்வந்த
பருவத்தைச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
சீரப்பா யிவன்வயதோ றாறிலேதான்
சிறப்பாக வக்கினியிற் கண்டமொன்று
காரப்பா வயதிருபத் திரண்டிலேதான்
கனக்கவே நீராலே கண்டமொன்று
வீரப்பா யிவன்வயதோ ரிருபத்தாறில்
வியாதியால் மெத்தவுந்தான் மெலிவான்பாரே

இ-ள். பார்க்க இவனுக்குக் கண்டமானது வந்தப் பருவத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக; இவன் வயது ஆறில் அக்கினியாற் கண்டமொன்று நேரும், வயது இருபத்திரெண்டில் சலத்தால் கண்டமொன்று நேரும், வயது இருபத்தாறில் வியாதியால் மெத்தவும் மெலிவான் எ-று. 32

பார்க்கவே யிவன்வயதோர் நாற்பத்தாறில்
பண்மையுள்ள மரப்பலகை மேலேவீழும்
ஆர்க்கவே யுடலிலே காயம்பட்டு
அன்பான மாசமூன்றிளைப்பான்பாரு
ஏர்க்கவே யைம்பத்தி னலிலேதான்
இயல்பான குதிரைமே லேறிவீழ்ந்து
கார்க்கவே சற்புத்திரன் மாதமூன்று
சகசமாய் மைந்தனிவன் மெலிவான்பாரே

இ-ள். பார்க்க வயது நாற்பத்தாறில் மரப்பலகையானது மேலே வீழும் அதினால் உடலில் காயமானதுப் பட்டு மூன்று மாதம் பாதைப்பட்டு யிளைப்பன் வயது அன்பத்தினாலில் குதிரையின்மீது யேறிவீழ்ந்து மூன்றுமாதம் பாதையால் மெலிந்திருப்பான் எ-று. 33

பாரென்ற விவன்வயதோ ரறுபத்தெட்டில்
பாங்கான சக்கரத்தி னமைப்பான்மைந்தா
வீரென்ற வயதிருபத்தெட்டிலேதான்
விதிமுறையாய்ப் பிதாவினுக்கு கருமஞ்செய்வான்
காரென்ற வயதப்பா முப்பத்தொன்றில்
கனக்கவே மாதாவின் கருமமாகும்
ஊரென்ற விவன்முப்பத்தி ரெண்டாமாண்டில்
உற்றதொரு விவாகமது வாகும்பாரே.

இ-ள். பாங்காகிய சக்கரத்தின் அமைப்பினல் பார்க்க இவன்வயது அறுபத்தெட்டு; வயது இருபத்தெட்டில் பிதாவினுக்கும் முப்பத்தொன்றில் தாய்க்கும் கருமம் செய்வன்; இவன் வயது முப்பத்திரண்டில் விவாகமாகும் எ-று. 34

பாரடா முற்சனனந் தன்னிலப்பா
பக்குவமா யன்னமென்ற பறவையாகும்
காரடா வதின்பின் வேதியனய் வந்தான்
காட்சிபெற விப்பிறப்பிற் சூத்திரனனன்
கூரடா விவன்மைந்தா குபேரன்போலே
கூர்மையாய்ப் பிறந்தவரும் வாழ்வார்பாரு
ஊரடா விவன்யோகம் மயேந்திரயோகம்
உத்தமனும் வாழ்வனிவ னுறுதிசொன்னேன்

இ-ள். பார்க்க இவன் முன்ஜென்மத்தில் அன்னப்பட்சியாகும் அதன்பின்பு வேதியனகப் பிறந்தான். காட்சியானது பெரும்படியாகஇப்பிறப்பில் சூத்திரனகப் பிறந்தான்; கூறுதற்கு இவன் குபேரனைப் போலிருப்பன்; இவனை பெற்றவரும் அப்படியே வாழ்குவர் இவன்யோகம் மயேந்திரயோகமாகும். உத்தமனுக வாழ்குவன் எ-று. 35

சொன்னேனப்பா விவன்றானும் அனேகபூமி
சொர்னமதைக் கொடுத்திவனும் வாங்குவான்பார்
அன்னப்பா விவன்றேவி மயில்போலுள்ளாள்
அழகுள்ள ஸ்திரீயாகு மறத்தைப்பேணும்
வன்னப்பா குயின்மொழிதான் முதலாஞ்சாதி
வங்கிஷமு நல்லதப்பா வறிந்துசொன்னேன்
கன்னதப்பா தருமத்தை மறவாச்சீலன்
காட்சிபெற்ற மைந்தனென்றே கருதுவாயே.

இ-ள் சொன்னவண்ணம் இவனும் அனேகம் பூமிகளை சொர்னம்கொடுத்து வாங்குவான். இவனுடையத் தேவியானவள் மயில்போல் சாயலுடையாள்; அழகுடையவள்; தருமம்புரிவள். குயில்போல் மொழியுடையவள் முதல்வகுப்பு உத்தமஸ்திரீயாகும் வங்கிஷம் நல்லவள். இவனும் தருமத்தை மறவாதச்சீலனகுவன். 36

வாயென்ற விவனுடைய வம்சமூன்றும்
வண்மைபொரு ளழியாமல் வாழ்வாரப்பா
ஆயென்ற வற்புதம்போ லுமையாடந்த
அன்பான பாக்கியமிதென்றறிந்துபாரு
சாயென்ற விவனுடைய தம்பிமார்கள்
சற்சனராய் வாழ்ந்திருப்பார் தயவுள்ளோர்கள்
ஏயென்ற வெம்பிரானருளினாலே
எய்திடும்பார் சகலசௌ பாக்கியந்தானே.

இ-ள். இவனுடைய பின்வம்சங்கள் மூன்றும் வண்மையாகியப் பொருளானது அழியாமல் வாழ்வார் அற்புதமாகத்தானே உமையாள் தந்த பாக்கியமாமென்று அறிந்திடுவாய்; இவனுடைய தம்பிமார்கள் சர்ச்சனராகியும் தயவுள்ளோராகியும் வாழ்ந்திருப்பார்கள். அன்றியும் எம்பிரானுடைய அருளினால் சவுபாக்கியமும் பெருகும் எ-று. 37

தானென்ற தத்துவங்கள் படிப்பான் மைந்தன்
தயவாக சகலகலைக்கியானம் பார்ப்பான்
வானென்ற வச்சிரபாங்கி ரேகையாலே
வண்மையாய் மாடமாளிகையுங்கட்டி
ஊனென்ற தண்டிகை யேறிமைந்தன்
உற்பனம்போற் பெரியவனாய் வாழ்ந்திருப்பான்
ஆனென்ற வரசர்முத லுலகத்தோரும்
அற்புதமாய்க் காத்திருப்பரடிமையென்றே.

இ-ள். தானெனும் தத்துவங்கள் யாவும்படிப்பன் சகலகலைக்கியானமும் பார்ப்பன். வச்சிரபாங்கி ரேகையினால் வண்மையாகிய மாடமாளிகை கட்டியும் தண்டிகைமீதேறி பெரியோனாக வாழ்ந்திருப்பன்; அரசர் முதலாகிய உலகத்தோரும் அடிமையாகக் கார்த்திருப்பார் எ-று. 38

என்றெனவே இவன் பிதாயோகத்தாலே
ஏற்றமுள்ள மகனிவன்றான் பிறந்தானப்பா
குன்றெனவே இவன்றானும் ஈஸ்பரனைநோக்கி
குணமாகக் குறித்திவன்முன் றவசுசெய்தான்
வன்றெனவே ஈசனருட் பெற்றுமைந்தன்
வரம்வாங்கிப் பிறந்ததினால் பாக்கியம்பெற்றான்
இன்றெனவே யீஸ்வரியாள் கிருபையாலே
இகத்திற் குபேரனைப்போல் வாழ்ந்திருப்பான்பாரே

இ-ள். இவனுடையப் பிதாவின் யோகத்தால் ஏற்றதாகிய மைந்தனிவன் பிறந்தான். இவன் ஈஸ்வரனை நோக்கி குணமாகத் தானே குறித்து தவம்புரிந்து ஈஸ்வரனுடைய அருளானது பெற்று வரத்தோடுப் பிறந்ததினால் பாக்கியமானதுப் பெற்றான். இப்பவும் ஈஸ்பரியாள் கிருபையால் இகத்தில் குபேரன்போல் வாழ்வுண்டாயிருப்பான் எ-று. 39

பாரென்ற வச்சிரபாங்கி ரேகையின்றன்
பலனெல்லாம் விபரமுடன் பகர்ந்தேனுனும்
காரென்ற காட்சிகளும் யோகவாழ்வும்
கைமுறையாய் வேதம்போற் சொன்னேன்மைந்தா
சீரென்ற ஜகந்தனிலே யறிந்துநீயும்
செப்புவீர் கும்பமுனி செப்புகின்ற
ஆறென்ற வைம்புலன்க ளறிந்தஞான
அகஸ்தியரென்றம்மையவ ளருளினாளே.

இ-ள். பாரென்னும் படியான வச்சிரபாங்கி ரேகையின் பலன்கள்யாவும் விபரமாகப்பகர்ந்தேன்; காட்சியும்யோகமும் வாழ்வும் கைமுறையாக வேதம்போற் சொன்னேன். இதை ஜெகத்தின்மீது நீ யறிந்து சொல்வாய் கும்பமுனிச் சொன்ன ஆறென்னும்படியான ஐம்புலன்களையறிந்தஞான அகஸ்தியரென்று அம்மன் அருளினாள் எ-று. 40

அருளுகிறே னின்னமொரு ரேகைமைந்தா
ஆச்சரிய முள்ளதிந்த ரேகையப்பா
வருளுகிறேன் பஞ்சவர்ண குடோரியொன்று
வகையான நடுக்கரத்திலிரண்டுகீறு
பொருளுகிறேன் பூதபாண்டி ரேகையொன்று
பெருமையாய்ச் சிறுவிரலிலே நிற்கும்
திருளுகிறேன் பஞ்சவர்ண குடோரியப்பா
திரிகோண மைந்திதழா யிருக்கும்பாரே.

இ-ள். அருளுகின்றேன் இன்னமொரு ரேகை அதுவோ ஆச்சரியமுள்ளது; அதாவது பஞ்சவர்ணக்குடோரி என்பதாம். அது நடுகரத்தில் இரண்டுகீறு உள்ளதாம். பூதபாண்டிரேகையானது ஒன்று சிறுவிரலில் ஏறிநிற்கும் பஞ்சவர்ணக் குடோரியானது ஐந்திதழாகவும் திரிகோணமாகவு மிருக்கும் எ-று. 41

பாரப்பா நடுவிரலின் முழுதுமேறி
பாங்கான விதமுடனே நிற்கும்பாரு
காரப்பா பஞ்சவர்ணக் குடோரிகண்டால்
கருத்துறவே யிவன்யோகக் கருணைகேளி
சீரப்பா இவனுடைய திசையும் யோகம்
சிறப்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆரப்பா என்னைப்போ லுங்களுக்கு
அறிவுதனைச் சொல்லிடுவா ராய்ந்துகேளே.

இ-ள். பார்க்க நடுவிரலில் முழுதும் ஏறிபாங்காகத்தானே நிற்கும் இவ்விதப் பஞ்சவர்ணக் குடோரிரேகையானது கண்டால் அவ்விதரேகையுள்ளோன் யோகத்தின் கருணையைக் கேட்பாயாக; இவனுடைய திசையும் யோகமும் சிறப்பாகத்தானே சொல்கிறேன் கேளும்; பூமியின்மீது என்னைப்போல் உங்கட்கு அறிவுதனை ஆர் சொல்வார்கள் ஆய்ந்து பார்ப்பீர் எ-று. 42

கேளடா இவன்றானும் பிறக்கும்போது
கேவலங்க ளிவன்வீட்டிற் கெடுதிரொம்ப
நாளடா இவன்றாய்க்குக் கருப்பந்தன்னில்
நலமாக விவாகமவட் கானதப்பா
வாளடா வக்கணவ னிறந்தான் பின்பு
வளமாக மற்றொருவன் விவாகஞ்செய்தான்
ஆளடா இவனுக்குப் பிறந்தானிந்த
ஆச்சரிய முள்ளமைந்த னருமையாமே.

இ-ள். கேட்பாயாக இவன்பிறக்கும்போது கெடுதியானது ரொம்பவுண்டாம் இவன்றாய்க் கர்ப்ப முற்றிருக்கும்போது கலகத்துடனே விவாகமாச்சுதாம்; அக்கணவனும் இறந்தபின்பு மற்றொருவன் விவாகம் செய்துகொண்டான்; அவனுக்குப் பிறந்த மைந்தன் இவனாகும் எ-று. 43

ஆமென்ற வத்தாயின் வயிற்றிலப்பா
அவதரித்த பாலனிவ னன்பாய்ச்சொல்லு
ஊமென்ற இவன்பிறக்கும் வேளைதன்னில்
உற்றபிதா இவன்வீட்டி லிருந்தான்பாரு
காமென்ற ஓர்தாய்க்கோர் மைந்தனாகும்
காணிக்கை யோகமுள்ள கனவானப்பா
வாமென்ற வானோரிற் கெந்துருவரேகை
வகையான இவன்பிறவி யறிந்துபாரே.

இ-ள். மேற்கூறிய அத்தாயின் வயிற்றிலவதரித்தவன் இப்பாலனாகும். இவன்பிறக்கும் வேளையில் இவன் பிதா வீட்டில் தானே யிருந்தனன்; இவன் ஓர் மைந்தனாகும், காணிக்கையும் யோகமுமுள்ள மைந்தனாகும், வானோர்க்குடைய கெந்தருவரேகையுள்ளப் பிறவியே இவனாகும் அறிந்துபார்க்கவும் எ-று. 44

பார்க்கவே இவன்பிறந்த நான்காமாண்டில்
பண்பான பிதாவுந்தா னிறந்தான்பாரு
ஏர்க்கவே இவன்பிறந்த வீராமாண்டில்
இயல்பான மாதாவைக் கொன்றான் மைந்தன்
கார்க்கவே இவன் தலைதானெடுக்கா முன்பே
கரியுறவே எல்லாருஞ் சாய்ந்திட்டார்கள்
மார்க்கமுள்ள இவன்றன்றன் வீட்டிலுள்ள
மகத்தான பொருளைக்கொண்டலைவான்பாரே.

இ-ள். பார்க்க இவன் பிறந்த நாலாம் வருடத்தில் தகப்பன் மரணமாவான்; இவன்பிறந்த இரண்டாம் வருடத்தில் தாயார் மரணமாவாள்; இவன் தலையெடுக்கா முன்பு உறவோர்கள் யாவருமொழிந்தார்கள்; இவன் தன் வீட்டிலுள்ள மகத்தாகியப் பொருளைக் கொண்டலைவான் எ-று. 45

பாரப்பா விப்பொருடான் வந்தமார்க்கம்
பண்பான தாய்தந்தை இறக்காமுன்பு
வீரப்பா இவன்ருய்செய் பாக்கியத்தாலே
விளங்கவே யோர்தலத்தி னிதியைக்கண்டு
ஆரப்பா வந்தரங்க மாகவேதான்
அன்பான புருஷனிடஞ் சொன்னுள்பாரு
பேரப்பா வத்தலத்திற் சென்றுமைந்தா
பேணியே வெட்டியவர் பார்த்தபோதே.

இ-ள் பார்க்க அப்பொருளானது வந்தமார்க்கம் தாய்தந்தையர்கள் இறக்காமுன்பாம்; இவனுடைய தாயார்செய்த பாக்கியத்தினுல் விளங்கும்படியாகிய ஓர்தலத்தில் நிதியானதைக்கண்டு அதை அந்தரங்கமாகத்தானே தன் புருஷனிடஞ் சொல்லிட அவன் அத்தலத்திற்சென்று எட்டிப்பார்த்தபோது எ-று. 46

பொழுதான வத்தலத்திற் காதுவைத்த
போதமுள்ள சொர்ன்னபுட்ப மதிலேகண்டார்
வழுதான வந்தநல்லப் பொருளைக்கொண்டு
வண்மையுள்ள ஊரைவிட்டகன்ருன்பாரு
செழுதான வப்பொருளைக் கொண்டு நல்ல
திசைதிசையாய் மூன்றாரிற் குடியிருப்பான்
பழுதில்லா வவனிருக்குங் குடிகடோறும்
பாக்கியமுடன் செல்வனுய் வாழ்வான்பாரே.

இ-ள். அப்போது அத்தலத்தில் காதுவைத்த சொர்ன்ன புஷ்பமானது அங்கிருக்கக்கண்டும் அப்பொருளை கைபத்திக்கொண்டு அவ்வூரைவிட்டு அகன்றுபோய் திசையாக மூன்று ஊரில் குடியிருந்தும் பழுதில்லாமற்படி அவன் குடியிருந்த இடந்தோரும் பாக்கியமுடன் செல்வனுக வாழ்ந்திருந்தான். எ-று. 47

பாரடா இவனுடைய செல்வயோகம்
பர்வதம்போல் வளர்ந்ததடா குபேரன்போலே
காரடா கன்னிகா யோகத்தாலே
கருணையுட னல்லவனுய் வாழ்ந்தான்பாரு
கூரடா இவனுக்கோர் புத்திரன்ருன்
கூர்மையுள்ள பாலகன்ருன்பிறந்தான்பாரு
யேரடா இவனுடைய மூன்றுதலைமுறையும்
பேணியே ஒரு பிள்ளை நிலைக்கும்பாரே.

இ-ள். பார்க்க இவனுடையச் செல்வமும் யோகமும் பர்வதம்போல் வளர்ந்து குபேரனைப்போலாயினன். இவனுக்குக் கன்னிகாயோகத்தினுல் கருணையோடு நல்லவனுக வாழ்ந்திருந்தான். அப்போது இவனுக்கு ஓர் புத்திரன் கூர்மையாகத்தானே பிறந்தான் அப்படியே இவனுடைய மூன்று தலைமுறைக்கும் ஒரு பிள்ளை நிலைக்கும் பார்ப்பாய் எ-று. 48

பாரப்பா இவன்றேடுந் தனந்தான் மைந்தா
பரிவான இவன்மகனுக் குதவாதப்பா
சீரப்பா இவனுக்கு முன்னேதானும்
சிறப்பான மகனுந்தா னிறந்துபோவான்
காரப்பா பிராமணன் கையிலேதான்
கடன்முறைகள் வாங்கியிவனிறப்பான்பாரு
ஊரப்பா கலகமதில் தனத்தையிவன்தான்
உற்பனமாய் மண்மறைவிற் பேசுதன்றே.

இ-ள். பார்க்க இவன்றேடும் தனம் இவன்மகனுக்கு உதவாமற்போகும் ஏனெனில் இவனுக்கு முன்னே இவன் மைந்தனனவன் இறந்து போவான்; இவன் பிராமணனுடையகையில் கடன் வாங்கி இவன் இறந்துப்போவான்; பின்புகலகத்தால் தனத்தை மண்ணினுள் புதைத்து வைப்பான்; அதுபோகும் எ-று. 49

அன்றெனவே யிவனிறக்கும் போதேமைந்தா
அன்பான நாவுதனை யெழாமற்றானும்
நன்றெனவே மகனுக்குச் சொல்லாமற்றானும்
நாவுக்கிடந் துயிரிழந்து போவான்பாரு
குன்றெனவே கூட்டமுடன் விவகாரத்தில்
குவலயத்தில் வெகுபொருள்க ளழிந்துதப்பா
வின்றெனவே சகடமென்ற யோகந்தானும்
வெகுவான ராஜாதி காரமாமே.

இ-ள். இவன் பிறக்கும்போதே ஒருவருடனும் சொல்லநாவானது யெழாமல் மகனுக்குஞ் சொல்லாமல் உயிரானது இழந்தும் போயினன் அன்றி கூட்டத்திலும் விவகாரத்திலும் பொருளானது சிலது அழிந்தவாம்; சகட மென்றயோகமானது வருக இராஜ அதிகாரமாம் எ-று. 50

ஆமப்பா விவன்பிறந்த மனைதான் மைந்தா
அன்பான சிறுமனைதான் கூரையாகும்
ஓமப்பா தென்வாச லுள்ளவீட்டில்
ஒருவரில்லை யிவன்பிறக்கும் வேளைதன்னில்
வாமப்பா இவன்பிறந்த நாளுங்கோளும்
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
வீமப்பா வைப்பிசியிற் கதிரோன்வாரம்
விரிவான வவிட்டநாண் மைந்தன்றானே.

இ-ள். ஆகினும் இவன் பிறந்தமனையானது சிறுமனைக்கூரையாகும்; தென்பக்கமாம் வாசலுள்ள வீட்டில் இவன் பிறக்கும் போது ஒருவருமில்லையாம்; அந்தவேளையில் இவன் பிறந்த நாளுங்கோளும் சொல்கிறேன் கேளும் ஐப்பிசிமாதம் ஞாயிற்றுக் கிழமை அவிட்ட நட்சத்திரம் ஜெனனமாகினன் எ-று. 51

அந்தவட்டம் முற்காலேகாதேசி
மகத்தான லக்கினத்தில் வியாழன் சந்திரன்
ஐந்தனப்பா இரவுகளிற் பிறந்தான் பாலன்
அற்புதமாய் இவன்மெத்த யோகசாலி
பந்தனெனும் பலபேர்கட் குபகாரித்தான்
பாக்கியத்திற் பெரியவனாய் வாழ்வானப்பா
இந்தனப்பா இல்லறத்திற் சற்றுநேரம்
இருக்கவுந்தான் மாட்டானென் றியம்பிட்டேனே.

இ-ள். அவ்வட்டித்தில் முதற்கால திதி ஏகாதசியாம் இலக்கினத்தில் வியாழன் சந்திரன்நிற்க இரவில்பிறந்த பாலனுக்கும். அற்புதமாகியயோக முடையவன் பலபேர்க்கும் உபகாரியாக யிருப்பான். பாக்கியத்தில் பெரியவனாக வாழ்குவான்; இல்லறத்தில் சற்று நேரமாகிலும் இருக்கமாட்டான் எ-று. 52

இயம்பிட்டேன் வயதிவனுக் கெழுபத்தெட்டாம்
இயல்பாக இவனுந்தான் சிங்கக்கூறும்
துயமிட்ட மதிற்கோயில் கயகந்தானப்பா
துப்பரவாம் நலமுள்ள வாசஞ்செய்வான்
அயம்பிட்டே னிவனதிக பலவான்பாரு
ஆண்மையுள்ள புருடரைப்போல் வாழ்வானப்பா
நியம்பிட்டே னனேகம்பே ரிவனுக்கப்பா
நித்தமுமே ஏவல்விடை செய்வார்பாரே

இ-ள். இயம்பியப்படி வயது இவனுக்கு எழுபத்தெட்டாகும்; இவன் சிங்கக்கூறுடையவன்; தூயம் நாட்டிய நன்மையாகிய மதில் கோயிலகமெடுப்பன் நல்லவாசஞ் செய்வன்; அதிக பலமுடையவன் ஆண்மையுடையவனாக வாழ்வான் இவனுக்கு அனேகம் பேர்கள் வந்து நித்தமும் ஏவலும் விடையுஞ் செய்குவார்.

பாராயே இவன்மேனி பருத்தக்கூடாம்
பக்குவமாய் இவனுக்குக் கண்டமெட்டாம்
வாராயே வந்தகண்ட மிவனுக்கப்பா
வரிசையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
தோராயே வயதிவனுக் கைந்திலேதான்
தோன்றுமப்பா வக்கினியாற் கண்டமொன்று
சீராயே வயதிவனுக்கேழிலேதான்
சிறப்பாகச் சலந்தனிலே கண்டமொன்றே.

இ-ள். இவனுடைய மேனியானது பருத்தக்கூடாகும் இவனுக்கு கெண்டம் எட்டாகும்; இப்படிக்கு வந்தகெண்டம் அதனை வரிசையாகச் சொல்கிறேன்கேளும்; இவனுக்கு வயது ஐந்தில் அக்கினியால் ஓர் கெண்டம் நேரிடும்; வயது ஏழில் சலத்தில் கண்டமொன்றுண்டாம். எ-று. 54

ஒன்ருன விவன்வயது பன்னிரண்டில்
ஓகோகோ நாற்காலி லேறிவீழ்ந்தான்
நன்ருக இவன்வயதோர் பதினெட்டிற்ருன்
நயமில்லா சர்ப்பங்கண் டரண்டான் மைந்தன்
குன்ருன வயதிருபத்தாறிலேதான்
குடிபோனு னிராச்சியத்தை விட்டுமைந்தன்
வின்ருன விவன்முப்பத் தாருமாண்டில்
வெகுவான சத்ருவால் மெலிந்திட்டானே.

இ-ள் இவன்வயதுப் பன்னிரெண்டில் நாற்காலிமேல் ஏறி வீழ்குவான்; வயதுபதினெட்டில் சர்ப்பத்தினுல் கெண்டம் நேரும்; வயது இருபத்தாறில் ராஜ்ஜியத்தைவிட்டுக் குடியானது போவான்; வயது முப்பத்தாறில் சத்துருக்களால் மெலிகுவான்

மெலிந்திடவே விவனுற்பத் தாருமாண்டில்
வியாதியினு லுடல்வருந்தி வேட்கையானுன்
அலிந்திடவே வருடநான் கவதிப்பட்டான்
அன்பான வழக்கதனை வென்ருன்மைந்தன்
வலிந்திடவே யிவனைப்பத்தி ரண்டாமாண்டில்
வாகானகாலகதியினு லோடினுன்பார்
கலிந்திடவே யதனுலே பொருளநேகம்
காரணமில்லாச் செலவு செய்வான்பாரே

இ-ள் மெலிந்தும் வயது நாற்பத்தாறில் வியாதியால் உடலானது வருந்திவேட்கையாவான், நான்கு வருடம் அவதிப்படுகுவான், வழக்கு வெல்லுவான், வயது அன்பத்திரெண்டில் காலகதியினுல் ஊரைவிட்டு ஓடிப்போவான் அதினுல் பொருளானது அனேகம் காரணமில்லாமற்படிக்கு சிலவானதுசெய்குவன் எ-று.

பாரப்பா வயதெழுபத் தெட்டிலேதான்
பரமபதமடைந்திடுவான் சக்கரநேர்மை
காரப்பா பஞ்சவர்னன் குடோரிரேகைக்
கருத்தையெல்லா மறிந்துரைத்தேன்
சீரப்பா வவனுடையத்திசையும்யோகம்
சிறப்பாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளாய்
ஊரப்பா உலகதனிற் கண்டறிந்து
உற்பனமா யறிந்துரைப்பாய் மைந்தாதானே.

இ-ள் இவன்தனக்கு வயது எழுபத்தெட்டில் பரமபதமடைகுவன்; சக்கரத்தின் நேர்மையால் பஞ்சவர்னக் குடோரி ரேகையின் கருத்தெல்லா மறிந்துரைத்தேன் கண்டு கொள்வா யாகவும். இவனுடைய திசையும் யோகமும் கூடச் சொல்லி விட்டேன் இதனை உலகுதனில் கண்டறிந்தும் சொல்வாயாகவும்.

தானெனவே இன்னமப்பா ரேகையொன்று
தருவான ரேகையதைச் சாற்றக்கேளு
ஆனெனவே யஷ்டமா கமலரேகை
அப்பனே கமலியுமொன் றிரண்டுரேகை
கானெனவே கைநடுவிலிருக்குதப்பா
கனத்ததோ ரிரண்டுபுள்ளி மூன்றுகீறு
வானெனவே யிந்தநல்ல ரேகையானால்
வரிசையுள்ள பாலகனு மாவான்பாரே.

இ-ள். தானெனும்படியாக இன்னம்ரேகை ஒன்று அதனைச் சாற்றக்கேளும்; அதாவது அஷ்டமா கமலரேகை ஒன்றுகமலியுமென்ற இரண்டுரேகை இவைக்காண கைநடுவிரலி லிருக்கும்; அதில் கனத்தப்புள்ளியானது இரண்டுமூன்று கீறு இவ்விதரேகை யிருக்குமாகின் அவன் வரிசையுள்ளப் பாலனவன் எ-று. 58

பாரடா இவன்பிறந்த வாரஞ்செவ்வாய்
பரணியிலே மூன்றாங்கா லாகுமைந்தா
சீரடா விவன்றான்றானு நவமிதன்னில்
செல்வனுமே பிறந்திட்டா னாடிமாதம்
காரடா விவனுந்தான் கீழ்வாசல்வீட்டில்
கனக்கவே கன்னியிற்றான் பிறந்தான் பாலன்
கூறடா இவன்பிறக்குங் காலையிற்றான்
குணமுள்ள செல்வமுள்ள பாலனாமே.

இ-ள். பார்க்க இவன் பிறந்தவாரம் செவ்வாய்பரணி நட்சத்திரத்தில் மூன்றாங்காலம் திதி நவமியாகும்; மாதம் ஆடிமாதமாம்; கீழ்வாசல் வீட்டில் கன்னியில் பிறந்தோனாகும் இவன் பிறக்குங் காலையில் செல்வமுடையவனாகும் எ-று. 59

பாலனாய் இவன்பிறக்கும் போதிற்றானும்
பாக்கியங்கள் வளர்ந்தேறி இருக்கும்வீட்டில்
சீலமுட னுடன்பிறந்தார் மூன்றுபேர்கள்
செல்வமுட னால்வரப்பா தெரிந்துகொள்ளு
ஆலமாய்ப் புத்ரமித்ர களத்திராதி
அவர்களுடன் வாழ்வினில் மூன்றாமைந்தன்
தாலமதிற் றனஞ்சயனும் பிறந்தானப்பா
தன்மையுடன் செல்வனாய் வாழ்ந்திடுவன்றானே.

இ-ள். மேற்கூறியோன் பாலனாகப்பிறக்கும்போதில் பாக்கியங்களானது வீட்டில் வளர்ந்தேறியிருக்கும் இவனுடன் பிறந்தவர்கள் மூன்று பேராகும் ஆகச்செல்வர்கள் நால்வராகும். புத்திரமித்திர களத்திராதிகளுடன் வாழ்குவன்; இவன் மூன்றாவது மைந்தனாகும், பூமியின்மீதுச் செல்வனாகப்பிறந்து தனஞ்சயன் போல்வாழ்குவன் எ-று. 60

வாழ்ந்திடவே இவனுடைய பெரியவண்ணன்
வண்மையாய்க் குளத்தினில் வீழ்ந்திறப்பான்
ஆழ்ந்திடவே வவர்க்கிளைய வண்ணன்றானும்
அக்கினியுள்ள வடுப்பினில் வீழ்ந்திறப்பான்பாரு
நாழ்ந்திடவே இவர்க்கிளைய தம்பியப்பா
நலமான காட்டிலவன் செல்லும்போது
தாழ்ந்திடவே புலிதின்று போட்டதப்பா
தயவாக மூன்றுபே ரிறந்திட்டாரே.

இ-ள். வாழ்க இவனுடையப் பெரிய அண்ணன் குளத்தில் வீழ்ந்து இறப்பன்; அவர்க்கிளைய அண்ணன் அக்கினியில் வீழ்ந்துப்பிணியால் வாடியிறப்பன்; இவனுக்கு இளையதம்பிக் காட்டில் செல்லும்போதுப் புலியானதுத் தின்றுப்போடும். இப்படியாக மூன்றுபேரும் மரணமாகிறார்கள் எ-று.

61

இறக்கவே விவன்வயதோர் பதினெட்டுக்குள்
இயல்பான மூன்றுபேர் பிறவிபோனார்
பறக்கவே இவன்வயதைந் தாண்டிற்றானும்
பண்பான மாரிகண்டத்தான் மெலிந்தான்
கறக்கவே இவன்பதி னாறுக்குள்
கனத்ததோ ரிவன்பிதா விறந்தான்பாரு
துறக்கவே வயதிருபத் திரண்டிலேதான்
துரவான மாதாவு மிறந்தாள்பாரே.

இ-ள். இவன்வயதுப் பதினெட்டுக்குள் இவன் உடன்பிறவி மூன்றுபேரும் மரணமாகிப்போனார். இவன் வயது ஐந்தில் அம்மையானதுகண்டு மெலிவான். வயதும் பதினாறுக்குள் தகப்பன் மரணமாகுவன். இவன்வயது இருபத்திரண்டில் தாயாரும் மரணமாகுவள் எ-று.

62

பார்க்கவே வயதிருபத் தெட்டிலப்பா
பலமான வியாதிகண்டத் தான்மெலிந்தான்
பார்க்கவே இருபத்து மூன்றுமாண்டில்
இயல்பான விவாகமுந்தா னாகும்பாரே
பார்க்கவே வயதிருபத் தாறின்மைந்தா
கனகம்போற் புத்திரனும் பிறப்பானப்பா
தீர்க்கமாய்க் குழந்தையது பிறந்தயோகம்
திரமாக வதிகாரஞ் செலுத்துவானே.

இ-ள். இவன் தனக்கு வயது பதினெட்டில்பலமான வியாதி கண்டத்தினால் மெலிவான்; வயது இருபத்திமூன்றில் விவாகமானது ஆகும்; வயது இருபத்தாறில் கனகம்போல்புத்திரன்பிறப்பான்; தீர்க்கமாகத்தானே இவனுக்கு குழந்தையானதுப் பிறந்தயோகமதினால் திரமாகத்தானே அதிகாரஞ் செலுத்துவான்,

யானென்ற விவன்றனக் காறுபிள்ளை
வளமையாய்ப் பிறக்குமடா மக்கடானும்
ஆனென்ற நாலுபேர் நிலைப்பாரப்பா
ஆகாம விரண்டுபேரி றப்பாறன்றோ
ஊனென்ற இவனுக்குக் கண்டம் நாலு
உற்பனமாய் முடியுமென் றுரைத்தேன் மைந்தா
கானென்ற சத்துருவாற்கண்டமொன்று
கனமிருகத் தாலுமொரு கண்டந்தானே.

இ-ள். இவனுக்கு ஆறுபிள்ளைகள் பிறக்கும்; ஆண்குழந்தைகள் நாலு நிலைக்கும்; இரண்டு குழந்தைகள் மரணமாகிவிடும், இவனுக்குக்கண்டம் நாலுண்டாகும், அதாவது சத்துருக்களால் கண்டம் ஒன்று மிருகத்தினு லொன்றும் எ-று. 64

கண்டமப்பா வாயுதத்தால் வருமோர்கண்டம்
கருணையான் மாரிகண்டங் கதிக்கத்தீரும்
அண்டமப்பா புவனங்கண் மெய்க்க வாழ்வன்
ஆச்சரியந் தொழின்முறையு மந்திரவாதி
பண்டமப்பா பலதொழிலுஞ் செய்வான்பாரு
பாக்கியவான் புண்ணியங்கள் செய்வானப்பா
கொண்டதோ ரிவன்விடந்தான் குபேரன்போலாம்
கொற்றவர்கள் சார்புள்ளான் மிகவுநன்றே.

இ-ள். இவனுக்கு ஆயுதத்தினுல் கண்டம் ஒன்று சம்பவிக்கும், அம்மையால் கண்டமானது வந்துநீங்கும், அண்ட புவனங்களும் மெச்சும்படியாக வாழ்குவான் கைத்தொழில் முறைசெய்வன் மந்திரவாதியாக இருப்பன் பலதொழிலுஞ் செய்வான் பாக்கியவானுகிப் புண்ணியங்கள் புரிகுவன், இவன் கொண்டவிடமும் குபேரன்போல் உள்ளவர்களாம் இவன் அரசர்களின் சார்புள்ளவனுகும் எ-று. 65

நன்றெனவே விவனுவித்தை படிப்பான் பாலன்
நலமுள்ள தொழின்முறைகள் படிப்பான்பாலன்
அன்றெனவே வினுவினுலு நாளின்கெற்பம்
ஆச்சரியம் கீழ்முகமாய் புணர்ச்சியாகி
வன்றெனவே முதற்சாமந் தரித்தகெற்பம்
வளமையுள்ள பாலனென்றே மதித்தேன்பாரு
குன்றெனவே லக்கினத்திற் கிரகம்ரெண்டு
குணமாக விருந்ததப்போ தமைந்தான்றுனே.

இ-ள். நன்றுகத்தானே இவனுக வித்தைகள் படிப்பன் நலமுள்ள தொழில்முறைகளுங்கற்பான் இவன்தாயார் குளித்த நாலாம்நாள் கெற்பந்தரித்தவன் கீழ்முகமாகத்தானே புணர்ச்சியானதுவாகிமுதற்சாமத்திற்தரித்த கெற்பமாகும். இவன் வளமையுள்ளபாலனுகும், இவன் பிறந்த இலக்கினத்தில் கிரகம் ரெண்டு நிற்கப் பிறந்தான் எ-று. 66

தாளடா விவன்வயதோ ரறுபத்தெட்டில்
தான்கீழே விருந்திவனு மடிவானப்பா
வானடா யான்சொன்ன மொழிதான்மைந்தா
வையகத்தி லுமையவடான் சொன்னவாக்கியம்
ஊனடா வுலகமெல்லாம் பிழைக்கவேண்டி
உத்தமியும் பாடிவைத்தாள் கடாட்சம்வைத்து
யானடா வடமொழியைத் தமிழாற்பாடி
ஆச்சரிய மாகவைத்தே னறிவினாலே.

இ-ள். தானாகிய இவன்வயது அறுபத்தெட்டில் தான்கீழே விழுந்து மடிவான்; நான் சொன்ன மொழியானது வையகத்தில் உமையவள் மொழியாகும்; இந்த உலகமெல்லாம் பிழைக்க வேண்டி உத்தமியாளும் பாடிவைத்தனள்; யான்வடமொழியைத் தமிழினாற்பாடி ஆச்சரியமாக வைத்தேன் அறிவினால் எ-று. 67

நாலென்ற வின்னமொரு ரேகைமைந்தா
நலமான ரேகையதைச் சொல்லக்கேளு
தாலென்ற தனஞ்சியனென்ற ரேகையப்பா
தாழ்வில்லா ரேகையடா சொல்லக்கேளு
ஆலென்ற வாச்சரிய முள்ளரேகை
அப்பனே சந்தரவு தையரேகையொன்று
காலென்ற சௌபாக்கிய ரேகையொன்று
கண்டிப்பாய் ரேகையிரண் டிருக்கும்பாரே.

இ-ள். இன்னமொரு ரேகையானதுண்டு அதைச் சொல் வேன்கேளும். தனஞ்சயனெனும் ரேகை; அதுதாழ்வில்லாது சொல்லக்கேளும்; ஆச்சரியமுள்ள ரேகை அதாவது சந்திரோ தயரேகை ஒன்று சௌபாக்கியரேகை யானதொன்று இவை இரண்டு ரேகைக்கும் பாரும் எ-று. 68

பாரப்பா நடுக்கரத்தில் மால்விரலில்தான்
பக்குவமாய் யிரண்டுகணு வேறிநிற்கும்
சீரப்பா இரண்டுவட்டந் திரிகோணந்தான்
சிறப்பாக வைந்துபுள்ளி இருக்கும்பாரே
காரப்பா ரேகையெல்லாஞ் சிவந்துகாணும்
காரணமா மிந்தநல்ல ரேகைகண்டால்
பேரப்பா சந்திரகுல ராசர்கையில்
பெருமையுள்ள ஸ்ரீரேகை இருக்கும்பாரே.

இ-ள். பார்க்க நடுக்கரத்தில் மால்விரலில் இரண்டுகணுவில் யேறி நிற்கும் அதில் இரண்டுவட்டம் திரிகோணம் ஐந்துபுள்ளி யிருக்கும் அவ்விரேகையெல்லாம் சிவந்துகாணும் இவ்விதமாக இருக்குமாயின் அன்றியும் பேராகியச் சந்திர குலராசர் கையில் ஸ்ரீரேகையிருக்கும் எ-று. 69

பாரடா ரேகையுள்ள மைந்தனோடு
பதினாறு பிள்ளைகடான் பிறப்பார்பாரு
காரடா இவன்றாய்க்கு முதலாம்பிள்ளை
கனக்கவே யிவன்பிறந்த நாளுங்கோளும்
தீரடா இவனிடத் திசையும் வாழ்வும்
தீர்க்கமாய் பெருமைமுத லெல்லாஞ்சொல்வேன்
ஊரடா உலகத்னிற் பெருமையுள்ளான்
உத்தமிதன் வயிற்றிலிவன் பிறப்பானன்றே.

இ-ள். மேற்கூறிய ரேகையுள்ள மைந்தனோடு பதினாறுபிள்ளைகள் பிறப்பார். அதில் இவன்றாய்க்கு முதற்பிள்ளையாகும் இவன் பிறந்த நாளுங்கோளும் திசையும் வாழ்வும் தீர்க்கமும் பெருமை முதலானதுஞ் சொல்வேன் இவன் உலகத்தில்பெருமையுள்ளான் நல்ல உத்தமியின் வயிற்றில் பிறப்பான் எ-று. 70

அன்றெனவே இவன்மாதா மைந்தாகேளு
ஐசுவரிய முள்ளவளாம் முதலாஞ்சாதி
நன்றெனவே இவன்றாயுந் தந்தையுந்தான்
நன்மனதாய்ப் பாலுடனே யன்னமுண்டு
குன்றெனவே மாதிவாரம் இரண்டாஞ்சாமம்
குணமாக இருவருமே கூடினார்கள்
வன்றெனவே கீழ்முகமாய்த் தலையைவைத்து
வலியசதா சிவத்தையெண்ணி சேர்ந்திட்டாரே.

இ-ள். அன்றியும் இவன் தாயார் ஐசுவரிய முள்ளவள் முதலாவது ஜாதியாளாகும்; இவன்றாயும் தந்தையும் நல்ல மனதோடுப் பாலும் அன்னமுமுண்டு ஞாயிற்றுக்கிழமை இரண்டாஞ்சாமம் குணமாகத்தானே இருவருங்கூடிட கீழ்முகமாய்த் தலையை வைத்தும் சதாசிவத்தை எண்ணிக்கூடினார்களாம் எ-று. 71

சேர்ந்தவர்கள் இருபேரு மனிதராவர்
செம்மையுள்ள முற்சனனந் தேவராகும்
ஆர்ந்தவிவ் விருவரிட கணமொன்றப்பா
அப்பொழுதில் கிரகமைந் துச்சந்தானும்
வார்ந்திருவர் வாலவய ததனிற்கூடி
வண்மையுள்ள லீலையினால் வகித்தமைந்தன்
ஊர்ந்ததோ ருற்பனத்தா லுமையாண்மாலும்
உபசரித்தா ரிவன்செய்த பாக்கியத்தாலே.

இ-ள். சேர்ந்தோர்கள் இருவரும் மனிதர்களாகும் முன்செனனத்தின் தேவர்களாகும் இவ்விருவர்களுடையக் கணமுமொன்றாகும் அப்போது கிரகம்ஐந்து உச்சம்பெற்றிருந்தனவாம் இவர்கள் இருவரும் வாலவயதிற்கூடி வண்மையாகிய லீலைசெய்ததினால்

வகித்த மைந்தனுகும் அன்றியும் உமையவளும் மாலும் உபசரித்தனர் இவன்செய்த பாக்கியத்தாலும் எ-று.

72

பாக்கியந்தான் இவன்பிறவி யானதப்பா
பண்பான நவநாளிற் கெற்பமானுன்
நாக்கியந்தா னவமுகம ளித்தகெற்பம்
நலமுள்ள மைந்தனுக்குப் பத்துமாதம்
சாக்கியம்போ லிவன்ருனுஞ் சதையந்தன்னில்
சர்ச்சனனும் பிறந்திட்டான் செவ்வாய்ராவில்
சோக்கியந்தான் றசமியிலே பிறந்தான்பாலன்
சுதன்பிறந்த வேளைமிக நல்லதென்றே.

இ-ள். பாக்கியமாகத்தானே இவன் பிறவியானது நவநாளிலானக் கெர்ப்பமாகும். அப்படி நவமுகமாகத் தரித்த கெர்ப்பம் பத்தமாதமுஞ்சென்று சதையநட்சத்திரம் அதனில் செவ்வாய்க் கிழமை இரவில்பிறந்தானுகும் திதிதசமியம்பிறந்தவேளை நன்ரும்.

நல்லதென்ற விவன்பிறக்கும் போதேமைந்தா
நலமான கிரகமதி லைந்துச்சந்தான்
அல்லவேகே ளிவன்பிறந்த லக்கினத்தில்
அன்பான மாலவனும் இருந்தான்பாரு
வல்லதென்ற வண்மையினுற் பிறந்தமைந்தன்
வரிசைதனைச் சொல்லுகிறேன் வகையாய்க்கேளு
மல்லதென்ற இவனுடைய ரூபத்தோடு
மகத்தான யோகமது மருவிக்கேளே.

இ-ள். இவன் பிறக்கும்போது கிரகம் ஐந்தும் உச்சம்பெற்றுயிருந்தனவாம் இவன்பிறந்த லக்கினத்தில் புதன் இருந்தனன் இவ்விதமாக நன்மையாகப்பிறந்தமைந்தனுடைய வரிசையைச்சொல்வேன்கேளும் இவனுடைய ரூபத்திேைடு யோகத்தையும் கேளும்.

கேளப்பா இவன்ருனு மழகன்மெத்த
கேவலமாய்த் திசையோக முள்ளமைந்தன்
நாளப்பா கிரீடியடா வடிவிலேதான்
நலமுள்ள பாலகனும் பிறந்தான்பாரில்
வாளப்பா இவன்ருனும் வில்வின்வித்தை
வளமான வேதமுத லெல்லாங்கற்பன்
ஆளப்பா இவனைப்போ லுலகந்தன்னில்
அன்பான பாலகனும் இல்லைபாரே.

இ-ள். கேட்பாயாக இவன் மெத்தவும் அழகுடையவன் திசையோகமுள்ளவன் கிரீடியைப்போல் வடிவுடையவன் இத்தன்மையாகப் பாலனும் பூமியிற்பிறந்தான். இவன் வில் வித்தையும் வேத முதலானதுங் கற்பான் இவனைப்போல உலகில் அன்பானப் பாலரில்லையாம் எ-று.

75

பாரடா இவன்ரூப முப்பத்திரெண்டு
பண்பான லக்ஷணத்தோ டிருப்பான்பாரு
சீரடா இவனுக்குற் றப்பாமற்றான்
சிறப்பாக லக்ஷணங்க டிரமாய்க்காணும்
கூறடா முன்பிறப்பி லிவனுக்குத்தான்
குறிப்பான சாபமொன் றுண்டுபாரு
தீரடா வந்தநல்ல சாபந்தானும்
திறமாக பதினெட்டாண் டிருக்குங்காலே.

இ-ள். பார்க்க இவன் ரூபமானது முப்பத்திரண்டு லட்சணமுடையவனாகவிருப்பான் கூறியலட்சணங்கள்ஒன்றுங்குறையாமலிருப்பன். அன்றியும் இவனுக்கு முன்பிறப்பில் சாபமனது ஒன்றுண்டாம் தீர அந்தசாபம் பதினெட்டுவருடமிருக்கையில் எ-று.

காலமென்ன வெகுவருமைப் பட்டார்மைந்தா
கண்கலங்கி வருமையினால் வளர்க்குங்காலம்
சீலமெனுஞ் சிவனிடச் சோதனையாலே
சிவசிவா வன்னமவர்க் கில்லாத்தாலே
பாலனென்ற பிள்ளைகடான் பசியாநொந்து
பதைபதைத்து மயங்கிமிகக் கிடக்கும்போது
ஆலமுண்ட வருணகிரி யாரைநொந்து
அற்புதமாம் பிள்ளைகளை வீட்டிலிட்டே

இ-ள். காலாக வெகு வருமையானதுப் பட்டுக் கண்கலங்கி வறுமையினால் வளருங்காலத்தில் சிவபிரானுடையச் சோதனையில் அன்னம் அவர்க்கில்லாதாலும் பாலர்கள் பசியால் நொந்து பதைபதைத்து மயங்கிக் கிடக்கும்போது பரமசிவனை நொந்து பிள்ளைகளை வீட்டில் விட்டுவிட்டு எ-று. 77

இட்டிடவே பிள்ளைகளை மனையிலிட்டு
இயல்பான தேவியுடன் றானுமப்போ
கட்டிடவே குழந்தைகளை மனையிலிட்டு
காரணத்தால் வாசலைத்தா னடைத்துமூடி
விட்டிடவே பசியினாற் குழவியெல்லாம்
மெலிந்துமிக விகாரமதாய் மயக்கமாகி
மட்டிடவே மனமெல்லாஞ் சோர்ந்துபாலர்
வாய்விட்டுக் கதறியங்கே வீழ்ந்ததன்றே.

இ-ள். பிள்ளைகளை மனையில் விட்டு மனையாளுடன் தானும் அப்போ கதவை மூடிக்கொண்டு போக அப்போதும் பாலர்கள் பசியினால்மெலிந்து மயங்கி விகாரமான மயக்கமாகி மனமெலாஞ் சோர்ந்து பாலர்கள் வாய்விட்டுக் கதரி வீழ்ந்தனராம் எ-று. 78

வீழ்ந்திடவே வழுதழுது மயங்கிவீழ
வியல்பாகப் பிள்ளைகடான் சோர்ந்திருக்க

தாழ்ந்திடவே தருமமே செயமென்றெண்ணி
தன்றேவி தானிருவ ரிரண்டுபேரும்
ஆழ்ந்திடவே வரனுமைக்கே அபயமென்று
ஆசரித்தா ரன்னேர மபையஞ்செய்ய
வாழ்ந்திடவே இவர்முறையை உமையாள்கேட்டு
வருத்தமுற்றுச் சிவன்பதத்தில் வணங்கினளே.

இ-ள். அழுது ஆழுது மயங்கிவீழ பிள்ளைகள் சோர்ந்திருக்க இவர்கள் தருமமே ஜெயமென்றுயெண்ணிதன் தேவியும் தானும் இரண்டுபேரும் அரனுமைக்கபயமென்று ஆசரித்து அபயஞ் செய்ய இவர்கள் முறையை உமையாள் கேட்டு வருத்தமுற்று சிவனுடையப்பாதத்தில் வணங்கினள். எ-று. 79

ஆதியேபராபரனே கைலைமூர்த்தி
அற்புதமே வரனாரே வையாபூமி
சோதியே பரஞ்சுடரே மகாதேவாநீர்
சொல்லுகிறேன் மைந்தரையுங் காக்கவேணும்
ஓதிசெய்யு மொருகாரணந்தான்
நிர்ணயமாய்ப் பிள்ளைகளைக்காருமென்ன
நாதனுமை இருபேரு மன்னம்பாலு
நலமுடனே கொண்டுவந் தீந்திட்டாரே.

இ-ள். ஆதியே பராபரப்பொருளே ஓ கைவலைவாழும் மூர்த்தியே அற்புதமாகிய வரனாரே பூமியைப்படைத்தவரே சோதியே பரஞ்சுடரே ஓ மகாதேவா நீர் மைந்தர்களைக் காக்க வேண்டும். இப்பிள்ளைகளைக் காருமென்ன அம்மொழிக்குப் பரம ணிறங்கி அரனும் உமையும் இருபேரும் அன்னம்பாலும் எடுத் துக்கொண்டு வந்து அந்தப் பாலர்களுக்கு ஈந்தனராம் எ-று 80

ஈந்தவுட னெல்லவரும் பசிகடீர்ந்து
இளைப்பாற்றிக் குழந்தைகளை காத்தாரப்போ
வாந்தமுள்ள சகலசவு பாக்கியந்தான்
வண்மையாய்க்கொடுத்தார்க ளப்போதானே
சாந்தமுட னீஸ்பரனும் உமையாளுந்தான்
சலியாத வரங்கொடுத்துப் போனாரப்போ
ஏந்தவுடன் வாழ்ந்திருந்தா ரிவர்களுக்கு
எம்பிரான் னருளாலே இன்னங்கேளே

இ-ள். அப்படிக்குக் கொண்டுவந்து யீந்தவுடன் உண்டுப் பாலர்கள் பசிதீர்ந்துக் களைத்தீரக்காப்பாற்றினர்கள் சகல சௌ பாக்கியமும் அப்போதே கொடுத்தனர் அன்றியும் ஈஸ்வரனும் உமையாளும் கலையாமற்படிக்குவரமானது யீந்தார்க ளப்போது பாலரோ சுகமாகவாழ்ந்திருக்க எம்பிரானுடைய அருளினல் இன்னமுங்கேளும் எ-று. 81

கேளப்பா சந்திரோதய ரேகைமைந்தன்
கேவலமாய்க் குபேரனைப்போல் வாழ்ந்தானப்போ
நாளப்பா இவனுக்குத் தாரம்ஒன்று
நலமாக இருபத்தோ ராண்டிலாச்சு
வாளப்பாமைந்தர்களு மிரண்டுபேராம்
வளமாகப் பிறப்பார்காண் மைந்தனுக்கு
ஆளப்பா இவனுக்கே யனேகபாக்கியம்
ஆச்சரியம் வந்ததுவு மருமையாலே

இ-ள். கேட்பாயாக சந்திரோதய ரேகையுள்ள மைந்தன் குபேரனைப்போல் வாழ்குவன். இவனுக்குத் தாரமானது ஒன்று இருபத்தோராம் வயதில் விவாகமானது ஆச்சுதாம் இவனுக்கு மைந்தர்கள் இரண்டு பேராம் அவர்களும் வண்மையாகத்தானே பிறப்பார்கள். இவனுக்கு அனேகபாக்கியம் ஆச்சரியமாகத் தானே வந்த தருமையாம் எ-று. 82

அருமையென்ற இவனுடைய யோகவாழ்க்கை
ஆச்சரிய மெத்தவப்பா சொல்லக்கேளு
வருமையென்ற வருமையெல்லா மோடிப்போச்சு
வளமையாய் இவன்றானும் வாழ்வதாச்சு
பெருமையென்ற பெருமைமெத்த இவன்வாழ்வுத்தான்
பொல்லாதகாரியங்கள் செய்யமாட்டான்
விருமையென்ற வருமையட மயேந்திரயோகம்
விரிவான வஷ்டசித்தும் வசமதாமே

இ-ள். அருமையாகிய இவனுடைய யோகவாழ்க்கை மெத்த வுண்டாம். சொல்வேன்கேளும். இவனுக்கு வறுமைகள் யாவும் ஓடிப்போயினவாம்; வளமையாகிய வாழ்வு உண்டாயினவாம் பெருமையானது மெத்தப்பெருகும் பொல்லாத காரியங்கள் ஒன்றுஞ் செய்யமாட்டான். வருமையாகிய மயேந்திர யோகம் அட்டசித்தும் வசமாகும் எ-று. 83

ஆகுமப்பா இவன்வயதோ ரிருபத்தெட்டில்
அன்பான பிதாவுந்தான் இறப்பான்பாரு
காகுமப்பா இவன்வயது முப்பதுக்குள்
கருணையுள்ளமாதாவு மிறப்பதாகும்
வாகுமப்பா இவன்வயது இருபத்திமூன்றில்
வண்மையுள்ள மைந்தனுக்கே விவாகமாகும்
மாகுமப்பா பராபரனு முமையாள்வாக்கியம்
பண்பாக நடக்குமென்று பகருவீரே.

இ-ள். ஆக இவன்வயது இருபத்தெட்டில் இவன் தகப்பன் மரணமாகுவான், வயது முப்பதுக்குள் தாயார் மரணமாகுவள், வயது இருபத்தி மூன்றில் இவன் தனக்கு விவாகமாகும், பராபரனும் உமையாளும் சொன்ன வாக்கியம் பண்பாகத்தானே நடக்குமென்றுப் பகர்வீராகும். எ-று. 84

பகருவேன் இன்னமொரு ரேகைமார்க்கம்
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நிகருவே னதினுடைய பெருமையெல்லா
நிச்சயமாய்ச் சொல்லுகிறே னினைவாய்க்கேளு
அகருவே ளாதிபொருள் ரேகையொன்று
அப்பனே யதின்பெருமை யறியச்சொல்வேன்
வகருவேன் வாலைமனோன் மணித்தாய்சொன்ன
வாக்கியத்தின் படிச்சொல்வேன் மைந்தாகேளே

இ-ள். பகருவேன் கேட்பாயாக, இன்னமொரு ரேகையான துண்டு; அதின் பெருமையைச் சொல்வேன் கேளும்; அதாவது ஆதிபொருள் ரேகை ஒன்று அதின் பெருமையை அறியச் சொல்வேன்; வாலை மனோன்மணியாகிய என்தாய் சொன்ன வண்ணம் யான்சொல்வேன் கேளும் எ-று. 85

கேளப்பா விர்ப்பன்ன ரேகையொன்று
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நாளப்பா வங்குஷ்ட விரலிலேதான்
நலமாக இருபுள்ளி இரண்டுகீறு
வாளப்பா வதின்கீழே வைசுபரியரேகை
வண்மையாய் முக்கோண மாயிருக்கும்
வாளப்பா விர்ப்பன்ன ரேகையோகம்
வண்மையாய் நடக்குமதின் பலன்சொல்வேனே.

இ-ள். கேட்பாயாக விற்பன ரேகையானது ஒன்றுச்சொல்கிறேன் அங்குஷ்ட விரலில் இருபுள்ளியும் இரண்டு கீறுமிருக்கும் அதின் கீழே வைசுபரிரேகை முக்கோணமாயிருக்கும் இவ்வகை விற்பன்னரேகையின் யோகம் வண்மையாக நடக்கும் பலனைச் சொல்வேன் எ-று. 86

சொல்லுவே னிவன்பிறந்த யோகவாழ்க்கை
சுகமுள்ள இவனுடைய திசையுஞ்சொல்வேன்
அல்லுவே னிவன்பிறந்த மனைதான்மைந்தா
அன்பான அயல்வீட்டிற் பிறந்தபாலன்
நல்லுவேனிவன்பிறவி மூன்றுபேராம்
நலமுள்ள பிதாவுக்கிவன் மூத்தபிள்ளை
இல்லுவே ளாணிரண்டு பெண்ணொன்றப்பா
இயல்பாகப்பிறக்குமென்றே சொன்னேனப்பாரே.

இ-ள். சொல்வேன்யிவன்பிறந்தயோகவாழ்க்கையுஞ்சுகமும் திசையும் சொல்வேன்; இவன் பிறந்தமனையானது அயல்வீடாகும்; அதிற்பிறந்தவன் இவனுடன் பிறந்தவர்கள் மூன்று பெயராகும் அதில்யிவன் மூத்தோனாகும் அதில் ஆண்ரெண்டு பெண் ஒன்றும் இயல்பாகத்தானே பிறக்கும் எ-று. 87

சொன்னப்பா இவன்பிறக்கும் போதுமைந்தா
சொற்பெரிய பிதாவுமவன் வீட்டிலில்லை
அன்னப்பா தன்னுடைய தாய்மாமன்றான்
அன்பாகவன்னேர மிருந்தானங்கே
வன்னப்பா இவன்பிறந்த போதுமாதா
வண்மைமெத்த விசனமுடன் பெற்றாள்பாரு
மன்னப்பா இவன்பிறந்த உடனேகேளு
மாடதுவும் பிதாவினைத்தான் குத்துமன்றே

இ-ள். சொன்னவண்ணம் இவன் பிறக்கும்போது இவன் பிதாவும் வீட்டிலில்லையாம்; அம்மான்மார் அவ்வேளையிலங்கு யிருந்தார்; இவனை இவன்றாய் மெத்தவும் விசனமோடுப் பெற்றாள். இவன் பிறந்தவுடனேமாடானது தகப்பனைக்குத்தும் எ-று

குத்திடவே இவன்பிறந்த நாலாமாண்டில்
குணமுள்ள பிதாவினுக்கே அலைச்சலாகும்
பத்திடவே பாலகன்றான் பிறந்தநாள்தான்
பரியனவே வசுபதியின் முதற்காலப்பா
நத்திடவே திதியேகா தசியதாகும்
நலமாகப்பிறந்திட்ட ணுடிச்சொன்னேன்
முத்திடவே இவன்மூன்று நாளின்கெர்ப்பம்
முதற்சாமப் புணர்ச்சியிலே பிண்டமாச்சே

இ-ள். குத்திட இவன்பிறந்த நாலாம் வருடத்தில் தகப்பனுக்கு அலைச்சலுண்டாகும். பாலன் பிறந்தநாள் அசுபதியின் முதற்காலாகும்; திதி ஏகாதசியாகும் நலமாகத்தானே பிறந்தான் இவன் தாயார் குளித்த மூன்றுநாள் கெர்ப்பந் தரித்தோ 89
ருக்கும் முதற்சாமம் எ-று.

பிண்டமடா பாலனிவன் பிறந்ததாலே
பிரியமாய்லக்கினத்திற் செவ்வாய் சுக்கிரன்
அண்டமடா சனியுடனே மூன்றுபேர்கள்
அன்பாக விருந்தார்க ளந்நேரத்தில்
விண்டனடா விர்ப்பனா யிருந்துவாழ்வான்
விருதான இவன்வயதில் விபரங்கேளு
கண்டமடா இவனுக்கே ஆறுகண்டம்
கருணையால் வந்ததென்றே கருதிச்சொல்லே.

இ-ள். இப்பாலன் பிறக்கும்போது இலக்கிணத்தில் செவ்வாய் சுக்கிரன் சனி இவர்கள் மூன்றுபேரும் நல்லவராகயிருந்தார்; ஆதலால் இவன் விர்ப்பன்னாக யிருந்து வாழ்குவான்; இவன் வயதின் விபரங்களும் கண்டம் இவனுக்கு ஆறுண்டாம் 90
யெனக் கருதிச்சொல்வாய் எ-று.

சொல்லவே இவனுக்கு வயதுமைந்தா
சொல்லுகிறே னறுபத்தெட் டாகுமப்பா
நல்லுவேன் இவன்வயது பதின்மூன் றுக்குள்
நல்மாக விவாகமது முடியுமன்றே
அல்லுவே னிவனுக்குப் பிள்ளைநான் காம்
அன்பான ஆணிரண்டு பெண்ணிரண்டு
உல்லுவே னிவன்மைந்தர் யோகசாலி
உத்தமர்க்கே நல்லிடத்தில் விவாகமாமே

இ-ள். சொல்ல இவனுக்கு வயது அறுபத்தெட்டாகும் இவனுக்கு வயதுப் பதின்மூன்றுக்குள் விவாகமானது முடியும். பிள்ளைகள் நான்குண்டாகும்; அதில் ஆண் இரண்டு பெண்யிரண் டாகும். இவனுடைய மைந்தர்கள் யோகசாலிகளாவர் உத்தமர் களாகிய இவர்கட்கு நல்லவிடத்தில் விவாகமாகும் எ-று. 91

ஆகவே இவன்வயது பதினாறுக்குள்
அன்பான பிதாவுந்தான் இறப்பான்பாரு
தாகவே இவன்வய திருபத்தாறில்
தனைப்பெற்ற தாயாருஞ் சாவாள்பாரு
யாகவே பணிமொழியா ளிவன்றேவியாகும்
பைங்கொடியாள் பத்மினிப்பெண் ணாகும்பாரு
ஆகவே ஆச்சரிய முள்ளமைந்தன்
அதிகார முடையபிர பல்லியத்தோரே.

இ-ள். ஆக இவன்வயதுப் பதினாறுக்குள் தகப்பன் மரண மாகுவான் வயது இருபத்தாறில் தாயார் மரணமாகுவாள்; இவன்றேவி பணிமொழியுடையவளாகும், பத்மினிசாதியாகும், இவன் ஆச்சரியமுள்ளவனாகும்; அதிகாரமும் பிரபலமுடையோ னாக வாழ்குவான் எ-று. 92

தேறவே சதுர்ப்பந்த ரேகையொன்று
தோன்றுதலைச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆறவேமால்விரலிற் கீழேயப்பா
அன்பான ருத்திரவரை கீழேநிற்கும்
சாரவே சதுர்ப்பந்த ரேகைதானே
சற்சனாய் இருகீறு ரெண்டுபுள்ளி
கூறவே திரிகோணத் துடனேமைந்தா
குணமாக இருக்குமது கூறக்கேளே.

இ-ள். தேறும்படியாக சதுர்பந்தரேகையான தொன்று சொல்லுகிறேன் கேளும்; அதுமால்விரலின் கீழேருத்திரவரைக் கீழே நிற்கும் சதுர்பந்த ரேகையானது இருகீறும் இரண்டு புள்ளியும் திரிகோணமுடனிருக்கும் எ-று. 93

கேளப்பா பாஞ்சால னலாஞ்சாதி
கேவலமாய்க் கரிமுகவன் வர்ணமாகும்
நாளப்பா விகாரமுங் குத்தரூபம்
நலமாக விருக்குமடா நாடிக்கேளு
ஆளப்பா இவன்பிறந்த பிறவியோகம்
அன்பாகச் சொல்லுகிறே னய்ந்துகேளு
வீளப்பா இல்லாமற் றிசையோகத்தில்
விகற்பமாய் வாழ்ந்திருந்த விபரங்கேளே.

இ-ள். கேட்பாயாக மேற்கூறிய ரேகையுடையோன் பாஞ்சாலன் நான்காஞ் சாதியாகும்; ஆனையைப்போன்ற நிறமுடையவனாகும், விகாரரூபன், இவன் பிறந்தயோகஞ் சொல்கிறேன் கேளும், இவனுக்குத் திசை யோகமானது யில்லாமல் விகற்பமாகத்தானே வாழ்ந்த விபரங்கேளும். 94

கேளடா இவன்பிறவி பத்துபேராம்
கேவலமா யாணெட்டு பெண்ணிரண்டாம்
வாளடா இவன்றானு நாலாம்பேறும்
வண்மையாய்ப் பிறந்தனடா பூசந்தன்னில்
நாளடா நன்மையுள்ளமைந்தன்றானும்
நலமான போகவான்றா னடிப்பாரு
தாளடா இவன்றனக்குக் குடியூர்மூன்றாம்
தாரமிரண் டிவனுக்கு யாகுந்தானே.

இ-ள். கேட்பாயாக இவனுடன் பிறந்தோர் பத்துபெயராகும் அதில் ஆண் எட்டு பெண் இரண்டாம் இவன் நாலாவதுப் பிள்ளையாகும் பூசநட்சத்திரத்தில் பிறந்தவன்; நலமுடைய மைந்தன் யோகவான்; இவனுக்குக் குடியிருப்பாயாகிய ஊர் மூன்றாகும்; தாரம் இரண்டுண்டாகும் எ-று. 95

ஆகுமப்பா விவாகமது இரண்டதாகும்
அன்பாக முடியுமென் றய்ந்துசொல்லு
வாகுமப்பா இவனுக்கு பிள்ளையாறும்
வண்மையாய்ப் பிறக்குமென்றே வசனித்தேனும்
பாகுமப்பா பலபொருள்கள் சேரும்யோகம்
பாங்கான இவன்பெருமை பகரக்கேளு
ஆகுமப்பா இவன்றானு மேழாங்கெர்ப்பம்
ஆச்சரிய முள்ளமைந்த னறிவுகூறே.

இ-ள். இரண்டு விவாகமும் பிள்ளைகள் ஆறுபிறக்கும் பலவிதமான பொருள்கள்சேரும் யோகத்தினால் இன்னமும் இவனுடைய பெருமையைச் சொல்வேன்கேளும்; இவன் தாயார் குளித்த ஏழுநாள் கருதரித்தவனிவனாகும் ஆச்சரிய முள்ளவன் எ-று. 96

கூறுகிறே னிவன்மாதா தலைகுளித்து
குறிப்பாகப் புருஷனுடன் குலாவியேதான்
தீறுகிறேன் மாமிசபட் சணங்கள்செய்து
திறமாகத் தென்முகமாய்ப் புணர்ச்சியானார்
மாறுகிறேன் முற்சாம நித்திரைசெய்து
மருவியவ ரிருபேரும் லீலையானார்
சாறுகிறே லக்கினத்திற் சுங்கன்புந்தி
சற்சனராய் சனிமூவ ரிருந்திட்டாரே.

இ-ள். மாதா தலையானது குளித்து புருஷனுடன் குலாவி மாமிச பட்சணங்கள் செய்து தென்முகமாகப்படுத்தும் புணர்ச்சி யானதுசெய்ய முதற்சாமம் நித்திரையானதுப் பிரிந்து தெளிந்து மருவிலீலையானது புரிந்தார். இவன் பிறக்கும்போது இலக்கினத் தில்சுக்கிரன்புதன்சனி இவர்கள்மூவரும்சர்ச்சனராகவிருந்தனர்.

இருந்திடவே இவன்பிறந்த மனைதான்மைந்தா
இயல்பாக வடவாச லொற்றைக்கூரை
பொருந்திடவே இவன்பிறக்கும் போதுமைந்தா
போதமுள்ள பிதாவுமவன் வீட்டிலில்லை
அறிந்திடவே யாச்சரிய முள்ளபாலன்
அன்பான கர்க்கடக லக்கினத்தில்வந்தான்
வறிந்திடவே பூரநாளு ரெண்டுகாலம்
வண்மையுடன் பிறந்தனடா மைந்தன்றனே.

இ-ள். இருந்திட இவன்பிறந்த மனையானது வடக்குபார்த்த வாசல் ஒன்றைக் கூரைவீடாகும் இவன் பிறக்கும்போது தகப் பன் வீட்டிலில்லையாம்; இவன் ஆச்சரியமுள்ளப் பாலனாகும்; கர்க்கடகலக்கினத்திற் செனித்தவன்; பூரநட்சத்திரம் இரண்டாங் காலாம் வண்மையாகப் பிறந்தனன் எ-று. 98

தாணவெனு மிவனுக்கே வயதுமைந்தா
தன்மையா யெழுபத்தைந் தாகும்பாரும்
ஞானமெனு மிதனுக்குக் கண்டமெட்டு
நலமாக கடக்குமென நன்மைகூறு
வானமெனும் வண்மையுள்ள மைந்தனாகும்
வகுத்துரைப்பே னிவனுடைய வளமையெல்லாம்
கானமெனுங் கருணைபெற்ற மைந்தனப்பா
கடாட்சிக்கப் பிறந்தான்காண் உமையாற்றனே.

இ-ள். இவனுக்கு வயது எழுபத்தைந்தாகும் கண்டம் எட்டு கண்டம். அது தவறாமல் நடக்கும் வண்மையுள்ள மைந்தனிவ னாகும் இவனுடைய வளமையாவும் வகுத்துச் சொல்வேன் கே ளும். கருணையானதுப்பெற்ற மைந்தனாகும். கடாட்சிக்க உமை யருளால் பிறந்தோனாகும் எ-று. 99

உமையென்ற இவன்ருனு முன்னுடன்னில்
உத்தமனு நந்தியைத்தான் யூசைசெய்து
அமையென்ற வனேகவர முத்திபெற்ருன்
அதினுலே நிதிகிடைக்க போகம்பெற்ருன்
வமையென்ற இவன்வயது முப்பத்தெட்டில்
வாகான நிதிகிடைக்கும் வகையதாக
வமையென்ற இருதாரம் விவாகஞ்செய்வான்
பாலரைப்பெற் றெடுத்திடுவார் பாருபாரே.

இ-ள். இவன் முன்னுளில் நந்திதேவரைப் பூசையானதுச் செய்து அனேக வரங்களும் முத்தியாகப் பெற்ருன். இவன் வயது முப்பத்தெட்டில் நிதியானது கிடைக்கும்; இரண்டுதாரம் விவாகமானது செய்வான் பாலரைப் பெற்றெடுப்பன். 100

5-வது காண்டம் முற்றிற்று. ஆககாண்டம் 5-க்கு பாடல் 456

# ஆருவது காண்டம்

## சசிவர்னன் சம்புராதி ரேகைகளின் பலன்.

பாரப்பா சசிவர்னஞ் சம்புராதி
பாங்கான கனுவிரலி லிருக்கும்பாரு
காரப்பா இருகூறு மைந்துபுள்ளி
கருணையாற் சதுர்க்கோண மிருக்கும்பாரு
சாரப்பா சற்சனமா யைந்துரேகை
சார்வாக இருக்குமப்பா மைந்தாகேளு
கூரப்பா இவன்கையி லிருக்குமாகில்
கூறுகிறே னிவன்பெருமை கூறக்கேளே.

இ-ள். பார்க்க சசிவர்னஞ் சம்புராதி இவைகள் அனுவிரலி லிருக்கும் அது இருகூறும் ஐந்து புள்ளியும் சதுர்கோணமுமாக விருக்கும்; சர்ச்சனமாகத்தானே ஐந்துரேகைசார்ந்திருக்கும் அவ் விதரேகையுள்ளோன் பெருமையைச்சொல்கிறேன் கேட்பாயாக.

கேளடா இவன்பிறவி யோகவாழ்வு
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நாளடா இவன்பிறந்த மனைதான்மைந்தா
நலமான கீழ்வாசல் மனைதானுகும்
ஆளடா ஒத்தநல்ல கூரையாகும்
அன்பான பாலகனுங் கன்னிமூலை
வீளடா இல்லாமல் பிறந்தான்மைந்தன்
விபரமதைச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

இ-ள். கேட்க இவன் பிறவியும் யோகமும் வாழ்வும் யாவும் சொல்கிறேன் கேளும். இவன் பிறந்தமனை கீழ்வாசலுள்ள மனை யாகும், ஒத்தைக்கூரையுள்ளதாம் பாலன பிறந்தது கன்னிமூலை யாகும், இவன் பிறந்த விபரம் சொல்கிறேன் கேளும் எ-று. 2

கேளப்பா இவன்பிறந்தநன் மதியின்வாரம்
கேவலமாய் லக்கினத்தில் வியாழன்மைந்தன்
வாளப்பா இவன்பிறக்கும் போதிற்றனும்
வண்மையா யந்நேரம் பெண்கள்மூன்றும்
தாளப்பா இவன்பிறக்கும் போதிலன்று
தன்மையுள்ள பிதாவுந்தான் வீட்டிலில்லை
ஆளப்பா வாச்சரியம் பிறந்தபாலன்
ஆராலும் இவனைவெல்ல முடியாதன்றே.

இ-ள். இவன் பிறந்தவாரம் திங்களாகும்; இலக்கினத்தில் வியாழன் சனி இவர்கள் இருந்தனர்; இவன் பிறக்கும்போது அருகிலிருந்தவர் பெண்கள் மூன்றுபெயராம்; இவன் பிறக்குமன்று தகப்பன் வீட்டிலில்லையாம் ஆச்சரியமாகப் பிறந்த பாலனுகும் இவனைவெல்ல யாராலும் முடியாதாம் எ-று. 3

அன்றெனவே இவன்பிறந்தான் சித்திரைமாதம்
அன்பான பௌரணையு மதியின்வாரம்
நன்றெனவே இவன்பிறவி ஏழுபேராம்
நலமுள்ள வாணுலு பெண்கள்மூன்று
வின்றெனவே இவன்றனு நாலாம்பேராம்
விகற்பமுள்ள மைந்தனிவ னேழாங்கெர்ப்பம்
சென்றெனவே இவனுடைய செயல்தான்மைந்தா
செம்மையுள்ள மைந்தனடா திரவான்றனே.

இ-ள். இவன் பிறந்தது சித்திரை மாதமாகும். பௌர்ணமி திங்கட்கிழமை; இவனுடன் பிறந்தவர்கள் ஏழுபெயராகும் அதில் ஆண் நாலு பெண் மூன்றும் இவன் நாலாவதுப் பிள்ளையாகும்; இவன் தாயார் குளித்த ஏழாநாளில் தரித்தவனுகும்; இவனுடையச் செயலானது மெத்தவுண்டாகும் திரமுடையவன் எ-று. 4

தானடா இவனல்ல சாஸ்திரவாதி
தருவான வஷ்டசித்துங் கைக்குள்ளாகும்
வானடா வையகத்தி லிவனைப்போலே
வரிசையுள்ள பாலகன்றன் யோகமெத்த
தானடா சற்சனனுஞ் சமர்த்தனுவன்
தயவுள்ள சிவபத்த னுகும்பாரு
ஊனடா இவன் வயதோ தொண்ணூற்றுறு
உத்தமனுந் தவசியாய்ப் போவானன்றே.

இ-ள். இவன் நல்ல சாஸ்திரவாதியாகுவன்; அஷ்டசித்தும் இவன் கைக்குள்ளாகும்; வையகத்தில் இவனைப்போல் வரிசையுள்ளபாலர்களில்லை; யோகமெத்தவுடையவன் சர்ச்சனனும் சமர்த்தனுமாக விருப்பன்; தயவுடைய சிவபத்தனுகுவன் இவனுக்கு வயது தொண்ணூற்றுறுகும்; இவன் தவசியாகுவன் எ-று.

அன்றெனவே இவன்வயது பதினேழுக்குள்
அன்பான பிதாவுந்தா னிறப்பானப்பா
இன்றெனவே இவன்வயது முப்பத்தாறில்
இயல்பான மாதாவும் இறப்பதாகும்
குன்றெனவே குவலயத்தி லிவனைப்போலே
குணமுள்ள மைந்தனில்லை கூறினேம்பார்
நன்றெனவே நான்முகனால் விதித்தபடியப்பா
நன்மையுடன் முடியுமென்றே நான்சொன்னேனே.

இ-ள். இவன் வயது பதினேழுக்குள் தகப்பன் மரணமாகுவன். வயது முப்பத்தாறில் தாயார் மரணமாகுவாள். இவனைப் போல குணமுடையோர்கள் குவலயமீதுஇல்லையாம்;நான்முகனூர்ப்படி நன்மையாக முடியுமென்று நானுஞ்சொன்னேனென-று.

சொன்னனப்பா இன்னமொரு ரேகைதானும்
சொல்லுகிறேன் மைந்தனே துரிதமாக
வன்னப்பா சிராக்கினியு முள்ளரேகை
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
அன்னப்பா ஐஸ்வரிய முள்ளரேகை
அன்பான உமையவளும் மருளிச்செய்வாள்
கன்னனப்பா கார்மோக வர்ன்னவிந்தம்
காசினியிற் காண்கிறது கனத்ததாமே.

இ-ள். சொன்னபடியே இன்னமொரு ரேகையைச் சொல்வேன் கேட்பாயாக: சிராக்கினியுள்ளரேகையின் மார்க்கம் சொல்கிறேன் அது ஐஸ்வரியமுள்ள ரேகை; அதற்கு உமையவளும் அருளிச்செய்வாள் கார்மோக வர்னவிந்தம் காசினியிற் காண்பது கனத்ததாகும் எ-று. 7

கனத்ததொரு வருணவிந்தம் பாஞ்சாலித்தான்
காரணமாய் ஸ்திரீ புருஷ னிரண்டுரேகை
வனத்ததோ ராள்காட்டி விரலிலேதான்
வாகான மகுடத்தி லிரண்டுகீறு
தனித்ததொரு மகுடத்தின் கீழேமைந்தா
காரணமாய்ச் சக்கரம்போ லிருக்கும்பாரு
பனத்ததொரு வதின்கீழே திரிகோணமப்பா
பரால்காட் டும்விரலிற் காணும்பாரே.

இ-ள். வருணவிந்தமெனவும் பாஞ்சாலி எனவும் காரணமாகிய ஸ்திரீ புருஷ இரண்டுரேகை ஆள்காட்டி விரலில் மகுடத்தின்மீது இரண்டு கீறும் மகுடத்தின்கீழே சக்கரம்போல் இருக்கும்; அதின்கீழே திருகோணமிருக்கும் இவை ஆள்காட்டி விரலிற் காணும் பார் எ-று. 8

காணுகின்ற சக்கரமு முகிலுங்கூடி
காரணமா யிருக்குமது மைந்தாகேளு
தோணுகின்ற மயேந்திரம் ஏறிநிற்கும்
தோன்றுதலே இதன்பெருமை சொல்லக்கேளு
ஆணுகின்ற யிவன்பிறந்த யோகவாழ்க்கை
ஆச்சரியம் சொல்லுகிறே னன்பாய்க்கேளு
வாணுகின்ற யிவன்மாதா ஆறுமாதம்
மங்கையிவள் பெருமைதனை வழுத்தக்கேளே.

இ-ள். சக்கரமும் முகிலுங்கூடி யிருக்கும் மயேந்திரமேறி நிற்கும்; இதன் பெருமையைச் சொல்லக்கேளும்; அவ்விதரேகையுள்ளோன் பிறந்த யோகவாழ்க்கையின் பலன் சொல்லுகிறேன் கேள்; இவன் மாதாவினுடன் இவன் பெருமையும் வழுத்துகிறேன் பாரும் எ-று. 9

கேளடா யிவன்மாதா விவாகமில்லை
கேவலமாய்த் தாய்தந்தை சுற்றமுற்றும்
வாளடா மனையுமில்லை மனிதரில்லை
மங்கையவள் வறுமைகொண்டு மறையோன்வீட்டில்
நாளடாவேதியற்குப் பணிவிடைசெய்து
நலமாகத் தொழில்செய்து நடக்குங்காலம்
ஆளடா வாச்சரிய மிவனைப்பெற்ற
ஆரணங்குருதுவாகி வாழுங்காலே.

இ-ள். கேட்பாயாக இவனுடைய மாதாவிற்கு விவாகமில்லை; அவள் தாய்தந்தை சுற்றமுதலானதும் அற்று மனையுமில்லாமல் மனிதருமில்லாமல் மங்கையானவள் வறுமையானதுக்கொண்டு ஓர் மறையோன் வீட்டில் அவ்வேதியற்குப் பணிவிடைகள்செய்து நடக்குங்காலத்தில் இவனைப்பெற்ற அம்மங்கையானவள் ருதுவாகி வாழுங்காலத்திற் கேளும் எ-று. 10

வாழுகின்ற நாளையிலே மறையோன்றானும்
வண்மையாய் முற்சனனம் நந்தியாகும்,
ஆழுகின்ற மறையவனுஞ் சாஸ்திரவாதி
அன்பான ஸ்திரீயுடனே சேரவேண்டி
நாழுகின்ற லக்கினமு நாளும்பார்த்து
நலமான நட்சத்திர வாரம்பார்த்து
தாழுகின்ற தட்சணமே கூடவேண்டி
தண்மையா யெண்ணியிவன் கூடுங்காலே.

இ-ள். வாழும்நாளில் அம்மறையோனுடைய செய்திக் கேளும்; அவன் முன்ஜென்மத்தில் நந்தியாகும்; அம்மறையவன் சாஸ்திரவாதியானதால் ஸ்திரீயுடன் சேரவேண்டியும் இலக்கினமும் நாளுஞ் சேர்த்து தக்ஷணமே கூடவேண்டி தன் மனையாளை யெண்ணியிருக்கும் காலத்தில் எ-று. 11

கூடவப்பா நாள்வரும்போ தவன்பெண்சாதி
கூர்மையுள்ள மாதவள்தா னில்லரத்திலில்லை
நாடப்பா நாயகியு மில்லாவேளை
நலமான விந்தநல்ல மங்கையைத்தான்
தாடப்பா பிராமணனு மாதுமாகத்
தன்மையுட னந்நேரம் கூடினார்பார்
வீடப்பா விமலர்தனை நினைத்து பார்ப்பான்
வெகுலீலை செய்துவிந்தைவிட்டிட்டாரே.

இ-ள். கூடும்படியான நாளானது வரும்போது அவன் பெண்சாதி கூர்மையுள்ளமாது அவள் இல்லறத்தி லில்லையாம்; நாயகியும் இல்லாவேளையானதால் இந்த மங்கையைப் பிராமணன் கூடினான்விமலனை நினைந்து. அவ்வேதியன் வெகுவிதமான லீலைகள் புரிந்து விந்தை விட்டான் எ-று. 12

விட்டிடவே யிவளுக்குக் கெற்பமாச்சு
வியாகப்ப திகளுண்டாய் படைத்தா ரீசன்
தொட்டிடவே யிவளுக்குக் கெற்பமுத்தி
தோன்றுதலே முற்சனனஞ் சொல்லுவேன்கேள்
பட்டிடவே பால்மொழி தங்கையப்பா
பாங்கானதோழியிவள் மங்கையாகும்
விட்டிடவேமுற்சனன சாபத்தாலே
விண்ணைவிட்டுப் புவியில்வந்தாள் மங்கைதானே.

இ-ள். விட்டிட யிவள் தனக்கு கெர்ப்பமானதுவாச்சு வியாபகப்பதிகளுண்டாகப் படைத்தனர் ஈஸ்வரன். அதன் பின்பு இவளுக்குக் கெர்ப்பமானது முத்தியபின் இவளுடையச் செனனஞ்சொல்வேன் கேளும்; இவள்பால் மொழிந்த தங்கையாகும் பாங்குள்ள தோழியுமாகும். இவள்முன் செனனத்திற் சாபத்தினால் விண்ணைவிட்டுப் புவியில் வந்தவளாகும் எ-று. 13

மங்கையிவ டன்வயிற்றிற் கஞ்சன்பாலன்
மகத்துவமாய்ப் பிறப்பான் சிசுபாலன்றானும்
தங்கையிவ ளதிகமடா யோகசாலி
தாரணியிற் குபேரனைப்போல் வாழ்வாள் மங்கை
அங்கையிவள் மைந்தனைத்தான் பெற்றபோது
ஆச்சரிய முள்ளவளாம் ஆய்ந்துகேளு
நங்கையிவள் பெற்றெடுத்த மைந்தன்தானும்
நலமான பிள்ளையென்று நாடிச்சொல்லே

இ-ள். மங்கையாகிய இவள்வயிற்றில் கஞ்சன் பாலன் மகுத்துவமாகிய சிசுபாலன் பிறப்பன். இவள் அதிகமாகிய யோகசாலியாகும்; தாரணியில் குபேரனைப்போல் வாழ்குவள். இவள் மைந்தனைப் பெற்றபோது ஆச்சரியமுள்ளவளாவாள் அதை ஆய்ந்துக்கேளும். இவள் பெற்றெடுத்த மைந்தன் நலமுள்ளப் பிள்ளையாகு மென்று சொல்வாய் எ-று. 14

சொல்லுகிறே னிவன்பிறந்த விடந்தான்மைந்தா
சொற்பெரிய வாற்றருகின் மங்கைதானும்
நல்லுவே னிவடானுங் கீரைகிள்ளி
நலமாகக் கொண்டுவந் தருந்தவேண்டி
அல்லுவே னாதித்த னுதையநேரம்
அழகான மங்கையிவள் வேதனையேபட்டு
உல்லுவே னுத்தமியு மைந்தனைத்தான்
உத்தமியு மாற்றருகில் பெற்றதன்றே.

இ-ள். சொல்லிய இவன் பிறந்தயிடம் ஆற்றுக்கு அருகே இம்மங்கையானவள் கீரைக் கிள்ளிக்கொண்டு வருந் தருணந்தன்னில் ஆதித்தன் உதையநேரத்தில் இம்மங்கையானவள் வேதனைப் பட்டு உத்தமியாகிய இவள் மைந்தனை ஆற்றினருகில் பெற்றாள்

அன்றெனவே யிவடானுங் கங்கைக்கப்பா
அன்பான தோழியிவ ளாகுமுன்பு
நன்றெனவே யிவன்றானும் வருடன்சீடன்
நலமாக வனேகநாள் விடையேசெய்து
குன்றெனவே குவலையத்திற் கஞ்சனுக்குக்
குணமாகப் பிறந்ததிவன் சிசுபாலன்றான்
சென்றெனவே யிரண்டாவ திந்தஜென்மம்
செப்புகிறேன் வேதியர்க்கே தரித்தான்பாரே.

இ-ள். இம்மாது கங்கைக்குத் தோழியாகு முன்பும் இவன் வருடனுடைய சீடனாகும். இவன் அனேகநாள் விடைகள்செய்து குவலயத்தின் கஞ்சனுக்கு குணமாகத்தானே பிறந்தான் சிசுபாலனாகவும். இரண்டாவது இந்த சென்மம் செய்யும்படியாக வேதியற்குத் தரித்தான் எ-று. 16

பராப்பா இவன்பிறக்கும் போதுமைந்தா
பக்கமதி லந்நேர மொருவரில்லை
காரப்பா வத்தலத்தின் னேரந்தான்
கனமாகவானோரு முனிவோரெல்லாம்
சீரப்பா யிவன்பிறக்கும் போதிலேதான்
சிவசிவா சிவகலையுந் திரமதாச்சு
ஆரப்பா வாயுதா னுள்ளமைந்தன்
அன்பான விவனதிக யோகவானே.

இ-ள். பார்க்க இவன் பிறக்கும்போது பக்கத்தில் அந்நேரம் ஒருவருமில்லையாம் அத்தலத்தின் அன்னேரம் வானோரும் முனிவர்கள் யாவரும் இவன்பிறக்கும்போது சிவசிவா வென்னும் சிவக்கலையும் திரமதாகவாச்சு இவன் வாழ்வுடைய மைந்தன் இவன் அதிக யோகவானாகும் எ-று. 17

யோகமப்பா விவன் பிறந்தபோதிலேதான்
ஒகோகோவன்னேர மாதாவுக்கு
வாகமப்பா யாயாசங்களையுமாகிப்
வண்மையுள்ள குழந்தையது அழுகுங்காலே
ஆகமப்பா வாயாசங் களையுமாகி
அந்நேர நாகமது குடைபிடிக்க
பாகமப்பா பாம்பதுவுங் குடைபிடித்து
பாலகனைக் காத்ததனற் படாமற்றனே.

இ-ள். யோகமாகத்தானே இவன் பிறந்த வேளையில் அந்நேரம் மாதாவிற்கு ஆயாசமுங் களையுமாகி குழந்தையானது அழுகும்போது தாயாருக்குக் களைதெளியுமட்டும் நாகசர்ப்பமானது மைந்தற்குக் குடையானது பிடித்துக் கொண்டிருக்கும்; பிடித்துப் பாலகனைக் காப்பாற்றும் எ-று. 18

தானென்ற வன்னேற மாதுதானும்
தயவாக வெழுந்திருந்து பார்க்கும்போது
வானென்ற குழவியைத்தா னரவம்வந்து
வண்மையுடன் குடைபிடித்து நிற்கக்கண்டு
ஊனென்ற மங்கையவ ளலறிவீழ்ந்தாள்
உற்றதொரு குழவிமேற் பாம்புகண்டு
ஆனென்ற மங்கைமுகம் பார்த்துச்சர்ப்பம்
ஆச்சரியம் சொல்லுகின்ற வரிவுகேளே.

இ-ள். அந்நேரத்தில் அம்மாது எழுந்திருந்துப் பார்க்கும்போது அரவானது வந்து குழந்தைக்குக் குடைபிடித்து நிற்கக்கண்டு அம்மங்கையானவள் அலறிவிழ்ந்து அழுகும்போது குழந்தையினிட மிருக்கும் பாம்பானதுக்கண்டு அம்மங்கையின் முகத்தைச் சர்ப்பங்கண்டுச் சொல்லுகின்ற அறிவைக்கேளும் எ-று.

கேட்கவே பெண்ணரசே மாதேகேளு
கேவலமாய் முன்பிறப்பின் செய்தியெல்லா
வாட்கவே யுன்னுடைய ஜனனவாழ்க்கை
வண்மையாய்ப் பிறந்திட்ட வரலார்சொல்வேன்
ஆட்கவே நீதானுங் கங்கைதோழி
ஆரணங்கே உன்னுடைய வதிசயக்கேள்
தாட்கவே நீசெய்த தவத்தினாலே
தனம்பெற்ற மாதரசே தயவாய்க்கேளே.

இ-ள். கேட்பாய் ஓ பெண்ணரசே முன்பிறப்பின் செய்தியாவும் உன்னுடைய செனனவாழ்க்கையும் வண்மையாய் பிறந்தவரலாறுஞ்சொல்வேன். நீ கங்கையினுடையத் தோழியாகும். உன்னுடைய அதிசயத்தைக்கேளும்; நீ செய்தத் தவத்தினால் தனமானதும் பெற்றமாதரசே தயவாகத்தானே கேளும் எ-று. 20

கேளேநீ பெண்கிளியே யுன்வயிற்றில்
கேவலமாய்ப் பிறந்தடுதாரு மைந்தன்றானும்
வாளேநீ கஞ்சன்மகன் சிசுபாலன்றான்
வண்மையா யுன்வயிற்றிற் பிறந்தான்பெண்ணே
ஆளேநீ பாலகனைத்தான் பெற்றபோதே
ஆரணங்கே பெருமையெல்லா மோடிப்போச்சு
தாளேநீ யொருநாளுந் தாழ்வதில்லை
தரணியாள ராசனுமா மைந்தன்றானே.

இ-ள். கேட்பாயாக நீ பெண்கிளியாகிய உன் வயிற்றில் பிறந்தமைந்தன் கஞ்சனுடைய மகனாகிய சிசுபாலனும் அவன் வந்து உன்வயிற்றிற் பிறந்தான்; அப்பாலகனை நீபெற்றப்போது உன்னுடைய வறுமை யாவும் ஒடிப்போச்சு; ஒருநாளுந் தாழ்வானது இல்லை தரணியையாளும் அரசன் மைந்தனாகும் எ-று. 21

மைந்தனம்மா வுந்தனிட வாழ்வுதானும்
மகத்துவங்க ளனேகமுண்டு வாழ்வுமெத்த
ஐந்தனம்மா மாயுசுதா னுள்ளபாலன்
அன்பாகத் தவஞ்செய்து பிறந்தபாலன்
வந்தனம்மா பாலனுக்குச் சூரியகாந்தி
வளமாகப் படாமலேநான் குடைபிடித்தேன்
இந்தனம்மா விந்தநல்லத் தலத்திலேதான்
இப்பாலன் பிறக்குங்கால் வந்ததன்றே

இ-ள். மைந்தனாகிய உந்தனுக்கு வாழ்வும் மகத்துவங்களும் மெத்தவுண்டாம். ஆயுசுடையப் பாலனாகும்; தவத்தினால் பிறந்தவன் யான்வந்தது யாதுக்கெனில் பாலனுக்குச் சூரியகாந்தியானதுப் படாமல் நான் குடைப்பிடித்தேன்; இந்தத் தலத்தில் இப்பாலன் பிறக்கும்போது நான் வந்தேனம்மா எ-று. 22

வந்தனம்மா விந்தவிடந் தன்னிலேதான்
வண்மையுடன் எவ்வெவர்கள் வந்தாரெல்லாம்
உந்தனிட கிருபையினால் வானோரெல்லாம்
உண்மையுடன் வந்தருகில் னிற்கின்றார்கள்
சிந்தனைக ளில்லையினி யுந்தனுக்கு
சீக்கிரத்தில் யோகமது வருகும்பாரு
அந்திசந்தி சிவனைமறவா மலின்று
அன்பான குழந்தையைநீ வளர்த்துவாயே.

இ-ள் வந்தவயணமிதுவாகும்; அன்றியும்தேவர்களெல்லாரும் உன்னுடையக்கிருபையினால் வானோரெல்லாம் உண்மையாகத்தானேவந்து அருகினில்நிற்கின்றார்கள், இனிசிந்தனைகள் உனக்கு யாதொன்றுமில்லை; சீக்கிரத்திற்றானே யோகமானதுவருகும்; அந்திசந்தி யெந்தவேளையும் சிவபெருமானை மறவாமல் நின்று அன்பாகத்தானே குழந்தையை வளர்த்துக்கொண்டு வருவாய் எ-று.

வாயென்ற வித்தலத்தில் வருணன்வாயு
வளமான வாசவனுங் குபேரன்ருனும்
ஆயென்ற சதாசிவனுங் கிருபையோடு
அந்தரத்தி னிற்கின்ரு ரம்மாபாரு
பாயென்ற பராபரனு முமையாள்தாயும்
பைங்கிளியு நிற்கிறதைப் பரிவாய்பாரு
சேயென்ற சிறுகுழந்தை பெற்ருய்மாதே
சீர்மையுள்ள கண்ணரசே செயலைக்கேளே.

இ-ள் வாயென்னும்படியான இத்தலத்தில்வருணன்வாயுதிரு மால்குபேரன்சிவபெருமான் இவர்கள் அந்தரத்தில்நிற்கின்ருர்கள் பாரும். பரமனோடு உமையாள் நிற்கின்றதையும்பாரும். சேயென் னும்படியான சிறுகுழந்தையைப்பெற்றமாதே செயலைக்கேளும்.

கேட்கவே பைங்கிளியே நீதான்கேளு
கேவலமாய்க் குசபிரமா வம்மிசத்தில்
வாட்கவே நீபிறந்த ஐந்தாமாதம்
வளமான மாதாவு மிறந்துபோனள்
ஆட்கவே ஏழாந்தன் மாதந்தன்னில்
அன்பான பிதாவுந்தா னிறந்தான்பாரு
நாட்கவே நன்மையுட நீபிறந்து
நலமாக வாழ்வையம்மா நாடிக்கேளே.

இ-ள் கேட்க பைங்கிளியாகியநீயேகேளும். குசப்பிரமாவின் வமிசத்தில் நீபிறந்த ஐந்தாம்மாதம் வளமாகிய மாதாவும் இறந் தாள். ஏழாம்மாதத்தில் தகப்பனும் இறந்தான். நன்மையாகத் தானே நீபிறந்து நலமாகத்தானே வாழ்குவை நாடிக்கேளும்.

கேளடா இவள்நல்ல மங்கையப்பா
கேவலமாய் இவள்மைந்தன் ராசயோக
ஆளடா வரசதுதான் முப்பத்தாறு
ஆண்டிவளுஞ் செத்தபின்பு தவசுசெய்வான்
நாளடா என்னசொல்வேன் ரேவதிணுண்மைந்தன்
நலமாகப் பிறந்தவன்ரு ஞடிக்கேளு
ஊளடா உட்பொருளு மறிவான்மைந்தன்
உத்தமனு மிவனல்ல மைந்தனுமே.

இ-ள் கேட்க, இவள்நல்ல மங்கையாகும்; இவள்மைந்தன் ராஜ யோகன்முப்பத்தாறுவயதில் அரசுபுரிகுவன். அவள்செத்தபின்பு தவசுசெய்வன். ரேவதிநாளில்பிறந்தவன் உட்பொருட்கள் யாவும் அறிகுவன்; உத்தமனாகிய மைந்தனாகும் வல்லமையுடையவன்.

மைந்தனுய்ப் பிறந்தவுந்தன் மகனுக்குள்ள
மகத்துவத்தைச் சொல்லவுந்தான் முடியாதப்பா

ஐந்தனுய்க் குழவியைத்தா னம்மாநீயும்
அன்பாகச் சிவபூசை செய்யச்சொல்லு
கந்தனும் இவனையறு முகவனைத்தான்
கருணையுடன் பூசைநீ செய்யவைப்பாய்
வைந்தனுய் வாலைபர மேஸ்வரியை
வண்மையாய் பூசைசெய்ய வறிவைச்சொல்லே.

இ-ள். மைந்தனுகப்பிறந்த உன்னுடைய மகனுக்குள்ள மகத்துவங்களைச்சொல்லமுடியாது. அந்தக்குழவியைநீயும் அன்பாகத்தானே சிவபூசைசெய்ய சொல்குவாய். கந்தனெனும் அறுமுகக்கடவுளையும் பூசைச்செய்யும்படி சொல்வாய். வாலைபரமேஸ்வரியையும் பூசைசெய்யும்படியாகச் சொல்வாய் எ-று. 27

சொல்லென்று நாகமது சிவபூசைசெய்ய
சொல்லுதையா உபதேசஞ் சொல்லக்கேளு
அல்லென்று சிவதோத்திரம் ஓங்ரீங்கென்று
அப்பலனைச் சொல்லியறி மைந்தனுக்கு
நல்லதென்று குழவிக்கி துபதேசித்து
நாகமது நாகரேஷ்டங் குழவிவாயில்
உல்லென்று உண்மையுடன் வாயிற்ருக்கி
உற்றவாறு வெல்லாஞ் சொல்லிற்றன்றே.

இ-ள். சொல்லுமென்று தானே நாகமானது சிவபூசை செய்ய உபதேசஞ் சொல்வதைக் கேளு; அதாவது அல்லென்று சொல்லும்படியாகிய சிவதோத்திரம் ஓம் ரீங்கென்றும் அப்பனைச் சொல்லி அம்மைந்தனுக்கும் நன்மையாகத்தானே அக்குழவிக் குபதேசித்து அந்த நாகமானது நாகரேஷ்டன் குழவியின் வாயில் உல்லென்றும் உண்மையுடன் தானே வாயிற்ருக்கி உற்றது யாவும் சொல்லினவாம் அன்றே எ-று. 28

சொல்லிடவே நாகமது எல்லாஞ்சொல்லி
சொற்பெரிய வாழ்வுமுத லெல்லாங்காட்டி
நல்லிடவே நான்முகனு முமையாள்வாக்கியம்
நலம்பெறவே சொல்லியது நாகம்போச்சு
வெல்லிடவே அன்னையவள் விரைந்துதானே
வேள்விடையான் செயலென்று விருப்பமுற்று
அல்லிடவே மைந்தனையு மெடுத்துக்கொண்டு
அம்மையவ டன்மனைக்குச் சென்றுளன்றே.

இ-ள். சொல்லும்படியாக நாகமானது யாவுஞ்சொல்லி வாழ்வு முதலானதுங் காட்டி நான்முகனோடு உமையாளின் வாக்கியங்கள் நலம்பெறும்படியாக நாகமானது சொல்லிச் சென்றதுவாம். அப்போது அக்குழவியின் மாதாவானவள்விறைந்து இதுகளெல்லாம் பரமசிவனுடைய செயலென்று அவ்விடம்விட்டு மைந்தனை எடுத்துக்கொண்டு தன் மனைக்குச் சென்றனள் எ-று. 29

சென்றிடவே களிப்புடனே மனையிற்சென்றாள்
செயலான பத்தினியை புருஷன்கண்டு
நன்றிடவே யவன்மனையி லழைத்துஅப்போ
நலமாக மனைச்சார்பில் மனைகொடுத்து
வின்றிடவே வந்தநல்ல மனையிலேதான்
விகற்பமில்லா வம்மனையில் வீற்றிருந்தார்
அன்றிடவே வந்தநல்லக் குழந்தைதானும்
அன்பான ரத்னமது வாயிற்கண்டாளே.

இ-ள். அம்மாது களிப்புடன் மனையிற்சென்று இருக்கும் போது அவளைபுருஷன்கண்டு அவனுடைய மனையில் அழைத்து தன்னுடைய மனைசார்பில் மனையானது கொடுத்து அம்மனையில் விகற்பமில்லாமற்படிக்கு வீற்றிருந்தார். அப்போது அக்குழந்தை வாயில் ரத்தினங்கண்டாள் எ-று. 30

கண்டவுடன் ரத்னமது எடுத்துமங்கை
கனத்ததொரு மணியதனை எடுத்துப்போயி
விண்டவுடன் கடவுளர்கங் கடாட்சத்தாலே
மெல்லியர்க்குக் கிடைத்ததென்று வியந்துதானே
கொண்டவுடன் கோமுட்டி கையிலேதான்
கொற்றவனுந் தான்கொடுத்துத் தனத்தைவாங்கி
திண்டவுடன் றனமதுதா னனேகபாக்கியம்
திகழ்ச்சியில்லாக் காட்சிபெற வாழ்ந்தாள்மங்கை.

இ-ள். கண்ட ரத்தினத்தை மங்கையானவள் எடுத்துக் கொண்டேகி சொன்னவுடன் கடவுளின் கடாட்சத்தால் இந்த மங்கையற்குக்கிடைத்ததென்று சந்தோஷமாகி கோமுட்டியிடங் கொடுத்து தனத்தைவாங்கி வேணபாக்கிய காட்சியானதுப் பெறும்படியாக வாழ்ந்தாள்மங்கையரும் எ-று. 31

மங்கையிவ ளிப்படியே சிவபூசைசெய்து
வளமாக வாழ்ந்திவளு மிருக்கும்போது
அங்கையுடன் ரத்னமதை யரசன்கிட்டே
அன்புடனே கோமுட்டி யீந்துமிக்க
செங்கையினுல் அனேகமப்பா நிதிகள்வாங்கி
செப்பமுள்ள இவன்மனைக் கொண்டுசென்றான்
சங்கமில்லாப் பொருள்போலே மனையில்வைத்தார்
சுத்தபொரு ளவன்மனையில் இல்லைத்தானே.

இ-ள். மங்கையானவள் சிவபூசை செய்து வளமாகத்தானே வாழ்ந்திருக்கும்போது அந்த ரத்தினத்தை அரசனிடம்கோமுட்டியானவனீந்து மிகவும் அநேக நிதிகள் வாங்கி அவனுடைய மனைக்குக்கொண்டுசென்றான். அப்படிச்சென்று அவன் மனையில் வைத்தப் பொருள் ஒன்றும் அவன்வீட்டி லில்லையாம் எ-று. 32

இல்லையப்பா மனையில்வைத்த பொருளோயில்லை
இயல்பான மைந்தனிட வீட்டிற்போச்சு

அல்லையப்பா வந்ததனம் முழுவதுந்தான்
அன்பான இவன்வீட்டிலில்லாதுகண்டு
தொல்லையென்னவென்றரசன் பக்கற்சென்று
தோன்றுதலே நீர்கொடுத்த தனமொன்றில்லை
அல்லையிதை நாமறியவேண்டுமென்ன
அன்பான ராசனவன் மலைத்தான்பாரே.

இ-ள். அப்பொருள் அவன்மனையில் இல்லாமற்றுனே இந்த மைந்தனுடைய மனையில் வந்துச் சேர்ந்தனவாம். வந்ததனமானது கோமுட்டி வீட்டிலில்லாததுக்கண்டு அரசனுடையப்பக்கவில் சென்றுசொல்வான் ஓ அரசே நீர்கொடுத்தத் தனத்தில் ஒன்றுமில்லை எனவே அதைநாமறிய வேண்டுமென்ன அரசனும் லத்தான் எ-று. 33

பாரென்ற வரசனுந்தா னனேகமெண்ணி
பாங்கான வன்மனையிற் பார்க்கும்போது
சீரென்ற தனங்காணு தேங்கிமன்னன்
சித்தமது வேறுகிச் செப்புகின்றுர்
தாரென்ற மணிவாங்கி நான்கொடுத்த
தனத்தையெல்லா மாருக்கோ ஈந்தாய்பிள்ளாய்
ஊரென்ற உன்மனையில் வைத்தபொருளெல்லாம்
உத்தமனே யாருக்கீந் திட்டாயன்றே.

இ-ள். பார்க்க அரசனுனவன் அனேகமாகத்தானே எண்ணி பாங்காகத்தானே யவன்மனையிற்பார்க்கும்போது தனத்தைக் காணுமல் ஏங்கி மன்னன் சித்தமானது வேறுகி சொல்லுவான் உன்னிடத்தில் மணியானது வாங்கி நான்கொடுத்தத் தனமெலாம் யாருக்கோ யீந்துவிட்டாய் உன் மனையில்வைத்தப் பொருளெல்லாம் யாருக்குக்கொடுத்தாய் என்றுர் எ-று. 34

ஈந்தபொரு ளொன்றுமுன் மனையிலில்லை
இயல்பாகப் போனதெங்கே சொல்லுவாய்நீ
சாந்தமுள்ள தர்மதேவதையினுலே
தவஞ்செய்த பாக்கியத்தாற் கிடைத்ததன்றே
ஆய்ந்தபொருள் போனவிடங் காணேனென்று
அன்பானகோமுட்டி சொல்லும்போது
வாய்ந்திடவே உனக்கிந்த ரத்தினங்கள்
வந்தவகை சொல்லுபின்னே வகைசொல்வேனே.

இ-ள். ஈந்தப்பொருள் ஒன்றும் உன்மனையிலில்லை அது போனவகை சொல்வாய் என்றுகேட்க கோமுட்டிச்சொல்லலானன்; தர்மதேவதையினுலே தவஞ்செய்த பாக்கியத்தினுற்கிடைத்தது; அந்தப்பொருள் போன விடங்காணேனென்று அன்பாகத்தானே கோமுட்டிச்சொல்ல அரசன் கேட்பான் உனக்கு இந்த ரத்தினம் வந்தவகையைச் சொல்லும் பின்னல் நான் உனக்கு வகைச் சொல்வேனென்றுர் எ-று. 35

சொல்லுவே னீவிற்ற ரத்தினந்தான்
சொற்பெரிய வன்னியர்கள் ரத்னமாகும்
அல்லுவே னதனாலே வந்தபொருளெல்லாம்
அன்பான உன்மனையி லில்லாமற்போச்சு
நல்லுவே னுள்ளபடி சொல்லுமென்ன
ரத்தினம்வந்த வகையதனை நலமாய்ச்சொன்னான்
வல்லுவே னவ்விடத்தின் மாதைத்தானும்
வரவழைத்து உனக்குரத்ன மேதுசொல்லென்றான்.

இ-ள். சொல்லுவேன் நீவிற்ற ரத்தினமானது அன்னியர்கள் ரத்தினமாகும். அதினால்தான் வந்தபொருள் யாவும் உன் மனையில்லாமற் போச்சு. ஆகையால் உள்ளபடிச் சொல்லுமென்று அரசன் கேட்க அப்போதுக்கோமுட்டி ரத்தினம்வந்த வரலாற்றைச்சொன்னான். அதை அரசன்கேட்டு அம்மாதை யழைத்து உனக்கு ரத்தினம் ஏதுச்சொல்லுமென்றார் எ-று. 36

சொல்லுகிறேன் குழவியிட வாயிலேதான்
சொற்பெரியரத்தினமதையரசன்கண்டு
நல்லுகிறேன் நான்கொடுத்த பாக்கியமெல்லாம்
நலமானகுழவியிடஞ் சேர்ந்திருக்கும்
வல்லுகிறேன்வண்மையினா லரசன்றானு
வாகான வக்குழவிக் கரசுஈந்து
வல்லுகிறேன் வாழ்வெல்லா மவனுக்கீந்து
வரிசையுடன் பட்டமது சூட்டினாரே.

இ-ள். அம்மாது ரத்தினம் வந்த வகையாவுஞ் சொல்ல குழவியுடையவாயில் வந்தரத்தினமென்று அரசன் கண்டு சொல்வான்: நான் கொடுத்த ரத்தினத்திற் காணப் பாக்கியமெல்லாம் உன்மனையிலில்லாமற் போச்சு. அதுகுழவியினிடம்போய்சேர்ந்திருக்கும் என்றுரைத்து அரசன் அக்குழந்தைக்கு அரசைஈந்து அத்துடன் வாழ்வானதெல்லா மீந்து வரிசையாகத்தானே பட்டஞ் சூட்டினார் எ-று. 37

சூட்டியதோர் பட்டாபிஷேகஞ்செய்து
சூழ்ந்திருந்த மந்திரியை யருகிருத்தி
நாட்டியதோர் விவாகமது உடனேசெய்து
நலமாக நளச்சக்ர வர்த்திபோலே
கூட்டியதோர் குவலயத்தி லிவன்றானப்பா
குணமுள்ள பாலனிவன் வாழ்ந்தானன்றாய்
பூட்டியதோர் பூட்டெல்லாஞ் செல்வயோகம்
புகலுகிறே னிவன்வயது முப்பதுக்குள்ளாமே.

இ-ள். சூட்டிடப்பட்டாபிஷேகமானதுசெய்து மந்திரிமார்களை அமர்த்தி விவாகமானதை உடனேசெய்வித்து நலமாகத் தானே நளச்சக்கரவர்த்திபோல் குவலயத்தில் இவனும் குணமுள்

ளப்பாலகனுக வாழ்ந்திருந்தான். பூட்டாகிய செல்வயோகம் யாவும்சொல்வேன் இவன்வயது முப்பதுக்குள்ளாகவும் எ-று.

உள்ளெனவே இவனிட யோகத்தினுலே
உத்தமனே குபேரனைப்போல் வாழ்ந்தான்மைந்தன்
அள்ளென்ற வயிஸ்பரிய முள்ளபாலன்
அன்பான பிள்ளைகளை நாலுபெற்று
கொள்ளென்ற பிள்ளைகட்குப் பட்டங்கட்டி
கொற்றவனுந் தவசுக்குப் போனனப்பா
விள்ளென்ற நானூறு வருஷந்தானும்
விமலர்பதம் பணிந்துமைந்தன் தவம்பூண்டானே.

இ-ள். உள்ளப்படி இவனுடைய யோகத்தினுல் உத்தமனுகிக் குபேரனைப்போல் வாழ்குவான். பாலன் ஐஸ்வரிய முள்ளவன்; இவன் பிள்ளைகள் நாலும்பெற்று அப்பிள்ளைகட்குப் பட்டங்கட்டி கொற்றவனுகியபின்னேன் தவசுக்குப் போவான். விள்ளும்படியான நானூறு வருஷம் பரபசிவனை நோக்கித் தவமானதும் புரிகுவான் எ-று. 39

பூண்டிடவே இந்தநல்ல ரேகைமார்க்கம்
புகழாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளு
ஆண்டிடவே இன்னமொரு ரேகைமைந்தா
அன்பாகச் சொல்லுகிறே னறிவாய்க்கேளு
தாண்டிடவே தண்மையினுல் ரேகையொன்று
தாழ்வில்லா ரேகையடா தண்மையப்பா
ஈண்டிடவே இந்தநல்ல ரேகைமார்க்கம்
இயல்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளே.

இ-ள். பூண்டிட கூறிய ரேகையின் மார்க்கம் புகழாகத் தானே சொல்லிவிட்டேன் கேளும்; ஆண்டிடும்படியாக இன்னமொருரேகை சொல்கிறேன் அறிவாகக்கேளும்; தன்மையாகிய ரேகை ஒன்று அதுதாழ்வில்லாரேகையாம்; தன்மையானது அந்த நல்லரேகையின் மார்க்கம் சொல்கிறேன் எ-று. 40

## சகடவிந்த ரேகை சாந்தபாஷ்ப ரேகைகளின் பலன்.

கேளப்பா சகடவிந்தஞ் சாந்தபாஷ்பம்
கேவலமா யணிவிரலி லிருக்கும்பாரு
ஆளப்பா ருத்திரவரைக் கீழேநிற்கும்
அன்பாக அதன்விபரம் அறையக்கேளு
வாளப்பா இருபுள்ளி இரண்டுகீறு
வளமாக இதழாறு விருக்கும்பாராய்
நாளப்பா இவன்பிறந்த நாளுங்கோளும்
நன்ருகச் சொல்லுகிறே னடிக்கேளே.

இ-ள். கேட்பாயாக சகடவிந்தம் சாந்தபாஷ்பம் என்னும் ரேகையானது அணிவிரலிலிருக்கும் ருத்திரவரையானதுக் கீழே

திற்கும். அதின் விபரத்தைச் சொல்லக்கேளும்: இருபுள்ளியும் இரண்டுகீறும் இதழ் ஆறுமிருக்கும். அவ்வித ரேகையுடையோன் பிறந்த நாளுங்கோளும் நன்றாகத்தானே சொல்கிறேன் நாடிக் 41
கேட்பாயாக எ-று.

கேளடா இந்தநல்ல ரேகையாலல்
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆளடா இவன்பிறக்கும் போதுமைந்தா
அன்பான புதுமைமெத்த வாய்மைகேளு
நாளடா நன்மைபெற்ற மைந்தனப்பா
நலமான பிள்ளையிவன் பிறந்தயோகம்
ஆளடாவாச்சரிய மெத்தவுண்டு
அன்பான மகத்துவத்தை யறிவாய்க்கேளே.

இ-ள். மேற்கூறிய ரேகையானது உண்டாகில் சொல்லுகிறேன் கேளும்; இவன் பிறக்கும்போதுண்டாகும் புதுமைகளைக்கேளும்; நன்மையானது பெற்ற மைந்தனாகும். இவன் பிறந்த யோகம் ஆச்சரியமானது மெத்த உண்டாம்; அம்மகத்துவத்தை கேளும்

கேட்கவே யிவன்பிறக்கும் போதுமைந்தா
கீழ்வாசல் வீட்டிலிவன் பிறந்தான்பாரு
தாட்கவே இவன்பிறக்கும் போதுமைந்தா
தன்மையுள்ள இவன்பிதா இறந்தான்பாரு
மீட்கவே வறுமைவந்து மூடிக்கொண்டு
மேதினியிற் பறவைபோல் துணைவேறின்றி
தாட்கவே சற்சனனுந் துயரமுற்றான்
தண்மையில்லா திவன்பிறந்த சார்புதானே.

இ-ள். கேட்க இவன் கீழ்வாசலான வீட்டிற்பிறந்தான்; இவன்; பிறக்கும்போது இவன்பிதா மரணமாகினன். அப்போது வறுமையானதுவந்துமூடிக்கொண்டு துணையில்லாமல் பறவையைப்போல் துயரமுற்றான். தண்மையில்லாதபடி இவன் பிறந்த சார்பாகும்

தானென்ற இவன்பிறந்த மூன்றுமாண்டில்
தயவான மாதாவு மிறந்தாள்பாரு
வானென்ற இவன்பிறந்த மூன்றுண்டுக்குள்
வளமான மாதாவும் பிதாவும்போனார்
ஊனென்ற இவன்பிறந்த பத்தாண்டுக்குள்
உண்மையுள்ள இவன்பாட்டன் பாட்டிமாண்டார்
ஈனென்ற இல்லறத்தி லனேகஞ்செல்வம்
இருந்தழிந்து போனதென்று இயல்பாய்ச்சொல்லே.

இ-ள். இவன் பிறந்த மூன்றும் வருடத்தில் தாயாரும் மரணமாகினள். இவன் பிறந்த மூன்றும் வருடத்தில் பிதாவும் போயினர். பத்தாம் வருடத்தில் இவனுடையப் பாட்டியும் பாட்டனும் மரணமாவர் இல்லறத்தில் அனேகஞ் செல்வம் இருந்து அழிந்து 44
போச்சுதென்று இயல்பாகச் சொல்வாய் எ-று.

சொல்லவே இவன்செல்வ மெல்லாம்போச்சு
சொற்பெரிய விதனமொடு பாடுபட்டான்
அல்லவே வனேகமிவன் பாடுபட்டு
அன்பான பாலகனு மெலிந்தானப்பா
வல்லவே வண்மையினுற் பொருளனேகம்
மைந்தனப்பா தோற்றுவிட்டு வரிசையாக
நல்லவே இவன்வயது பதினெட்டுக்குள்
நன்மைவந்து கிடைத்ததென நாடிச்சொன்னேன்.

இ-ள். சொல்லும்படியான இவனுடைய செல்வமெல்லாம் போயினவாம். மகா விசனமோடுப் பாடுபட்டப் பாலனவன் மிகவும் மெலிந்தான். வண்மையினுற் பொருளானது அநேகந் தோர்த்துவிட்டு பின்பு இவன் வயது பதினெட்டுக்குள் நன்மை யானது வந்ததாம் எ-று. 45

சொன்னனப்பா இவனுக்குத் திசையோகந்தான்
சொல்லுகிறேன் இவனுடைய வறலாரெல்லாம்
வன்னனப்பா இவன்றானும் வறுமையாகி
வாகான வாற்றருகே விரகெடுக்கில்
அன்னனப்பா வவ்வாற்றின் கரையிலேதான்
அன்பான நிதிகுடந்தா னென்றெடுத்தான்
கன்னனப்பா காட்சிபெற்ற மைந்தன்வாழ்வின்
காரணத்தையென்சொல்வேன் கருதிக்கேளே.

இ-ள். சொன்னேன் இவனுக்குத் திசையும்யோகமும்; இவனுடைய வரலாற்றைச் சொல்கிறேன்: இவன் வருமையால் ஆற்றருகிற் சென்று விரகெடுக்கில் அவ்வாற்றின் கரையில் நிதி குடமானது ஒன்று கண்டெடுத்து அவன் மனைக்குக் கொண்டுவந்த பின் மைந்தனுடைய வாழ்வை என்சொல்வேன் கேட்பாயாக.

கருதியதோர் இவன்றானுந் தனமெடுத்து
காட்சிபெற வீடுகட்டி விவாகஞ்செய்தான்
உருதியாய் இவனுக்குத் தாரம்ரெண்டு
உண்மையாய் முடியுமென்று உருதிசொல்லு
சருதியாய்ச் சற்சனர்க ளனேகம்பேர்கள்
தகுதியுட னட்புக வாழ்வார்பாரு
விருதியதோர் விமலர்பதம் பணிந்துமைந்தன்
வெகுவாக திசையோக நடக்குமன்றே.

இ-ள். கருதியபடி இவன் தனத்தை யெடுத்து வீடானது கட்டி விவாகமானது செய்தான். இவனுக்குத்தாரம் இரண்டாகும்; சர்ச்சனர்களாகிய அனேகம்பேர்கள் தகுதியாகத்தானே நட்யாவார்கள்; விமலருடைய பாதம் பணிந்துவர வெகுவாக திசையும் யோகமும் நடக்கும் எ-று. 47

அன்றெனவே இவனுடைய வயதோமைந்தா
அன்பான யோகமுள்ள மனிதனுகும்
என்றெனவே இவன்வய தெழுபதாண்டு
இயல்பான சக்கிரத்தி னமைப்புமைந்தா
குன்றெனவே குவலயத்தில் இவனைப்போலே
குணமுள்ள பாலனில்லை கூறக்கேளு
நன்றெனவே இவனுக்குக் கண்டமேழு
நலமாக உண்டப்ப நாடிக்கேளே.

இ-ள். இவனுக்கு வயதுள்ளளவும் யோகமுடையவனுகுவன். வயது எழுபதாகும்; அது சக்கரத்தின் அமைப்பாகும்; பூமியின்மீது குணமுள்ள இவனைப்போல் பாலர்களில்லையாம். இவனுக்குக் கண்டமானது ஏழுண்டாம் எ-று. 48

கேளப்பா இவனுக்கு கண்டமாறும்
கேவலமாய் நடந்துவிடுங் கெடுதியில்லை
ஆளப்பா நீராலே கண்டமொன்று
அப்பனே சத்துருவால் வருமோர் கண்டம்
மாளப்பா வியாதியினுல் கண்டமொன்று
மகத்தான விடத்தாலே வருமோர்கண்டம்
வீளப்பா கண்டமொன்று நாற்காலாலே
விகற்பமுள்ள ஸ்திரீயாலே கண்டமொன்றே.

இ-ள். கேட்க இவனுக்குக்கண்டமானது ஆறும் கேவலமாக நடக்கும். அதினுல் கெடுதியில்லையாம். ஆகினும் சலத்தினுல் ஓர் கண்டமும்சத்துருக்களால்ஓர் கண்டமும் விஷத்தினுல்ஓர்கண்டம் நாற்கால் சீவனுல் ஓர்கண்டம் ஸ்திரீயினுல் ஓர் கண்டமுமாம்.

கண்டமடா இவன்வாழ்வுக் குள்ளேயப்பா
கனத்ததொரு கண்டமெல்லாம் வந்துபோச்சு
பண்டமடா பலபொருள்கள் தேடுவான்பார்
பாக்கியங்கள் மெத்தவுந்தான் வந்துசேரும்
உண்டமடா இவன்வயது முப்பத்தாறில்
வியாப்பதியா யனேகமடா நிலங்கள்கொள்வான்
கண்டமடா தனஞ்செயன்போற் பத்துபிள்ளை
தண்மையுடன் பிறக்குமென்றே சார்ந்துசொல்லே.

இ-ள். கண்டம்யாவும் இவனுடையவாழ்வுக்குள்ளே கனத்த கண்டங்கள் யாவும் வந்து போயினவாம். பண்டமாகிய பல பொருள்களுந் தேடுவான்; பாக்கியங்களும் வந்துசேரும். இவன் வயது முப்பத்தாறில் அனேக நிலங்களைக் கொள்வான்; தனஞ்செயன்போல் பத்துப்பிள்ளைகள் இவனுக்குப் பிறக்குமென்று சொல்வாய் எ-று. 50

சொல்லவே இவனுடைய யோகவாழ்வை
சொல்லிவிட்டேன் ரேகையிட மார்க்கமெல்லாம்

அல்லவே இவனுண்மை வறுமைவாழ்வும்
அன்பாகச் சொல்லிவைத்தேன் மைந்தாகேளு
நல்லவே நன்மையுள்ள பாலகன்றான்
நலம்பெற்று வாழ்ந்திருக்கும் நடத்தைசொன்னேன்
அல்லவே ஆச்சரிய மானதெல்லாம்
ஆனந்தமாகவே நானறிவித்தேனே.

இ-ள். சொல்ல இவனுடைய யோகமும் வாழ்க்கையும் சொல்லிவிட்டேன். ரேகைமார்க்கமெல்லாம்; இவன் ஆண்மையும் வறுமையும் வாழ்வும் அன்பாகத்தானே சொன்னேன்; நன்மையாகிய இப்பாலன் நலமானது பெற்று வாழ்ந்திருக்கும் நடத்தையைச் சொன்னேன் ஆச்சரியமானது யாவும் ஆனந்தமாகவே யானறிவித்தேன் எ-று. 51

அறிவித்தேன் இன்னமொரு ரேகைமைந்தா
ஆச்சரியமுள்ளதது சொல்லக்கேளு
சறிவித்தேன் சற்சினமாம் ரேகையொன்று
சாற்றுகிறேன் இன்னமொன்று மைந்தாகேளு
பொறிவித்தேன் புலமையுள்ள ரேகையொன்று
பொருதுவேன் பிரிவித்தேன் ரேகைமைந்தா
பிறிவித்தேன் இன்னமொரு ரேகைதானும்
பிரிவாகச் சொல்லுகிறேன் இன்னங்கேளே.

இ-ள். அறிவித்தபடி இன்னம் ஒருரேகைச் சொல்வேன் அதுவோ ஆச்சரியமுள்ளது. சற்சினமாகிய ரேகை ஒன்றுசொல்கிறேன்கேளும் புலமையுள்ள ரேகையானது ஒன்று பொருந்தவே பிரிவித்தேன்; ரேகை பிரிவித்த இன்னமொரு ரேகை பிரிவாகச் சொல்லுகிறேன் எ-று. 52

## திரிகண்ட ரேகையின் பலன்.

கேளப்பா திரிகண்ட ரேகையொன்று
கேவலமா இருக்குமப்பா மைந்தாகேளு
ஆளப்பா வாள்காட்டி விரலிலேதான்
அன்பான மால்வரைக்கு கீழேநிற்கும்
நாளப்பா நன்மையுள்ள ரேகைமைந்தா
நலமாக இருவரையும் மூன்றுகோணம்
வாளப்பா திரிகோணத் திருக்கும்பாரு
வண்மையுள்ள ரேகையின் வகைசொல்வேனே.

இ-ள். கேட்பாயாகத் திரிகண்ட ரேகையானது ஒன்று இருக்கும் அது ஆள்காட்டி விரலில் அன்பாகிய மால்வரைக்குங் கீழே நிற்கும் நன்மையுள்ள ரேகையாகும். இருவரையும் மூன்று கோணமும் திருகோணத்திருக்கும் அவ்விரேகையின் வகையைச் சொல்வேன் எ-று. 53

சொல்லுவே னிந்தநல்ல ரேகைதானும்
சொல்லுவதற் கிதன்பெருமை துலங்கக்கேளு
அல்லுவேன் இவன்பிறந்த யோகவாழ்வு
அன்பாக சொல்லுகிறேன் அறிவாய்க்கேளு
நல்லுவேன் இவன்பிறக்கும் போதுமைந்தா
நலமான இவன்மாதா வருத்தப்பட்டு
இல்லுவேன் ஆறுநாள் துயரப்பட்டாள்
இயல்பான மைந்தனிவன் பிறந்திட்டானே.

இ-ள். சொல்ல நன்மையாகிய இந்த ரேகையின் பெருமையைத் துவங்கக்கேளும். அவ்வித ரேகையுடையோன் பிறந்த யோகவாழ்க்கைசொல்கிறேன் கேளும். இவன் பிறக்கும்போது இவனுடைய தாயார் வருத்தமானதுப்பட்டு ஆறுநாள் வரைக்கும் துயரமாகி இந்த மைந்தன்பிறந்தவனாகும் எ-று. 54

பிறந்திடும்போ திவன்பிதா வீட்டிலில்லை
பின்னைபதி னெட்டுநாள் கழித்துவந்தான்
அறிந்திடும் பிறந்தவெட்டா நாளிற்பாம்பு
ஆண்மையுள்ளபாட்டனைத்தான்கடித்துமாண்டான்
பொறிந்திடும்போதி லவன்பிறந்த பிள்ளையப்பா
போதமுள்ள பிதாவுக்கே அலைச்சலாச்சு
சறிந்திடும்போ திவனுக்கு மூத்தபேர்கள்
சற்சனரா யாணொன்று பெண்ணொன்றுமே.

இ-ள். இவன் பிறக்கும்போது இவன்பிதாவானவன் வீட்டிலில்லையாம். பின்பு பதினெட்டுநாள் கழித்துவந்து சேர்ந்தான். இவன்பிறந்த எட்டாநாளில் பாம்பானது பாட்டனைக் கடிக்கப் பாட்டன்மாண்டான். இவன்பிறந்தபின்பு தகப்பனுககு ரொம்பவும் அலைச்சலாயிற்றும். இவனுக்கு மூத்தோர் ஆண் ஒன்று பெண் ஒன்றும் எ-று. 55

ஒன்றானே இவன்பிறவி ஏழுபேராம்
ஓகோகோ இவன்வாழ்வு உகந்துசொல்வேன்
நன்றான நான்முகனார் வகுத்தபடியே
நன்மையாய் நானுரைப்பே னன்றாய்க்கேளு
வன்றானவகையுடனே சொல்வேன்மைந்தா
வண்மையாய் இவன்வீட்டிற் பொருள்கள்பெருக்கும்
குன்றாதகுவலயத்தி லிவனைப்போலே
குலமான கோத்திரத்தின் பலத்தினாலே.

இ-ள். இவனுடன் பிறந்தோர் ஏழுபெயராகும். இவனுடைய வாழ்வைச் சொல்வேன்: நான்முகனார் வகுத்தப்படி நான் நன்மையாகவுரைப்பேன்; இவனுடைய வீட்டில் பொருளானது

பெருக்கும். குன்றுமறப்படிக்கு குவலயத்தின்கண் இவனைப்போல் குலக் கோத்திரத்தின் பலமுடையோன் எ-று. 56

பலனென்ன இந்தநல்ல ரேகைகண்டால்
பக்குவமாய் ஸ்திரீயாகப் பிறப்பதாகும்
நலமென்ன இவன்பிறந்த போதுமைந்தா
நன்மையுள்ள பிதாவுக்குத் தேகமாகும்
குலமென்ன கூட்டுதலைச் சொல்லக்கேளு
குவலயத்திற் சொல்லுகிறேன் குணத்தைமைந்தா
வலமென்ன வண்மையினால் வரலாறெல்லாம்
வண்மையுடன் சொல்லுகிறேன் வரிசைகேளே.

இ-ள். பலனென்னும் இந்தரேகை கண்டால் ஸ்திரீயாகப் பிறப்பதாகும். இவன் பிறந்தபோது பிதாவிற்குத் தேகமாகும் குலமாகியக் கூட்டுதலைச் சொல்வேன்கேளும். குவலயத்திற் குணங்களையும் வண்மையாகத்தானே வரலாறெல்லாம் சொல்லுகிறேன் கேளும் எ-று. 57

கேட்கவே திரிகண்ட ரேகைமைந்தா
கேவலங்களுள்ளத்தின் கெடுதிசொல்வேன்
தாட்கவே தாரணியில் மனிதர்காணார்
தயாபரியாள்மனோன்மணித்தாய் நயவாய்சொல்வேன்
வாட்கவே வண்மையுள்ள மைந்தனுக்கு
மகத்தான கண்டமெட்டு யோகம்நாலு
பாட்கவே இவன்வயதோ ரெழுபத்தைந்தில்
பாங்கான சக்கிரத்தி னமைப்புகேளே.

இ-ள். கேட்க திரிகண்டரேகையின் கேவலமாகிய கெடுதியும் சொல்வேன்; இதனைத் தரணியிலுள்ள மனிதர்கள் காணார்கள். தயாபரியாகிய மனோன்மணியாள் நயவாகத்தானே சொல்ல இவனுக்கு கண்டமானது எட்டுயோகம் நான்காம். பார்க்க இவன்வயது எழுபத்தைந்தில் பாங்காகியசக்கரத்தின் அமைப்பைக்கேளும் எ-று. 58

அமைப்பான இவனுக்குத் தாரந்தானும்
அன்பான பதினேழில் முடியும்பாரு
இமைப்பான இவன்வயது முப்பதுக்குள்
இயல்பான குழவிகளு மூன்றுண்டாமே
வமைப்பான இவன்வயதோ ரிருபத்தெட்டில்
வண்மையுள்ள பூமிகொள்வான் மைந்தன்றானும்
உமைப்பாக இவனுடைய வாழ்வனேகம்
உண்மையுடன் வாழ்ந்திருப்பா னுறுதிபாரே.

இ-ள். அமைப்பாகிய இவனுக்குத் தாரம் பதினேழாம்வயதில் வந்து வாய்க்கும். இவன்வயது முப்பதுக்குள் புத்திரர் மூன்றுண்டாகும். வயது இருபத்தெட்டில் பூமியானதுக் கொள்வான்.

இவனுடைய வாழ்வு அனேகமாகும்; உண்மையாகத்தானே வாழ்ந்திருப்பான் எ-று. 59

## கபிலை சிந்து ரேகையின் பலன்.

பாரப்பா இன்னமொரு ரேகைதானும்
பாங்கான ரேகையதைப் பகரக்கேளு
ஆரப்பா கபிலைசிந்து ரேகையொன்று
அன்பாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
கூரப்பா குணமுள்ள ரேகைதானும்
குணமாகச் சொல்லுகிறேன் கூறக்கேளு
காரப்பா கபிலைசிந்து ரேகைதானும்
கனமாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு.

இ-ள். பார்க்க இன்னமொரு ரேகைப் பாங்குள்ளது அதைப் பகரக்கேளும்; அதாவது கபிலைசிந்துரேகை ஒன்று அதைச் சொல்லுகிறேன்; குணமுள்ள அந்த ரேகையின் மார்க்கம் சொல்கிறேன் கேளும் எ-று. 60

கேட்கவே மால்விரலின் கீழேநிற்குங்
கேவலமாய் கபிலைசிந்து ரேகைமைந்தா
ஆட்கவே யாறுபுள்ளி இரண்டுரேகை
அன்பாக விருகோண மாயிருக்கும்
வாட்கவே யிவன்கையி லிருக்குமாகின்
வளமான வாலைசன் னியாசியாவான்
தாட்கவே தயவுள்ள சீஷனப்பா
தன்மையுள்ள மைந்தனிவன் தயவாய்க்கேளே.

இ-ள். கேட்க அது மால்விரலின் கீழாக நிற்கும் கபிலைசிந்து ரேகையானது ஆறுபுள்ளியும் இரண்டுரேகையும் இருகோணமாகவுமிருக்கும். இவ்வித ரேகையுள்ளோன் சன்னியாசியாகுவன், தயவுள்ள சீஷனாக விருப்பன், தன்மையுள்ள மைந்தனாகும் எ-று.

கேளடா இவன்றானு முன்னேமைந்தா
கேவலமா முற்சனனத் தாரோவென்னில்
நாளடா தேவரிலே ஒருவனப்பா
நலமாக மானிடனாய்ப் பிறந்தான்பாரு
ஆளடா வண்மையுள்ள மைந்தனாகும்
அப்பனே இவன்பிறவி யடுத்துசொல்வேன்
வாளடா வண்மைதனை எல்லாமைந்தா
வண்மையாய்ச் சொல்லுகிறேன் வரிசைகேளே.

இ-ள். இவன் முன்ஜென்மத்தில் யாரோவெனில் தேவர்களில் ஒருவனாகும். இப்போது மானிடனாகப் பிறந்தான்; ஆண்மையுள்ளவன்; இவனுடைய பிறவியதனை யெடுத்து கூறுவேன் எ-று. 62

கேளப்பா இவனுடைய யோகமைந்தா
　　கேட்பதற் கிவன்சன் ஞசியாவான்
தாளப்பா தாரணியில் ரிஷிகள் மெச்சும்
　　சாதுரிய முள்ளதொரு சதுர்த்தனுகும்
வாளப்பா வண்மையுள்ள மைந்தனப்பா
　　வரிசைகளைச் சொல்லவுந்தான் முடியாதாகும்
ஊளப்பா உண்மைபெற்ற மைந்தனுகும்
　　உருதியாய் இவனேழாங் கெற்பமாமே.

இ-ள். கேட்பாயாக இவனுடையயோகம் சன்னியாசியாகுவன்; தரணியின்மீது ரிஷிகள் மெச்சும்படியாக சாதுரியமுள்ளச் சதுர்த்தனுகுவன்; வண்மையுள்ளமைந்தனுடைய வரிசையைச் சொல்லமுடியாதாகும், உண்மையானதைப் பெற்றவன் உறுதியுள்ள இவன் ஏழாங்கெர்ப்பமாகும் எ-று. 63

கெற்பமடா இவன்ருனு மேழாங்கெற்பம்
　　கேவலமாய் இவன்பிறந்தான் சதையந்தன்னில்
கெற்பமடா மேன்மையுட னிவன்ருனப்பா
　　மேன்மையாம் மதிவார மகரமாதம்
விற்பமடா இவன்யோகம் ராசயோகம்
　　விவேகமுள்ள சற்குணனும் பெரியோர்மெச்சும்
உற்பமடா உயற்சியுள்ள பாலனப்பா
　　உத்தமனும் வெகுநாளாய் வாழுவானே.

இ-ள். ஏழாங்கெர்ப்பமாகிய இவன்பிறந்தது சதையநட்சத்திரம் திங்கட்கிழமை தைமாதம். இவன் யோகம் இராஜயோகம் விவேகமுள்ள சர்க்குணனய் பெரியோர்கள் மெச்சும்படி வாழ்வன்; உயற்சி யுள்ளவன் உத்தமனுகிய இவன் வெகுநாள் வாழ்குவன் எ-று. 64

வாழுகின்ற இவன்வயது பதினேழுக்குள்
　　வண்மையுடன் பிதாவுந்தா னிறந்தான்பாரு
நாளுகின்ற நாயகனு நன்மைபெற்று
　　நலம்பெறவே வாழுவண்டா நன்மையாக
ஆளுகின்ற இவன்தானும் வாலேசன்யாசி
　　அன்பான யோகீஸ்பர னுகிப்போவான்
தாழுகின்ற சர்ச்சனர்கள் தயவினுலே
　　தங்கைபெற்ற மைந்தனிட சார்புகேளே.

இ-ள். வாழும்படியான இவன்வயதுப் பதினேழுக்குள் தகப்பன் மரணமாகுவன் இவன் நன்மையானது பெற்றுவாழுண்டாகி வாழ்குவன். இவன் வாலேசன்னியாசியாவன் யோகீஸ்வரனுகுவன் சர்ச்சனர்களின் தயவினுல் இப்பாலனுடைய சார்பை கேளும் எ-று. 65

கேளப்பா இவன்றானு முன்பிறப்பில்
கிருபையுள்ள வகஸ்தியர்க்கு சீஷனாகும்
வாளப்பா வண்மையுட னனேககாலம்
வரிசையாய்ப் பணிவிடைகள் செய்துவந்தான்
ஆளப்பா அப்படியே தவங்கள்செய்து
அன்றவனும் வரம்வாங்கி யுலகத்துள்ளே
வீளப்பா விமலர்பதம் பணிந்துநல்ல
விகற்பமற்று வந்திவனும் பிறந்தானன்றே.

இ-ள். கேட்க இவன் முன்பிறப்பில் அகஸ்தியர்க்குச் சீஷனாகும்; வண்மையாகத்தானே அனேககாலம் பணிவிடைகள் செய்துவந்தான். பின்பு அப்படியே தவங்களானது புரிந்து வரமானது வாங்கி உலகத்தின்கண் விமலருடைய பாதம் பணிந்து விகற்பமற்று வந்து பிறந்தான் எ-று. 66

அன்றெனவே இவன்வய திருபத்தைந்தில்
அன்பாகத் தவசியாய்ப் போவானன்றோ
நன்றெனவே இவன்றானும் ரசவாதந்தான்
நலமாகத் தொழின்முறை கண்டத்துவான்பார்
குன்றெனவே குவலயத்தி லிவனைப்போலே
குணமுள்ள மைந்தனில்லை கூறக்கேளு
அன்றெனவே இவன்வயது முப்பத்தாறில்
அன்பான மாதாவு மிறப்பாள்பாரே.

இ-ள். இவன் வயது இருபத்தைந்தில் தபசியாகப்போகுவன்; இவன் ரசவாதத்தொழில் முறைகள் செய்குவன்; குவலயத்தி லிவனைப்போல் குணமுடைய மைந்தர்களில்லையாம். இவன் வயது முப்பத்தாறில் அன்பாகிய மாதாவும் மரணமடைகுவாள்

பார்க்கவே யிவனுடைய யோகவாழ்வு
பாங்கான கெவனசித்தி யாகிப்போவான்
ஏர்க்கவே யஷ்டமாசித்தி யெல்லாம்
எம்பெருமா னருளாலே நடத்துவான்பார்
தார்க்கவே சண்முகன்தன் அன்புகொண்டு
சதாபூசை செய்தனன்பார் தரணிமீதில்
கூர்க்கவே யிவன்பூஜா பலத்தினாலே
குணமுள்ள பாலனென்று கூறுவோமே.

இ-ள். பார்க்க இவனுடைய யோகமும் வாழ்வும் பாங்காகத்தானே கெவனசித்தியாகிப்போகுவன். எற்கும்படியாக அஷ்டமாசித்தியாவும் எம்பெருமானுடைய கிருபையால் நடத்துவான். சண்முகக்கடவுளின் அன்பானது கொண்டு சதாகாலமும் பூசையானது செய்குவன்; அப்பூசைபலத்தினால் குணமுள்ளோனாகும்

கூறுவோ மிவனுடைய யோகவாழ்வும்
குணமாக நடக்குமது கூர்ந்துசொல்வேன்

ஆறுவே னஷ்டமாசித்தி யென்றும்
அன்பான பாலனுக்கே யாய்ந்துசொல்வேன்
மீறுவேன் சத்துருவும் பிணிகளில்லை
மேதினியில் வந்ததொரு வினைகள் தீரும்
வேறுவினை யில்லைமைந்தா இவனுக்கப்பா
வெகுசுருக்காய் சொல்லிவிட்டேன் வெண்மையாமே

இ-ள். கூறும்படியாகிய இவன்யோகமும் வாழ்வும் குணமாகத்தானே நடக்கும்; அதைக்கூர்ந்துச்சொல்வேன், அன்றியும் அஷ்டமாசித்தியும் பாலனுக்குண்டாம். சத்துருக்களும் பிணியுமில்லையாம். பூமியின்மீது வந்தவினையுந்தீரும்; வேறொரு வினையுமிவனுக்கில்லையாம் எனவெகு சுருக்காய் சொன்னேன் எ-று. 69

## பலவிந்த ரேகையின் பலன்.

ஆகவே யின்னமொரு ரேகைமைந்தா
அறிந்தமட்டுஞ் சொல்லுகிறே னன்பாய்க்கேளு
பாகவே பலவிந்த ரேகையென்னும்
பாங்காண ரேகையொன்று பகரக்கேளு
ஏகவே மால்விரலில் ஏறிநிற்கும்
இருகீறு மூன்றுபுள்ளி இசைந்துநிற்கும்
காகவே வையகத்தி விந்தரேகை
வரிசையாய்க் கண்டாக்கால் மைந்தாகேளே.

இ-ள். ஆகும்படியாக இன்னமொருரேகை சொல்வேன் அறிந்தமட்டுங் கேட்பாயாக. பலவிந்தரேகை யென்னும்படியான பாங்குள்ள அதைப்பகர்வேன்; அது மால்விரலிலேறிநிற்கும். அதில் இருகீறும் மூன்றுபுள்ளியுமாக இசைந்திருக்கும். வையகத்திலுள்ளோர்க்கு இந்த ரேகைகண்டால் அதின் மார்க்கம் சொல்வேன் கேளும் எ-று. 70

கேட்பதற்குப் பலவிந்த ரேகைமைந்தா
கேவலமா யணிவிரலி லிருக்கும்பாரு
வாட்பதற்கு மால்ரேகை யுடனேசேர்ந்து
வளமாக இருக்குமது வண்மைகேளு
நாட்பதற்கு நாயகியாள் கடாட்சத்தாலே
நானிலத்தில் வந்துதித்தான் நளினமாக
மீட்பதற்கு நலமுள்ள யோகமைந்தா
மேலாகச் சொல்லுகிறேன் விரைந்துகேளே.

இ-ள். கேட்கப் பலவிந்த ரேகையானது அணிவிரலினிடமாக விருக்கும் அதுமால்ரேகையுடனே சேர்ந்துயிருக்கும். அதின்வளமையைக்கேளும் தாயாராகிய உமையவளின் கடாட்சத்தால் அவ்விதரேகையுள்ளவன் பூமியில் வந்துப்பிறந்தோனாகும். நன்மையாகிய யோகமதனை மேலாகச்சொல்கிறேன் எ-று.

கேளடா இவன்பிறக்கும் போதுமைந்தா
கேவலங்க ளிவன்மனையி லாகிப்பேரு
வாளடா வையகத்தி லிவனைப்போலே
வரிசைபெற்ற மக்கடானில்லைபாரு
ஆளடா விவன்பிறந்த வீடுதானும்
அன்பான வடவாச லுள்ளவீடு
தாளடா விவள்பிறக்கும் போதுமைந்தா
தயவான பிதாவுமவ னில்லைபாரே.

இ-ள். கேட்க இவன் பிறக்கும்போது இவன் மனையில் கேவலமான பெயராயிற்றும். இந்த பூமியில் இவனைப்போல் வரிசைபெற்றவர்களில்லை. இவன் பிறந்தவீடு வடவாசலுள்ள வீடாகும். இவன் பிறக்கும்போது பிதாவும் அங்கில்லையாம் எ-று.

பாரடா விவன்பிறந்த நாலாமாதம்
பண்பான தாய்மாம னிறந்தான்பாரு
கூரடா யிவன்பிறந்த மூன்றுமாதம்
குணமுள்ள மனையிலே வனலேசாடும்
வேரடா வனல்விழுந்து எல்லாம்போகும்
விகற்பமுள்ள பிதாவுந்தான் வீட்டிலில்லை
சாரடா சற்சனமாய்ப் பின்னேயப்பா
சத்தியவான் மைந்தனென்று சார்ந்துசொல்லே.

இ-ள். இவன் பிறந்த நாலாமாதம் அம்மான் மரணமாகுவன். இவன் பிறந்த மூன்றுமாதம் மனையில் அனலானது சாடும்; யாவும் அழிந்துப்போகும். அப்போது தகப்பனும் வீட்டிலில்லையாம்.; சர்ச்சனமாகப் பின்பு இவன் சத்தியவானுகுவன் எ-று.

சொல்லெனவே இவன்பிறந்த நாளுங்கோளும்
சொல்லுகிறேன் மைந்தாகேள் சூட்சியாக
வெல்லெனவே விமலிதிரி சூலிநீலி
வேதாந்த ஆதித்தாய் விளம்பினாள்பார்
அல்லெனவே யிவனுல்தான் சோதியாகும்
அன்னவனுந் திரிதிகையிற் பிறந்தான்மைந்தா
நல்லெனவே கதிரவன்று னுதையவாரத்தில்
நலம்பெறவே பிறந்தனடா நாடிச்சொல்லே.

இ-ள் செல்லும்படியாக இவன் நாளுங்கோளும் சொல்வேன் சூட்சமாகவும் வெல்லும்படியாக விமலிதிரிசூலிநீலி வேதாந்தமாகிய ஆதித்தாயாகிய அம்பாள் விளம்பினாள். இவன்பிறந்தநாள் சோதியாகும்; திதி திருதிகை கதிரவன் உதையவாரத்தில் நலம்பெறும்படியாக இவனும் நாடிப் பிறந்தான் எ-று.

சொல்லவேயிவன்றானு மைப்பசியிற் பிறந்தான்
சொற்குறிக ளனேகமுண்டு இன்னங்கேளு
நல்லவே இவன்வயது நாற்பத்தெட்டில்
நலமாகப் பிறந்தாண்டா நாடிக்கேளு
அல்லவே யிவனுடைய வாயுசுதான்
அவ்வளவு யென்றுநீ யாய்ந்துசொல்லு
வலம்பெறவே இவன்வயது பதினேழுக்குள்
வளமாக விவாகமது முடியுமென்றே.

இ-ள். சொல்ல மாதம் ஐப்பிசிமாதமாகும்; சொல்லும்படியான குறிகள் இன்னமும் அனேகமாகத்தானே வுண்டாம் இன்னமுங் கேளும். இறன் வயது நாற்பத்தெட்டெனப் பிறந்தான்; இவன் ஆயுளும் அவ்வளவே யாகும்; இவன் வயதுப் பதினேழுக்குள் விவாகமானது முடியும் எ-று. 75

அன்னவே யிவனுக்கோ ராறுபிள்ளை
அன்பாகப் பிறக்குமென் றுய்ந்துசொல்லு
பின்னவே இவனுக்குப் பெண்களுநாலு
பிரியமுள்ள வாணிரண்டு பிறக்கும்பாரு
உன்னவே இவனுக்குத் தாரம்ரெண்டு
உண்மையாய் முடியுமென் றுறுதிசொல்லு
கன்னவே யிவனுக்கோ மந்தவாரம்
காட்சியாய் னடக்குமென்றே கரிதிசொல்லே.

இ-ள். இவனுக்குப் பிள்ளைகள் ஆறு பிறக்கும்; அதில் பெண் நாலு; ஆண் இரண்டாம்; அது உண்மையாகத்தானேமுடியும்; இவனுக்கு சனிக்கிழமை காட்சியால் நடக்கும் எ-று. 76

சொல்லவே இவனுடைய யோகவாழ்வு
சொல்வதற்கு சகலமுநான் சுருக்கிச்சொல்வேன்
அல்லவே ஆஸ்தியுள்ள பாலகன்றான்
அன்பான ரேகையுட அறிவுசொன்னேன்
வெல்லவே யிவன்பிறந்த நாளுங்கோளும்
மேலான யோகமுதல்வாழ்வு சொன்னேன்
நல்லவே நன்மையுடனெல்லாஞ் சொன்னேன்
நன்மைபெற்ற மைந்தனென்று நாடிச்சொல்லே.

இ-ள். சொல்லும்படியாக இவனுடைய யோகமும் வாழ்வும் சொல்லுவதற்குச் சகலமும் சுருக்கிச்சொல்வேன் ஆஸ்தியுள்ளப் பாலனுகும்; அன்பாகரேகையைக் கண்டுசொன்னேன் இவன் பிறந்தநாளுங் கோளும் மேலாகிய வாழ்வும் சொன்னேன்; நன்மையோடு யாவுஞ் சொன்னேன் எ-று. 77

## நாகவிந்த ரேகையின் பலன்.

சொல்லவே யின்னமொரு ரேகைமைந்தா
சொல்லுகிறே னிதன்விபரந் துலங்கக்கேளு
நல்லுவே ளுகவிந்த ரேகையொன்று
நலமாகச் சொல்லுகிறேன் நாடிக்கேளு
அல்லுவே ளுகவிந்த ரேகையொன்று
அன்பாகச் சொல்லுகிறே ளுய்ந்துகேளு
வல்லுவே ளுகவிந்தம் வரலார்தானும்
வண்மையாய்ச் சொல்லுகிறேன் மார்க்கங்கேளே.

இ-ள். சொல்வேன் இன்னமொரு ரேகையைக் கேளும்; அதன் விபரம் நாகவிந்தரேகை ஒன்றுசொல்கிறேன் கேளும் அதின் வரலாரெல்லாம் வண்மையாகத்தானே; அதின் மார்க்கங் கேளும் எ-று. 78

கேளப்பா மால்விரலின் கீழேமைந்தா
கேவலமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆளப்பா ரெண்டுபுள்ளி மூன்றுவட்டம்
அன்பான விதழாறு மிருக்கும்பாரு
வாளப்பா வண்மையுள்ள பாலன்ரூனும்
வரிசையாய் நாகவிந்தரேகை கண்டால்
வீளப்பா ஒன்றுமில்லை தனவானப்பா
விபரமாய்ச் சொல்லுகிறேன் விபரங்கேளே.

இ-ள். கேட்பாய் மால்விரலின் கீழே இரண்டு புள்ளியும் மூன்று வட்டமும் இதழ் ஆறுமிருக்கும்; வரிசையாகிய இந்த நாகவிந்தரேகை யுள்ளோன் துன்பமில்லாத் தனவானுகும்; இன் னமும் விபரமாகச் சொல்கிறேன் எ-று. 79

கேளடா விவன்பிறந்த மனைதானப்பா
கேவலங்க ளுள்ளதொரு விருமனைக்குள்
நாளடா விருமனைக்குள் தென்பால்வீட்டில்
நலமான இருவாசல் வீட்டிலேதான்
ஆளடா வாச்சரிய முள்ளவீட்டில்
அன்பான பாலகனும் பிறப்பதாகும்
மீளடா இவன்பிறந்த வாரநாளும்
மிகுவாகச் சொல்லுகிறேன் வியந்துகேளே.

இ-ள். இவன் பிறந்தமனை இருமனைக்குள் தென்பால் வீட் டில் இவன் பிறப்பாகும். ஆச்சரியமுள்ள வீட்டில் பிறந்தோனு கும்; இவன் பிறந்தவாரமும் நாளும் அறியச் சொல்கிறேன் வியந்து கேட்பாய் எ-று. 80

கேளடா யிவன்பிறந்த நாள்தான்மைந்தா
கேள்வியுள்ள உத்திரத்தில் காலுங்கூடி
நாளடா நன்மையுள்ள நாளிலேதான்
நலமான பாலகன்றூ ஞடிக்கேளு
வாளடா வன்மைபெற்ற மைந்தனப்பா
வரிசையுள்ள வெள்ளியடா உதையந்தன்னில்
நளடா மார்கழியா மாதந்தன்னில்
இன்பமாய்ப் பிறந்தனடா லக்கினத்தில்

இ-ள். இவன்பிறந்தநாள் உத்திரநட்சத்திரம் நாலாம்பாதம் வெள்ளிக்கிழமை உதையகாலம் மார்கழிமாதம் இன்பமாகத் தானே இலக்கினத்திற் பிறந்தான் எ-று. 81

லக்கினமே யிவன்பிறந்த நாளுங்கோளும்
ரஞ்சகமா யோகத்திற் பிறந்தபாலன்
சிக்கெனவே யோகம்வந்து பலிக்குமன்றே
சிவசிவா யிவன்யோகம் செப்பப்போமோ
வக்கிரங்க ளிவன்பிறந்த வருஷத்துள்ளே
வளமான மாதாவும் இறப்பாள்பாரு
அக்கினங்க ளிவன்பிறந்த வருஷம்ரெண்டில்
அன்பான பிதாவைத்தான் கொல்வானன்றே.

இ-ள். இலக்கினமும் இவன்பிறந்த நாளுங்கோளுங்கூடியோகத்திற்பிறந்தபாலனுக்கும் இவனுடையயோகத்தை சொல்லப்போகாதாம். இவன் பிறந்த வருஷத்திலேயே தாயார் மரணமாவாள். இவன்பிறந்த வருஷம் இரண்டில் தகப்பனும் மரணமடைகுவன்.

அன்றெனவே இவன்றூனு மேகாதேசி
அன்பான ஐர்ப்பிசியிற் பிறந்தபாலன்
குன்றெனவே யிவன்வயது மூன்றறைக்குள்
குலமான னிவனிளைய பிதாவுமாள்வான்
நின்றெனவே திதியோகமுள்ள மைந்தன்
நிச்சயமாய் யிவன்யோக நிகழ்த்துவன்கேள்
சென்றெனவே செம்மையுள்ள மைந்தனப்பா
சேதிசொல்வாள் இன்னமுந்தான் ஆதித்தாயே.

இ-ள். இவன் ஏகாதேசித் திதி ஐப்பசி மாதமதிற்பிறந்த பாலனுக்கும் இவன் வயது மூன்றறைக்குள் இவன் இளையபிதாவும் மரணமாவான் திதியோகமுடைய இப்பாலன் பலன்களை நிகழ்த்துவேன் என் செம்மையுள்ள ஆதித்தாயின் வாழ்க்கை என் சொல்வேன் இன்னமும் எ-று. 83

ஆறுவது காண்டம் முற்றிற்று.

**ஆக காண்டம் 6-க்கு பாடல் 539.**

# ஏழாவது காண்டம்.

ஆதியெனும் பராபரையின் பொருளேயம்மா
அம்பிகையின் வாழ்கௌரி யாதியந்தம்
சோதியெனும் மனோன்மணியே உமையேதாயே
சொற்பெரிய உத்தமியே துலங்குமொழியே
நீதியெனும் பரஞ்சுடரே நிர்மலத்தாய்
நீணிலத்தி லுன்னையல்லாற் றெய்வமுண்டோ
வாதியெனும் வாலைபர மேஸ்வரியே
வர்ன்னவிழிக் கண்ணரசே வஞ்சியாளே.

இ-ள். ஆதியாகியப் பராபரையின் பொருளே அம்மையே அம்பிகையே கௌரியாகிய ஆதியந்தமானச் சோதியே மனோன் மணியே உமையே தாயே சொற்பெரிதாகித் துலங்குமொளியே நீதியாகியப் பரஞ்சுடரே நிர்மலத்தாயே இந்த உலகத்தில் உன் னையல்லால் தெய்வமுண்டோ வாதியாகிய வாலைபரமேஸ்வரியே வர்ன்னவிழியுடையக் கண்ணரசே வஞ்சியாளே எ-று. 1

வஞ்சியெனுங் கொஞ்சுகிளி வாலைநாயகியே
வாசமுள்ள கந்தமுன் மலர்ப்பாதந்தான்
அஞ்சினே னுன்பாதத் தருளினாலே
ஆரணங்கே பார்வதியே யபிராமியாளே
நெஞ்சிலே உன்பாதந் துதிப்பேன்றாயே
நேரிழையே சோதியம்மா நேமியாளே
பஞ்சைகள்போல் ரிஷிகள் உனைவணக்கஞ்செய்தார்
பத்தினியே உத்தமியே லோகத்தாயே.

இ-ள். வஞ்சியெனும் கொஞ்சுங்கிளியான வாலைநாயகியே வாசமுள்ளக் கந்தம் உன்மலர்ப்பாதம் அஞ்சினேன்; உன் அரு ளினால் ஆதி பார்வதியே அபிராமித்தாயே நெஞ்சினில் உன்னு டையப் பாதத்தைத்துதிப்பேன்றாயே; சோதியாகிய நேமியாளே பஞ்சைகள் போல் ரிஷிகள் உன்னை வணக்கஞ்செய்தார் ஓ பத் தினியே உத்தமி லோகத்தாயே எ-று. 2

லோகமெல்லா முன்படைப்பு ஜீவாத்மாவை
நோக்கியே யவர்களை நீ காக்குந்தெய்வம்
ஆகமுதற் புராணபல வேதமெல்லாம்
ஆண்டருளு முத்தமியே யம்பிகைநீ
வாகவுரி வர்ன்னமொழிக் கண்ணரசேயுந்தன்
மலர்ப்பாதஞ் சரணமென்று வணங்கும்பேர்க்கு
சாகமுதல் தாழ்ப்பவரை வருமைநீக்கி
சந்தான மீன்றருளுந்தாயே தாயே.

இ-ள். இந்தலோகமாதியந்தமும் உன்படைப்பாகும் ஜீவாத் மாவை நோக்கியவர்களைக் கார்க்குந் தெய்வம்நீயே ஆகம முத லாகிய புராணமும் பலவேதமும் ஆண்டருளும்படியான உத்தமி

அம்பிகைநீ உன்மலர்ப்பாதம் சரணமென்று வணங்குவோர்க்கு சாகமுதலாகத் தாழ்பவர்களுக்கு வறுமையை நீக்கி சந்தானமீந் தருளும்படியானத் தாயே எ-று. 3

தாயேநா னுன்பாத மனுதினந்தான்
தப்பாமற் பூசிக்கத் தயவுசெய்வாய்
ஆயென்ற மந்திரத்தை இடைவிடாமல்
அரகரா தோத்திரங்கள் செய்வேனப்பா
வாயென்ற வையகமும் முனையேபோற்றும்
வாக்கருள் முத்தமியே வாலைசோதி
நாயேனு னுனதுதிருப் பாதம்போற்றி
நாயகியே காத்தருளி நலஞ்செய்வாயே.

இ-ள். தாயே நான் உன்பாதம் அனுதினமும் தப்பாமற் படிக்குப் பூசைசெய்ய தயவுசெய்வாய் ஆயென்னும்படியாகிய மந்திரத்தை இடைவிடாமல் தோத்திரங்கள் செய்வேன் அம்மா. இந்த வையகம் உனையேபோற்றும் வாக்கருளும் உத்தமியாகிய வாலைசோதியே நான் உனதுத் திருப்பாதம் போற்றி நின்றேன் நாயகியே காத்தருள்வாய் எ-று. 4

செய்யவே எந்தனிட தாயேநீயும்
செப்பரிய மனோன்மணியே செல்வயோகி
ஐயமில்லா தென்தனைநீ யாள்வாய்தாயே
ஆச்சரிய முள்ளவளே ஆரணங்கே
மெய்யவே தாந்தசுரூபியம்மா
மேன்மையுள்ள கண்மணியே விமலரூபி
தையவே கார்குழலே தாயேயம்மா
தயவுவைத் தருள்புரியுந் தங்கையாரே.

இ-ள். செய்யும்படியானத் தாயே நீயும் செப்பரிதாகிய மனோன்மணியே செல்வயோகியே ஐயமில்லாமல் என்னைநீ யாள் வாய்த்தாயே ஆச்சரியமுள்ளவளே ஓ ஆரணங்கே வேதாந்தச் சொரூபியே மேன்மையுள்ள கண்மணி விமலரூபி தாயே தயவு வைத்து அருள்புரிவாய்த் தங்கையே எ-று. 5

தங்கையே யென்பிறவி உமையேதாயே
தாழ்வில்லாப் பெண்ணரசே சர்வசாட்சி
பங்கையம்போல் முகம்படைத்த பார்வதித்தாய்
பத்தினியே பரமனிட பாகம்பெற்றாய்
எங்கணுமாய் நிறைந்ததொரு ஏகரூபி
ஏகாந்த கண்மணியே வாலையம்மா
மகத்தான மூலமுதற் பொருளானாளே.

இ-ள். தங்கையாகிய என்பிறவியே உமையேதாயே தாழ் வில்லாதப் பெண்ணரசே சர்வசாட்சியே தாமரைமலரைப்போல் முகம்படைத்தப் பார்வதித்தாயே பத்தினியே நீ பரமனுடைய பாகம்பெற்றாய். எங்கும் நிறைந்த ஏகரூபி ஏகாந்தக் கண்மணியே

எம்பிராட்டியே மங்கையெனும் மனோன்மணியே வாலையம் 6
மாளே மூலமுதற் பொருளே எ-று.

பொருளென்ற பூரணமாம் சோதித்தாயே
போதமுள்ள சீவர்கட்குச் சீவனாய்
அருளென்ற அனுக்கிரகம் ஆதிசத்தி
ஆதியந்தம் உடல் உயிரும் அனைத்துமானாய்
வருளென்ற வகுப்புநீ யேகமும்நீ
வாகான நலமும்நீ தீமையும் நீயே
சருளென்ற சரஸ்வதிநீ சத்தியும்நீ
சற்குணிநீ உலகமெல்லாம் படைத்தாய்நீயே.

இ-ள். பொருளென்னும் படியாயும் நின்ற பூரணமாகிய சோதித்தாயே ஜீவர்கட்குள் ஜீவனாய் அருளென அனுக்கிரகமாகிய ஆதிசத்தியே ஆதியந்தமும் உடலுயிரும் அனைத்தும் நீயானாய்; வகுப்பும் நீ ஏகமும்நீ நலமும் நீ தீமையும்நீ சரஸ்வதியும்நீ சத்தியும்நீ நிர்க்குணிநீ உலகெலாம்படைத்ததாய் நீயே

நீயெனவே அண்டமும்நீ பிண்டமும்நீ
நீணிலத்தில் தேவர்முதல் முனிவரும்நீ
ஆயெனவே அம்மையும்நீ அப்பனும்நீ
ஆனதொரு சுவாதிஷ்டான மூலமும்நீ
தாயெனவே தங்கையும்நீ தாரமும்நீ
தற்பரமே மெய்ப்பொருளே தயவுசெய்வாய்
காயெனவே கனியெனவே மூலமும்நீ
காரணியும் பூரணியும் நீதானாமே.

இ-ள். அண்டம்நீ பிண்டம்நீ தேவர்முதலாகிய முனிவரும்நீ அம்மையும் அப்பனும்நீ சுவாதிஷ்டான மூலமும்நீ தாயும்நீ தங்கையும்நீ தாரமும்நீ தர்ப்பரமாகிய மெய்ப்பொருளே தயவு செய்குவாய்; காயும்நீ கனியும்நீ மூலமும்நீ காரணியும் பூரணியு 8
மானவள் நீயே எ-று.

ஆமெனவே ஐயும்கிலியும் சவ்வும் ஆனாய்
அடிமுடியும் நடுவும் என அமர்ந்தசோதி
ஊமெனவே மஹேஸ்வரியும் ஸ்ரீயும்ரீயும்
உத்தமியே அங்கென்றும் உங்மங்கென்றும்
வாவெனவே வவ்வென்றும் சிவவென்றும்தான்
வண்மையுள்ள யவ்வென்றும் யவ்வும்யென்றே
நாமெனவே நவ்வென்றும் மவ்தானென்றும்
நமநம சிவசிவ ரারாயென்ன.

இ-ள். ஆமெனும்படியாக ஐயும்கிலியும் சவ்வும் ஆனாய் அடிமுடியும் நடுவுமாக அமர்ந்தசோதிமயேஸ்வரியாயும் ஸ்ரீயும் ரீயும் அங் உங் கங் என்றும் வவ்சிவ் என்றும் யவ் என்றும் யவ்வும் என்று நவ்வென்று மவ் என்றும் நமநம சிவ சிவ ரா ரா என்னே

ராரார நமசிவரங் கங்கென்று
நல்லரீங் ஸ்ரீங்ரக்ஷி ரக்ஷியென்று
பாரராரரா நாதாபின் குரங்கிசாய
பராபரியே என்பிறவியுன் பாதம்போற்றி
சீராரும் ஸ்ரீம்ஓம் பகவதாநீ
சிவசத்தி உடலுயிரும் ஆனதாயே
தாராரும் ரங்லிங்சிங் வங்கென்று
தாருலகிற் செய்பூசை கொள்ளும்தாயே,

இ-ள். ராரார நமசிவரங் அங்என்றும் ரீங்ஸ்ரீங்ரக்ஷி என்றும் பரா ராரா நாத பிந்து ரங் கிராய பராபரியே என்பிறவி உன்பாதம் போற்றி ஸ்ரீம் ஓம் பகவதாநீ சிவசத்தியாகி உடலும் உயிருமானத்தாயே ரங்லிங்சிங்வங் என்றும் தாருலகின்கண் செய்யும் பூசையைக் கேளுந்தாயே எ-று. 10

தாயென்றும் தங்கையென்றும் என்பிறவிநீயே
தார்குழலே சோடசத்தைச் சாற்றுவேன்யான்
ஆய்யென்றும் அம்பிகையே போற்றிசெய்ய
அகத்தினுள்ளே அகமாகும் ஆச்சரிப்பாய்
போய்யென்னும் கொற்றவர்கள் கோகிலாளே
கொம்பனையே என்பிறவி கோவிந்தன்நான்
லாயயென்னும் லகிரிசிவ சோதிமாதா
ரட்சிக்க அருள்புரிவாய் மாதாநீயே.

இ-ள். தாயென்றும் தங்கையென்று யென்பிறவியும் நீயே யென்றும் சோடசத்தைச் சாற்றுவேன்யான் உன்னை அம்பிகை யென்று போற்றி செய்ய அகத்தினுள் அகமாக உன்னை ஆச்சரிப்பாக விளங்கும் கோகிலாளே கொம்பனையே என்பிறவியே கோவிந்தனுகியநான் தொழுகிறேன் சிவசோதிமாதாவேரட்சிக்க அருள்புரிகுவாய் நீயே எ-று. 11

மாதாவே மனோன்மணியே மலர்ப்பாதத்தை
மகத்துவமாய் தோத்திரங்கள் வழுத்துவேன்யான்
ஆதாவே ஆங்ரீங்ஸ்ரீங் என்றுதானே
அருள்புரிவாய் திருப்பாதம் ஆரணங்கே
சாதாவே சற்குணமாம் சவுபாக்கியத்தின்
சண்முகனைப் பெற்றெடுத்த தாயும்நீயே
போதாவின் பூரணியே மெஞ்ஞானத்தி
போற்றிசெய்வேன் காத்தருளும் புண்யத்தாயே

இ-ள். ஓமாதாவாகிய மனோன்மணியே, உன் மலர்பாதத்தை மகுத்துவமாகக் கொண்டு தோத்திரங்கள் செய்வேன்; ஆங் ரீங் ஸ்ரீங் என்றும் துதிப்பேன் அருள்புரிவாய்; உன்திருப்பாதத்தை ஆரணங்கே சர்க்குணமும்நீ சவுபாக்கியமும் நீ சண்முகனைப் பெற்றெடுத்தத்தாயும் நீயே; போதபூரணியே மெஞ்ஞானசத்தியே போற்றிசெய்வேன் காத்தருளும் எ-று. 12

தாயென்றும் உந்தனைத்தான் சோடசத்தின்
　　தாற்பரியம் உள்ளதாய் தயவாய் எண்ணி
வாயென்றும் ஓம்நம்ஸ்ரீம் பகவதியாயென்றும்
　　மாதாவே பராசத்தி வாவாவென்றும்
ஆயென்றும் அனுதினமும் துதிப்பேன்தாயே
　　அற்புதமே மெய்ப்பொருளே ஆரணங்கே
சாயென்றும் சற்குணிநின் செயலேயெல்லாம்
　　சரஸ்வதிநீ சௌபாக்கிய புண்ணியதாயே

இ-ள். தாயென்று உன்னை சோடசத்தின் தாற்பரியமுள்ள தாய் தயவாகவும் எண்ணி ஓம் நம் ஸ்ரீம் பகவதி என்றும் மாதாவே பராசத்தியேவாவா என்றும் அனுதினமுந் துதிப்பேன்; தாயே அற்புதமே மெய்ப்பொருளே ஆரணங்கே சர்க்குணி நின் செயலே யல்லால் சரஸ்வதிநீ சௌபாக்கியவதிநீ புண்ணியவதி 13
யும் நீயே எ-று.

புண்ணியமுநீ பாவமுநீ போதமுநீ
　　புவனமெங்கும் படைப்புந்நீ அருளும்நீயே
அன்னியம்நீ உறவும்நீ ஆதரவும்நீயே
　　ஆனந்த மதியமிர்தம் அம்பிகைநீ
வன்னியும்நீ வாயும்நீ அப்புவிம்நீ
　　வர்கான பிருதிவியுடன் ஆகாசம்நீயே
உண்ணியதோ ருலகமெல்லாம் படைத்ததாயும்
　　உத்தமிநீ பத்தினிநீ சோதிநீயே.

இ-ள். புண்ணியமும்நீ பாவமும்நீ போதமும்நீ புவனம் படைத்தவளும்நீ அருளும்நீ அந்நியம்நீ உறவும்நீ ஆதரவும்நீ அனந்தமதி யமிர்தமான அம்பிகைநீ வன்னியும்நீ வாயும்நீ அப்பும்நீ பிரிதிவுநீ ஆகாசம்நீ உலகமாதியந்தமும் படைத்ததா 14
யும்நீ உத்தமிநீ பத்தினிநீ சோதியே எ-று.

சோதிநீ ஆதியும்நீ அந்தமும்நீ
　　சொற்பெரிய கங்கையொடு திங்கள்நீயே
நீதியும் நிறைந்ததொரு சோதியும்நீ
　　நிர்க்குணியும் சற்குணியும் நீயேயம்மா
வாதியும்நீ வையமெங்கும் வளர்ந்தசோதி
　　வாலைபரமேஸ்வரிநீ வைரவிநீ
சாதிநீ சனனம்நீ சந்தானமும்நீ
　　சரஸ்வதிநீ சாமளாதேவிநீயே

இ-ள். சோதிநீ ஆதியும்நீ அந்தமும்நீ கங்கைநீ திங்கள்நீ நிதிநீ நிறைந்தசோதிநீ நிற்குணிசற்குணியும்ஆனவள்நீ வாதியும்நீ வையமெங்கும்வளர்ந்தசோதிநீ வாலைபரமேஸ்வரிநீ வைரவிநீ சாதிநீ சநநம்நீ சந்தானமும்நீ சரஸ்வதியும்நீ சாமளாதேவியும் 15
நீயே எ-று.

திருவைசெகரூபி அம்மாள் திருநீற்றுளே
திருக்கறத்தைப் பெற்றதொரு தேவிநீயே
மருவையெனும் மகிடசங் காரிதேவி
மகத்துவங்கள் பெற்றதொரு சோதிநீயே
கருவையெனுங் காரணியே காளிரூபி
கங்காளி சாமுண்டி கனகவல்லி
தருவையெனும் உண்மையுள்ள உமையேதாயே
உலகமெல்லாம் படைத்ததொருஉமையென்றேனே.

இ-ள். திருவையென்னுஞ் சொரூபியே அம்மாளாகிய திருநீற்றுளே திருக்கரத்தைப் பெற்றதேவிநீயே மகிடசங்காரியாகிய தேவியே மகத்துவம் பெற்றசோதி காரணியே காளியேரூபியே கங்காணி சாமுண்டி கனகவல்லிநீயே தருவே உண்மையுள்ள உமையேதாயே உலகமெல்லாம் படைத்த உமையே எ-று. 22

என்றென்றும் அருள்புரிவாய் கோரிநீவி
ஏற்றியே போற்றிசெய்ய மலர்பாதத்தை
நன்றென்று நாரணனுர் அர்ச்சிக்கும்போது
நன்மையுள்ள உமையவளும் மனமகிழ்ந்து
என்றுநாம் இருபேரும் ஒருருவம்போல
இருப்பது அறியாயோ தமையாநீயும்
குன்றெடுத்த கோபாலா என்றுதானே
குணமுள்ள உமையவளும் கூறுவாளே

இ-ள். என்றும் அருள்புரிவாய் அகோரிநீவியென்று ஏற்றிப் போற்றிசெய்ய இவ்விதமாக நாரணர் அர்ச்சிக்கும்போது உமையவளும் மனமகிட்சியாகிசொல்வாள் நாம் இருபேரும் ஒருருவாகத் தானே இருப்பது அறியாயோ தமயனுரே நீரும் என்று உமையவள் கூறுவாள் எ-று. 23

கூறுவாள் உமையவளும் லோகமெல்லாம்
குணமாக படைத்தவளும் சொல்வாளப்பா
சாருவாள் எந்தமையா இருபேருந்தான்
சராசரமாய் ஒருயிராய் உடல்வேருக
பேருவோ மென்றுஅம்மன் மனமகிழ்ந்து
பெருகிமனப் பூர்வத்தோ ருருவமானுள்
காருவோம் கருணையினுல் அக்கினிபோலும்
கலந்துமனம் நிறைந்தபடி நின்றிட்டாளே.

இ-ள். கூறுவாள் உலகமெல்லாம் படைத்த உமையவள் கேளும், என் தமையனுர் நாங்களிருபேரும் சராசரத்திற்கும் ஒருயிராய் உடல் வேருக இருப்போம் என்று மனமகிழ்ந்து பெருகிபூர்வத்துருவமாகிக் கருணையினுல் அக்கினிப்போலும் கலந்துமனம் நிறைந்தபடியாகி நின்றிட்டாள் எ-று. 24

நின்றிடவே தேவரெல்லாம் புளகமாகி
நிகரில்லாக் களபமுதல் நீர்கள்தூத்தார்
நன்றிடவே நலமுள்ள வாசகங்கை
நன்மையுடன் கொண்டுவந்து சொரிந்தாரப்போ
மன்றிடவே நவகோடி சித்தர்போற்ற
வணங்கிடவே இந்திரன்முதல் ஈசனுந்தான்
என்றிடவே மகாகோடி தேவரெல்லாம்
எம்பிரான் அடிபரவி வணங்கினரே.

இ-ள். அம்மன் இப்படிநிற்க தேவர்களெல்லாம் புளாகிதமாகி களபமோடு புஷ்பமாரிப் பொழிந்தனர்; வாசகங்கையைக் கொண்டு வந்து சொரிந்தார்கள்; அப்போ நவகோடி சித்தர்களும் போற்ற அஷ்டதிக்குப் பாலர்களுடன் இந்திரன் முதலானோர்களும் போற்ற மகாகோடித் தேவர்களெல்லாம் எம்பிரான் அடியைப்பணிந்து வணங்கினர்கள் எ-று. 25

வணங்கிடவே தேவரெல்லாம் துதித்தார்களப்போ
வண்மையுள்ள நவகோடி சித்தர்போற்ற
இணங்கிடவே எண்டிசையின் மனுக்கள்போற்ற
இயல்பான ரிஷிகளெல்லாம் இசைந்துபோற்ற
அணங்கிடவே அண்டரண்ட புவனமெல்லாம்
அரியவுமை மலர்ப்பாதம் தொழுதாரப்பா
தணங்கிடவே தாய்பதத்தை தேவரெல்லாம்
தண்மையுடன் அடிவணங்கித் துதிசெய்தாரே.

இ-ள். வணங்கிட தேவர்களெல்லாந் துதித்தார்களப்போ நவகோடிச் சித்தர்களும் போற்ற எண்டிசையிலுள்ள மனுக்கள் போற்ற ரிஷிகள் யாவரும் இசையாகப்போற்ற அண்டரெண்டப் புவனங்களெல்லாம் அறியும்படியாய் உமையவளின் மலர்பாதத்தை தொழுதார்கள்; தாய்தந்தை முதலாகிய தேவர்களெல்லாம் தண்மையாகத்தானே அடிவணங்கித் தொழுதார்கள் எ-று. 26

செய்திடவே உமையவள்தான் திருப்பாதத்தை
செயலாக வணங்கியவர் நிற்கும்போது
ஐதிடவே ஆயிழைப் போற்றிசெய்ய
அருள்பெருகும் உமைதாங்கி அடிவணங்கி
பைதிடவே பராபரனார் கிருபையாலே
பத்தினியைத் தேவரெல்லாம் பணிந்தபோது
மெய்திடவே மேன்மைபெற்ற உமையாள்தானும்
மெய்ப்பொருளும் மனமகிழ்ந்து இருந்தாள்பாரே

இ-ள். தொழுது உமையவளின் றிருப்பாதத்தைச் செயலாக வணங்கியும் அவர்கள் நின்றும் போற்றி செய்தும் பரமசிவனுடையக் கிருபையால் பணிந்து துதிசெய்தபோது உமையவள் தானும் மனமகிழ்ந்தான் எ-று. 27

கேளெனவே உமையவளும் ரிஷிகளோடே
கேவலமாய்ச் சொல்லுகிறேன் ரிஷிகாள்கேளீர்
நாளெனவே நன்மையுடன் ரிஷிகள்தானும்
நலம்பெறவே உமைபாதம் வணங்கிக்கேட்க
தாளெனவே தண்மையுடன் ரிஷிகள்போற்ற
தாழ்வில்லா உமைசொல்லக் கேட்பாரன்று
தோளெனவே மனோன்மணியாள் மனதிரங்கித்
தோகைமயில் வாகனைத்தான் பெற்றமாதே

இ-ள். கேளென உமையவள் ரிஷிகளோடே சொல்ல, அப்போது ரிஷிகள் உமையவளை வணங்கிப் போற்றிநிற்க உமையவள் சொல்லக்கேட்பார் மனோன்மணியாள் மனமானதிரங்கி மயில்வாகனமீதேறும் முருகக்கடவுளைப்பெற்ற தாயாரும். 34

பெற்றதொரு உமையவள்தான் சொல்வாளப்பா
பேறுபெற்ற ரிஷிகளே சொல்லக்கேளீர்
அத்தனருள் இடப்பாகம் ஆனதாலும்
ஆத்தாளும் சொல்வாள் அன்புகூர்ந்து
முத்திபெற்ற கர்த்தரது நல்லோரல்லாம்
முயற்சியுடன் சொல்லுகின்ற மொழிகேட்பீர்கள்
கர்த்தாவே என்தாயே நீதான்சொல்லும்
காரணத்தை கேட்கிறோம் கருணையாளே.

இ-ள். உமயவள் சொல்வாள்; பெருமையாகிய ரிஷிகளேசொல்லக்கேளீர்; அதனுடைய இடபாகம்பெற்றதாலும் அம்பிகையாள் சொல்வாள் அன்பானதுக்கூர்ந்து முத்தியானதுபெற்று கர்த்தருக்கு நல்லவராகிய எல்லாம் யான் சொல்லும் மொழியைக் கேட்பீர்கள் என, அப்போது ரிஷிகள்சொல்வார்,என்தாயே நீர் சொல்லும் காரணமாகிய வதைக்கேட்கின்றோம் கருணையாளே

ஆளென்ற உமையவள்தான் சொல்லும்வாக்கு
ஆச்சரியம் ரிஷிகளெல்லாம் வணங்கிக்கேட்க
வாளென்ற வையகமும் லோகமெல்லாம்
வண்மையுடன் பிழைக்கவென்று வகுத்தேன்நூலை
வேளென்ற வேலைப்போல் முனிவர்சித்தர்
வேதமுதல் சாஸ்திரங்கள் வகுத்தார்கோடி
தூளென்றதூள்போலே விண்ணுமண்ணும்
துலவில்லா நூல்கள்சித்தர் தொகுத்திட்டாரே.

இ-ள். அப்போது உமையவள்சொல்லும்படியான வாக்கை ஆச்சரியமாகத்தானே ரிஷிகள் யாவரும்வணங்கிக்கேட்கசொல்வாள்; வையகமுதலான லோகமாதியநதமும் பிழைக்கும்படியாக வகுத்தேன் இந்நூலை; அன்றியும் முனிவர்களும் சித்தர்களும் வேதமுதலியச் சாஸ்திரங்களை வகுத்தனர்கள் கோடி தூள்போல விண்ணும்மண்ணும் துலவில்லாமற்படிக்கு நூல்கள் சித்தர்கள் தொடுத்து வைத்தனர் எ-று. 36

சித்தரென்ற ரிஷிகள்முதல் வானோரெல்லாம்
செகத்திலே அனந்தமது உண்டுசெய்தார்
பக்தரென்ற பக்தர்கள்தான் படித்தநூலை
பார்தனிலே பொய்யென்று சொன்னபேர்க்கு
முத்திமுதல் தலைமுறைகள் உள்ளமட்டும்
முப்பிறப்பும் ஏழுவரை மைந்தாகேளு
அத்தனருள் மாலகிரி அறியவேதான்
அவருடைய அந்தரங்க அன்பினாலே.

இ-ள். சித்தர்முதலாகிய வானோர்கள் யாவரும் செகத்தின் மீது அநந்தம் உண்டுயெய்தார்கள் பக்தர்கள் படிக்கும்படியாகிய நூலைபாரின்மீதுப் பொய்யென்றுச் சொன்ன பெயர்களுக்கு அவர்கள் தலைமுறை யுள்ளமட்டும் முற்பிறப்பும் பரமசிவனறியும் படிச் சொல்லுகின்றேன் அவர்களுடைய அந்தரங்கங்களைகேளும்.

நாலென்ற நான்முகனும் ரிஷிகளெல்லாம்
நடுநடுங்கி பயந்தவரும் நடனம்பாட
தாலென்ற எந்நூல்தான் உலகத்துள்ளே
தாரணியிற் காணரிது தன்மைசொன்னேன்
வாலென்ற வையகத்தில் பிரமகீதை
வகுத்தேன்நான் ஆயிரந்தான் பனிரண்டுகாண்டம்
ஊலென்ற உட்பொருள்தான் இந்தநூல்தானும்
உத்தமர்கட் கிந்நூல்தான் எய்தும்பாரே.

இ-ள். அப்போது நான்முகனாகிறப் பிரமனும் ரிஷிகள்யாவரும் நடுநடுங்கிப்பயந்து நடனமாடி ஸ்தோத்திரம் பண்ண உமையவள் சொல்வாள், ரிஷிகளே என்னுடைய நூல் உலகத்தினுள்ளே காணுதற்கரிதாகியத் தன்மையைச் சொன்னேன்; அன்றியும் வையகத்தின்மீது பிரமகீதை வகுத்து ஆயிரம்பாடல் பனிரெண்டுக் காண்டமாகவும் உட்பொருளாகிய இந்நூல் உத்தமர்க்கு உண்மையாகும் எ-று. 38

பாரப்பா இந்நூலை வெளியில்மைந்தா
பாவிகட்குக் கொடுக்கவுந்தான் ஆகாதப்பா
காரப்பா இந்நூலின் அமைப்புமைந்தா
காட்சியாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
சேரப்பா இந்நூலைப் பூசித்தோர்க்குச்
சேரவே வைகுண்டம் தீர்க்கமாகும்
ஆரப்பா எந்நூலைப் படித்தோர்க் கெல்லாம்
ஆயுசுள்ளவரைக்கும் ஆதரிப்பேன்தானே.

இ-ள். பார்க்க இந்நூல் வெளிவந்தபோதிலும் பாவிகளுக்குக் கொடுக்கப்போகாது இந்நூலில் அமைப்பைக் காட்சியாகச் சொல்லுகின்றேன் இந்நூலை பூசித்தோர்க்குச் சேரும்படியாக வைகுண்டதீர்க்கமாகும் என்னுடைய நூலைப்படித்தபேர்கள் யாவருக்கும் அவர்கள் ஆயுசு உள்ளவரைக்கும் ஆதரிப்பேன்.

ஆதாரம் என்பதற்கு இதுவேமூலம்
அண்டமுதல் பிண்டவரை வேறேவுண்டோ
பேதாரம் இந்நூலைத் தினங்கள்தோறும்
பேணியே புட்பமிட்டுப் பூசிப்பாயாகுல்
சீதாரம் சிற்பரத்தில் அவர்களைத்தான்
சிவசிவா சிவன்பதவி எய்தும்பாராய்
வாதாரம் வாலையிடப் பூஜைமைந்தா
வண்மையாய் சிவபூஜை கோடியாச்சே.

இ-ள். ஆதாரமென்பதற்கு இதுவே மூலமாகும். அண்டமுதல் மூவரைக்கும் வேரேயில்லை; இந்நூலை தினந்தோறும் பேணி புஷ்பஞ்சாற்றி பூசித்து வருவாராகில் சிற்பரத்தில் அவர்களைச் சிவசிவாவென்ற சிவன்பதவிக் கிடைக்கும். ஆதாரமாகிய வாலையிடப் பூசை வண்மையாகச் செய்ய சிவன்பூசை கோடியாகும்

ஆச்சென்ற அஞ்செழுத்து சோடசத்துள்
அமைத்துலகைப் படைத்துவிட்டேன் அறிவினுலே
பேச்சென்ற பேச்செல்லாம் ஒன்றுமில்லை
பேசாது வேதமுதல் புராணமெல்லாம்
வாச்சென்ற எந்நூலிற் சகலபுத்தி
வண்மையால் சொல்லினேன் வரிசையாக
மாச்சென்ற மாச்சலது இல்லைமைந்தா
மகத்தான பெரியோர்க்கு வசனித்தேனே.

இ-ள். ஆச்சென்னும்படியான ஐந்தெழுத்தாகிய சோடசத்துள் உலகத்தைப் படைத்தேன். அறிவினுல் பேச்சென்பது வொன்றுமில்லை. வேதமுதலாகியப் புராணம் யாவும் பார்ப்பதற்கு மேலாகிய இந்நூல் பத்தி விளங்கத்தானே வண்மையாய்ச் சொல்லினேன் மாச்சென்றும் மறப்பானது ஒன்றுமில்லை மகத்தாகிய பெரியோர்க்கு வசனித்தேன் எ-று.

வசனித்தேன் கேசகியின் நூலிலேதான்
வண்மையுள்ள சகலமுறை எல்லாஞ்சொன்னேன்
நிசனித்தேன் லோகமதில் மனிதர்க்காக
நிகழுகின்றபலன்களெல்லாம்நிஜமாய்ச்சொன்னேன்
பசனித்தேன் பராபரத்தின் கிருபையாலே
பார்தனிலே நடப்பதெல்லாம் பகர்ந்தேன்சூக்ஷம்
இசனித்தேன் இன்பதுன்ப யோகவாழ்க்கை
இயல்பாக நடப்பதெல்லாஞ் சொல்லினேனே.

இ-ள். வசனித்தேன் கேசகியென்னும் நூலில் வண்மையாகிய சகலமான முறைகள் யாவுஞ்சொன்னேன். மனிதர்களுக்காக வேண்டுமென்றும் பலன்கள்யாவும் நிஜமாகத்தானே சொன்னேன்; பராபரத்தினுடைய கிருபையால் உலகில் நடப்பது யாவும் பகர்ந்தேன் சூட்சமாகவும்; இன்பதுன்பம் யோகவாழ்க்கை நடப்பது யாவுஞ் சொன்னேன் எ-று.

சொன்னெனப்பா பிறவிமுதல் மரணமட்டும்
சொல்லுதற்குச் சகலவகை துணிந்துசொன்னேன்
அன்னெனப்பா ஆயுசுடன் கண்டம்யோகம்
ஆதியந்த முதற்சனனம் அறிவுசொன்னேன்
மன்னெனப்பா என்குருவாம் கைலைமூர்த்தி
மனமகிழ்ந்து உபதேசம் செய்தமார்க்கம்
கன்னெனப்பா கருணைபெறும் தேவதேவன்
கடாக்ஷிக்க வீந்திட்டேன் கருதுவாயே. 43

இ-ள். சொன்னேன்பிறவி முததாக மரணமட்டும்; இன்னமும் சகலமுந்துணிந்துச் சொல்லச்சொன்னேன்; மன்னனாகிய என்குருகையிலைநாதர் மகிழ்வாகத்தானே உபதேசஞ் செய்த மார்க்கம்போல் கருணைப் பெரும்படியான பிரமதேவன் கடாட்சிக்கும்படியாக ஈந்திட்டேன் எ-று.

வாயென்ற வையம்தான் போற்றிசெய்ய
வண்மையாய் ரேகையின் சாஸ்திரத்தைதானே
தாயென்ற தாய்போலாம் பிறவிநூலைத்
தாரணியிற் பலவுயிர்கள் பிழைக்கவேண்டி
ஆயென்ற கையெழுத்தே தலையெழுத்தாம்
ஆச்சரியம் நாள்கோளும் தள்ளிப்போடு
மேயென்ன் தலையெழுத்து பொய்பொய்யே
பேருலகில் இச்சூக்ஷம் பெருமைகேளே. 44

இ-ள். வாரிசூழும்படியான இந்தவையகம் போற்றிசெய்ய வண்மையாகத்தானே ரேகையின்சாஸ்திரத்தைத் தாயைப்போலும் பிறவியைப்போலும் இந்நூலை தாரணியிலுள்ளப் பலவுயிர்களும் பிழைக்கவேண்டியும் கையெழுத்தே தலையெழுத்தாகவும் கொண்டு நாளுங்கோளுந்தள்ளிப் போடவேண்டும் தலையெழுத்தென்பது பொய்யாகும் உலகில் பெருமையாகிய இச்சூட்சங் கேளே எ-று.

கேளப்பா லோகமதில் பிறந்தபேர்கள்
கேவலமாய் நாட்பலன்கள் இல்லைமைந்தா
நாளப்பா நாளில்லை கோளுமில்லை
நட்சத்திரம் கோசரங்கள் ஒரையில்லை
வாளப்பா பிறவிக்கு வயதும்யோகம்
வண்மையுள்ள கண்டமுதல் வசனித்தேன்யான்
வேளப்பா நாள்பலங்கள் ராசிபலங்கள்
விகற்பங்கள் பிறந்தபிள்ளைக் கில்லையன்றே.

இ-ள். கேட்க உலகத்தின்கண் பிறந்தபேர்களுக்கு நாட்கள் பலன்களில்லை நட்சத்திரம் கோசரம் ஒரையில்லை அவைகளில்லாமலேபிறவிக்குவயதுயோகம் கண்டம்யாவும் வசனித்தேன் யான்

நாள்பலன் இராசிபலன்கள் விகற்பங்கள் பிறந்திடும் பிள்ளைகட்கு இல்லையாம் எ-று. 45

அன்றெனவே அவள் அவன் தான் கருவில்மைந்தா
அமைத்தபடி அவன்கரத்தில் காணுமன்றே
நன்றெனவே நான்முகனும் கையிலேதான்
நலமாகக் கரங்களால் எழுதிப்போட்டான்
குன்றெனவே குணங்கள் தன்னைக் கையின்ரேகை
குறிப்பறிய யீஸ்வரனார் கொடுத்தாரன்றே
வென்றெனவே விகற்பங்கள் இல்லாமல்தான்
வியந்திட்ட கேசரியின் விபிதிதாமே.

இ-ள். அவள் அவன் கருகில் அமைத்தப்படி அவன்கரத்தில் காணும்; நான்முகன் கரங்களில் கரங்களால் எழுதிப்போட்டான்; குணங்கள் தரும்படியான கையின் ரேகையின் குறிப்பையறிய யீஸ்பரனுற்குக் கொடுத்தார் அதில் விகற்பங்கள் இல்லாமல் சொன்னகேசரி யீதாகும் எ-று. 46

ஆமென்ற என்னுடைய கேசரியின்மைந்தா
அண்டரண்ட புவனமெல்லா மெய்க்கத்தானே
வாமென்ற வாலையிடப் பாடலைத்தான்
வகையாகச் சொன்னமொழி வண்மையாகத்
தேமென்ற அமிர்தம்போற் பாடினேன்பார்
தென்பலிற் கும்பமுனி நீரும்கேளீர்
ஆமென்ற ஆணவங்கள் அகற்றிமைந்தா
அரகரா கேசரியின் அறிவைப்பாரே

இ-ள். என்னுடையக் கேசரின்மைந்தா அண்டரண்ட புவன மெல்லாம் மெய்க்கும்படியாகவும் வாலையினுடையப்பாடலை வண்மையாகச் சொன்ன மொழியைத் தேனைப்போலும் அமிர்தம் போலும் பாடினேன். கும்பமுனியேநீருங்கேளீர் ஆணவங்களை அகற்றி கேசரியின் அரிவைப்பாரும். எ-று. 47

பார்க்கவே என்பாடல் வெளியிலேதான்
பரவாமல் சபித்தேன்பார் பாரிலுள்ளோர்
ஏர்க்கவே எந்நூலைப் பழித்தபேர்க்கு
என்னசொல்வேன் மீளாத நரகமெய்தும்
மார்க்கமாய் சாஸ்திரத்தை மதியாமல்தான்
மகத்தான உதாசினங்கள் சொல்லுவார்கள்
தீர்க்கமாய் எரிவாயின் நரகம்தன்னில்
தீராத சாபமது சபித்தேன்பாரே.

இ-ள். பார்க்க என்னுடையபாடல் பரவாமல்படிக்கு சபித்தேன்; உலகிலுள்ளோர் எந்நூலைப் பழித்தபேர்கட்குப் மீளாத

நரகமானது வந்துவாய்க்கும் மார்க்கமாகிய இந்தசாஸ்திரத்தை மதியாமல் உதாசினங்கள் சொல்வோர்கள் எரியும்படியான நரகத்தில் விழுவார்களென்றும் தீராதச் சாபமானது மூன்றும் படியாக சபித்தேன் எ-று. 48

பாரப்பா என்னுடைய பிரமகீதை
பாருலகில் தினந்தோறும் பூசித்தோர்க்கு
காரப்பா இருதயத்தில் இருந்துநானும்
கடாட்சிப்பேன் சாயுச்யக் கருணையாலே
வாரப்பா மானிலத்தில் வறுமைநீக்கி
மகத்தான பாக்கியங்கள் வழங்குவேன்யான்
சாரப்பா சர்ஜ்ஜனரோ டிருந்துவாழ
சண்முகனார் தற்காப்பார் சொல்லினேனே.

இ-ள். பார்க்க என்னுடையப்பிரமகீதையை உலகின்மீது தினந்தோறும் பூசித்தபேர்கட்கு இருதயத்தில் இருந்துயானும் கடாட்சிப்பேன் கருணையினால் மானிலத்தில் வறுமையை நீக்கி மகத்தாகியப் பாக்கியந் தருவேன்; சர்ஜ்ஜனர்களோடு யிருந்து வாழ சண்முகருங் கார்ப்பார் எ-று. 49

சொன்னேனையா மஹாரிஷிகள் இன்னம்தாயே
சொல்லுமம்மா பார்வதியே துலங்கத்தானும்
வன்னமுள்ள தேவன்மொழியே எந்தன்மாதா
வகுத்ததொரு கீதையின் வரலாறெல்லாம்
பொன்னையா சரீரமுள்ள மனோன்மணித்தாய்
பொற்புடைய அற்புதமே வாலைதேவி
அன்னபுரி பூரணியே லோகமாதா
அடியேனை அடைக்கலம்நீ காத்தருள்செய்வாய்.

இ-ள். சொன்னேன் மகரிஷிகளே என இன்னமுந்தாயே சொல்லுமம்மாபார்வதியே துலங்கத்தானும் வகுத்தகீதையாவும் அதின்வரலாறெல்லாம் பொன்னைப்போன்ற சரீரமுடைய மனோன் மணித்தாய் அற்புதமாகிய வாலைதேவியே அன்னையே பரிபூர ணியே லோகமாதாவே அடியேன்களை அடைக்கலம் கார்த்தருள் செய்வாய் எ-று. 50

அடைக்கலமாம் என்னாலைக் குகையில்வைத்து
அட்சதையும் கெந்தபுஷ்பம் அணைத்தும்சாற்றி
முடக்கமொன்று இல்லாமல் மனதொன்றாகி
முயற்சியாய்ப் பூசித்து வந்தாரானால்
இடுக்கங்கள் இல்லாமல் தோற்றினாலும்
இன்பங்கள் இனிதளித்துத் துன்பம்தீர்த்து
ஒடுக்கங்கள் வந்திட்ட ஞானமீது
ஓகோகோ சாயுச்சம் ஈகுவேனே.

இ-ள். அடைக்கலமாக என்னூலைக் குகையில் வைத்து அட்சதையோடுக்கெந்த புஷ்பம்யாவும் சாற்றி முடக்கமில்லாமல் மனையொன்றில் நிருத்தி முயர்ச்சியாகத்தானே பூசித்துவருவாராகில் அவர்கட்கு இடுக்கடானது இல்லாமல் தோற்றி யான் இன்பமானது அளித்து துன்பங்கள் யாவுந்தீர்த்து ஒடுக்கமுடைய சாயுச்ய ஞான தருவேன் எ-று. 51

ஈந்திட்டேன் என்னுடைய நூல்தான்மைந்தா
இகத்திலே எல்லோர்க்குங் கிடையாதப்பா
ஆய்ந்திட்டேன் இந்நூலா யிரத்திலொருவன்
ஆனக்கால் அவனுக்கே காணுமப்பா
வாய்ந்திட்ட கோடியிலே ஒருவனுனல்
வண்மையுடன் அவனுக்கே வருகுமப்பா
தோய்ந்திட்ட தொல்லுலகில் எல்லார்க்கும்தான்
தோற்ருது என்னூல்தான் துலக்கம்கேளே.

இ-ள். ஈந்த என்னுடைய நூல் உலகத்தில் எல்லோருக்குங் கிடைக்கமாட்டாது. ஆயிரத்தில் ஒருவனுக்குக்கிடைக்கும்; அப்படிக் கிடைத்தோனுக்குயானும் கோடியில் ஒருவனுக்குச் சித்தியாகும்; உலகத்தில் எல்லார்க்கும் என்னூல் தோற்ருது எ-று.

கேளப்பா என்னூல்தான் படித்தமைந்தர்
கேவலமாய்த் தினந்தோறும் பூசித்தோரும்
நாளப்பா இனியஜெனனம் இல்லையில்லை
நன்மையுள்ள பரகதியை நாடுவான்பார்
வாளப்பா வண்மையுள்ள மைந்தரெல்லாம்
வரிசைபெற்ற எந்நூலின் வண்மையாக
வீளப்பா யல்லாமல் என்னூல்தானும்
விவரமாய்ச் சொல்லிவிட்டேன் வியந்துகேளே.

இ-ள். கேட்பீராக என்னூலைப்படித்தமைந்தர்களும் தினந்தோறும் பூசித்தோர்களும் நரசென்மமெடுப்பதில்லை, நன்மையாகியப் பரகதியை நாடுவார்கள். வண்மையுடைய மைந்தா யாவர்க்கும் வரிசைபெற்ற என்னூலில் வண்மையை யறிவீர் வியர்த்தமாகப் போகாதுமாகச் சொன்னேன் எ-று. 53

கேளடா உலகிலுள்ளோர் எல்லார்க்கும்தான்
கேவலமாய்த் தினந்தோறும் மைந்தாகேளு
நாளடா காலையிலே கால்முகங்கள்
நலமாகச் சுத்திசெய்து விபூதிசாத்தி
வாளடா சிவபூசை செய்துநீயும்
வண்மையுள்ள என்னூலை எடுத்துபாரு
தாளடா தாழ்வில்லா தவரைநாளும்
தற்காக்க யென்றுவரம் சார்ந்திட்டேனே.

இ-ள். உலகிலுள்ள எல்லார்க்கும் தினந்தோறும்கேளும்; காலையில் எழுந்து கைகால்முகம் இவைகளைச்சுத்திசெய்து விபூதி சாத்தி சிவபூசைசெய்து வண்மையாகிய என்னூலை எடுத்துப் பார்ப்போர்க்குத் தாழ்வில்லாமற்படிக்கு அவரை நாளும் தற் காக்கும்படியாக வரந்தந்தேன் எ-று. 54

## சிவபூசை மந்திரம்.

சார்ந்திட்ட சிவபூசை செய்யென்றால்
சாந்தமாய் சிவமந்திரம் சாற்றுவேன்யான்
ஆர்ந்திட்ட ஓம்ஆம்ஊம் ஸ்ரீயும்ரியும்
அங்ரீங்ஸ்ரீங் சிவாயநம யென்றிட்டேதான்
வார்ந்திட்ட சிவனுடைய மந்திரத்தை
வளமாக ஜெபஞ்செய்து பூசித்தாயானால்
தீர்ந்திட்ட சிவபூசை பெரிதாம்மைந்தா
செல்லலாம் சிவபதியிற் செல்லலாமே.

இ-ள். சிவபூசையானது செய்யவேணுமெனில் அதற்குச்சிவ மந்திரம் யான் செய்வேன் கேளும்: ஓம் ஆம் ஊம் ஸ்ரீயும் அங் ரீங் ஸ்ரீங் சிவாயநமா என்று சிவனுடைய மந்திரத்தை செபஞ் செய்துப்பூசித்து வருவாயானால் அச்சிவபூசை பெரிதாகையால் சிவபதியில் சேரலாம் எ-று. 55

## சத்திபூசை மந்திரம்.

சொல்லவே என்னுடைய செபந்தான்மைந்தா
செப்புகிறேன் ஓங்ரீங்ஸ்ரீங் சிவசத்திரூபி
மல்லவே வாலைபர மேஸ்வரியேதாயே
வாவாவா என்றுநிதம் மனத்திருத்தி
வல்லவே சோடசோப சாரத்தோடு
வீழ்ந்திறைஞ்சித் திருவடியைப் பூசித்தோர்கள்
வல்லவே வாலையிட அருளெவர்க்கும்
வண்மையாய் யீந்திட்டேன் வரிசையாயே.

இ-ள். சொல்வதற்கு இன்னமும் என்னுடைய செபத்தைச் சொல்கிறேன் கேளும் ஓம் ஸ்ரீங் ரீங் சிவசத்தி ரூபி வாலை பர மேஸ்பரி தாயே வாவாவா என்றும் மனதில் திருத்தி சோடச உபசாரத்தோடு வீழ்ந்து இரஞ்சிபூசித்தோர்க்கு வாலையினுடைய அருளானது எவர்க்கும் ஈவேன் எ-று. 56

## அகஸ்தியர் பூசை மந்திரம்.

ஆகவே கும்பமுனு பூசைமார்க்கம்
அற்புதமாய் சொல்லுகிறேன் மைந்தாகேளு
வாகவே தன்மையுள்ள மந்திரத்தை
வரிசையாய்ப் பூசைசெபம் செய்யவென்றால்

யாகவே ஓங்ரீங்ஸ்ரீங் அங்சங்வங்சிங்
வாவாவா சிவமநம கும்பமூர்த்தி
தாகவே தாழ்வில்லாப் பூசைசெய்தால்
தரணியிலே பிறப்பரிது முத்திதானே.

இ-ள். கும்பமுனியினுடைய பூசையின் மார்க்கம் அற்புதமாகத் தானே சொல்கிறேன் கேளும்; இந்த மந்திரத்தை வரிசையாகப் பூசைசெய்து வருவாய்; ஓங் ரீங் ஸ்ரீங் அங் சங் வங் சிங் வாவாவா சிவநமகும்பமூர்த்தியெனப் பூசையானதுசெய்ய முத்தியுண்டாம்

## விஷ்ணு பூசை மந்திரம்.

சொன்னெனப்பா வைகுந்தம் கோவிந்தன்பால்
சொற்பெரிய என்தமையன் பூசைகேளு
மன்னனப்பா வென்பிறவி அதிகசித்து
வாகாக ஆலிலைமேல் துயின்றமாயன்
அன்னனப்பா ஆயுசுக்கு வல்லவன்தான்
ஆனந்த அமிர்தமது கொண்டமாயன்
நிர்ணயமாய் உலகமெலாம் படைத்தமாயன்
நீணிலத்தில் ஆத்மாவைக் காப்போன்தானே.

இ-ள். சொன்னேன் வைகுந்தப்பதியாகிய கோவிந்தனாகிய சொற்பெரிய என்தமையன் பூசையைக்கேளும்; என்பிறவி அதிக சித்துடையவன், ஆலிலையிற்றுயில்வோன், மாயன், ஆயுசுக்கும் வல்லவன், அமிர்தங்கொண்டமாயன், உலகைப்படைத்தவன், உலகிலுள்ள ஆத்மாவைக் கார்ப்பவன் எ-று. 58

கார்ப்பதென்ன என்தமையன் உலகமெல்லாம்
காசினியோர் காணரிதாம் காட்சியாகும்
ஏர்ப்பதென்ன என்தமையன் சித்தேயாகும்
என்னசொல்வேன் என்பிறவி மாயன்தானும்
பார்ப்பதென்ன பலவுயிரைக் கார்க்கும்சுவாமி
பராபரத்தின் அருளாலே பயின்றோனப்பா
தார்ப்பதென்ன சற்குருவாம் ஆதிமூலம்
சராசரமும் பலபத்திர ராமன்தானே.

இ-ள். என்தமையன் உலகமாதியந்தமும் உள்ளோர்க்குக் காணுதற்கு அரிதாகியக் காட்சியாகும்; என் தமையனுடைய சித்தேசித்தாகும்; என்னென்று சொல்வேன் அவருடையமாயம்; பல உயிரையுங்கார்க்குஞ்சுவாமியாகிய பராபரத்தின் அருளினால் பயின்றோன் சற்குருவாகிய ஆதிமூலம் சராசரமும் படைத்த பலபத்திர ராமனாகும் எ-று 59

ஆமெனவே அண்டரண்ட புவனமெல்லாம்
ஆதியாம் படைத்ததொருபிறவி அப்பா
பாமெனவே பலவுயிரைக் காக்குநதெய்வம்
பசுநிறத்தோன் என்தமையன் பலத்தைச்சொல்வே

நாமெனவே நான்முகனைப் படைத்தமாயன்
நானறியேன் அவருடைய மகிமைதன்னை
தாமெனவே முனிவர்முதல் யாருங்காணார்
தாரணியில் மானிடரோ காண்பாரன்றே

இ-ள். அண்டரெண்ட புவனங்கள் எல்லாம் ஆதியாகத்தா
னே படைத்த என்பிறவியாகும்; பலவுயிர்களையுங் காக்குந்
தெய்வம் பசுநிறமுடைய என்னுடையத் தமையன் பலத்தைச்
சொல்வேன்; நான்முகனாகியப் பிரமாவைப் படைத்தமாயன்
நான் அறியேன் அவருடைய மாய்கையை; முனிவர்கள் முதல்
யாருங் காணார்கள் தரணியில் உள்ள மானிடர்கள் காண்பரோ

காணாத பொருளையெல்லாம் கண்டமூர்த்தி
காரணமாம் மூலமுதற் பொருளாமையன்
பேணாத மூவருக்கும் பொருளாமூர்த்தி
பேருலகில் உயிரையெல்லாம் அமைத்தமூர்த்தி
காணாத நலந்தீங்கும் அறிந்தமூர்த்தி
நாதாந்தம் விளங்குகின்ற ஞானமூர்த்தி
ஆணாத ஆண்பெண்ணும் ஆனமூர்த்தி
ஆயிரமாம் பேர்கொண்ட மூர்த்திதானே.

இ-ள். காணுதற்கரிதாகிய பொருளையெல்லாங் கண்ட
மூர்த்தியாகும் மூலமுதலாகிய பொருளாம் பேணாதாகிய மூவர்க்
கும் பொருளாகியமூர்த்தி உலகிலுள்ள உயிரை எல்லாம்
அமைத்த மூர்த்தி, காணுதற்கரிதாகிய நலந்தீங்கும் அறிந்த
மூர்த்தி, நாதாந்தம் விளங்கிய ஞானமூர்த்தி, ஆணும்பெண்ணு 61
மானமூர்த்தி, ஆயிரம் பெயரையுடைய மூர்த்தி எ-று.

கொண்டதொரு பொருளாம் என்தமையன்தானும்
கோவிந்த நாமமதை தரித்தமாயன்
அண்டமுதல் பதினாலு லோகமெல்லாம்
அவர்படைப்பே ஆகுமப்பா அறிந்துசொன்னேன்
எண்டதொரு அடிமுடியும் ஆதியந்தம்
இகத்திலே இவர்மகிமை யாரேயாகும்
நண்டதொரு நான்முகனே முதலாயுள்ள
நன்மைமுதல் அவர்மகிமை.நடத்தியாமே.

இ-ள். கொண்டப் பொருளாகும் கோவிந்தனெனும் நாமத்
தைத் தரித்தவராகும் அண்டமுதலாகியப் பதினாலுலோகம்
யாவும் அவருடையப்படைப்பாகும் அறிந்துச்சொன்னேன் அடி
முடியும் ஆதியந்தமும் இகத்திலும் இவருடைய மகிமையாகும்
நான்முகன் முதலாயுள்ளயாவரும் அவர்மகிமைக்குள் நடத்தி 62
யாகும். எ-று.

## விஷ்ணு மந்திரம்.

தாமப்பா என்தமையன் மந்திரத்தை
தாரணியில் ரிஷிகள்முதல் வானோர் தாமும்
நேமப்பா கொலைகளவு புலையும்நீங்கி
நினைவதனில் கொண்டுநிதம் நேசித்தேதான்
ஆமப்பா அரிராம சயமென்றேதான்
அன்பாகத் தினந்தோறுஞ் சேவித்தோர்க்கு
காமப்பா காட்சியுண்டாம் கருணையுண்டாம்
கயிலாச பதிதனிலே இருப்பார்தாமே.

இ-ள். என்னுடைய தமையன் மந்திரத்தை ரிஷிகள் முதலாகிய வானோர்களும் நேமமாகத்தானே கொலைகளவுபுலை இவைகளை நீக்கி நினைவில்கொண்டு நாளும் நேசித்து ஸ்ரீராமஜெயமென்றும் அன்பாகத்தானே தினந்தோறும் சேவிப்போர்களுக்கு காட்சியும் கருணையு முண்டாம் கயிலாசப்பதியிலிருப்பர்

ஆமென்ற அஞ்செழுத்தின் மூலமாச்சு
அம்பரத்தின் ஓரெழுத்தின் பொருளதாச்சு
வாமென்ற வாலையிட உயிர்தானாச்சு
வண்மையாய்ச் சொல்லிவிட்டேன் வரிசையாக
தாமென்ற தாரணியில் மனிதர்காணார்
சாற்றரிய தேவர்களும் ரிஷிகள்காணார்
ஊமென்ற உட்பொருளை சொன்னேன்மைந்தா
உற்றதொரு சேதிதனை உரைத்திட்டாயே.

இ-ள். ஐந்தெழுத்தின் மூலமாகியும் ஓரெழுத்தின் பொருளாகி வாலையினுடைய உயிராச்சு வண்மையாகத்தானே சொல்லிவிட்டேன்: தாரணியிலுள்ள மனிதர்கள் காணார்; உட்பொருள் யாவுஞ் சொன்னேன்; உற்றசேதிகள் யாவுமுறைத்தேன் எ-று.

## சுப்பிரமணியர் மந்திரம்.

உரைத்திட்டேன் என்தமையன் வரலாறெல்லாம்
உண்மையாய்ச் சகலசித்து எல்லாஞ்சொன்னேன்
நிறைந்திட்டேன் என்குழவி குமாரனையா
நீணிலத்தில் உயிர்களெல்லாந் தழைக்கவேண்டி
வரைந்திட்டேன் என்மகனும் கந்தன்தன்னை
வாகான அறுமுகனைப் போற்றிசெய்ய
அரைந்திட்டேன் ஆதியந்த உயிர்படைத்த
அறுமுகனார் மந்திரத்தை அருள்செய்வேனே.

இ-ள். உரைத்தேன் என்னுடையத் தமையன் வரலாறு யாவும் உண்மையாகத்தானே சகலசித்துகளும் சொன்னேன் என்னுடையக் குமாரனுகிய சுப்பிரமணியன் உலகத்திலுள்ள உயிர்கள்யாவுந் தழைக்கவேண்டி என் மகனுகியக் கந்தனை ஆறுமுகனைபோற்றி செய்ய அழைத்தேன் ஆதியந்தமாக உயிர்களைப் படைத்த அறுமுகனுடைய மந்திரத்தை அருளாகச்சொல்வேன்.

செய்யவே என்குமரன் அறுமுகத்தான்
செயல்பெருகி அவருடைய பெருமைகேளு
ஐயமில்லா அறுமுகனுர் மந்திரத்தை
அரகரா சொல்லுகிறேன் அருமையாக
பையவே ஓம் ஸ்ரீம்கிலியும் சரவணபவா என்றே
பாக்கியமாய் மைந்தனைப் பூசித்தாயானுல்
மெய்யவே என்பிள்ளை உனக்குமைந்தா
மேன்மையாம் பரகதியை அளிப்பார்பாரே.

இ-ள். செய்யும்படியாகிய என்குமாரன் அறுமுகவன்றன் செயலானதுப்பெருக அவருடையமந்திரத்தை கேளும்; ஐயமில்லாமற்படி அறுமுகவனுடைய மந்திரத்தை அருமையாகச்சொல்கிறேன் ஓம்-ஸ்ரீம்-கிலியும்-சரவணபவா என்றும் பாக்கியமாகத் தானே பூசித்துவரில் என்பிள்ளையும் உந்தனுக்கு மேன்மையாகியப் பரகதியை யளிப்பான் எ-று. 66

பாரப்பா தினந்தோறும் செபித்தபேர்க்கு
பதவியடா சாயுச்யம் ஈவார்கந்தன்
காரப்பா காட்சிபெரும் மகிமையீவார்
கருணைபெற கமனசித்தும் கடாட்சிப்பார்
சேரப்பா செல்வமது அனேகமீந்து
செம்மையுடன் வருமையெல்லாம் நீக்குவார்பார்
கூரப்பா குணமுள்ள மைந்தனுகும்
கூர்மையடா என்பிள்ளை குணம்சொன்னேனே.

இ-ள். பார்க்க தினந்தோறும் தவராமல் துதித்தப் பேர்களுக்கு சாயுச்சியப்பதவி ஈவான், கந்தனும் காட்சியாகிய மகிமையுங்கொடுப்பார்; செல்வமானது அனேகமீந்து வருமைகளை நீக்கிவைப்பார்; குணமுள்ள மைந்தனுகிய கூர்மையுள்ள என் பிள்ளையின் குணம் சொன்னேன் எ-று. 67

சொன்னெனையா என்பிள்ளை பூசிப்போர்க்கு
சொற்பெரிய பதவியடா அறுமுகத்தான்
அன்னெனையா ஐஸ்வரியம் உள்ளபாலன்
ஆனந்த அமிர்தமதைக் கொண்டநாதன்
வன்னெனையா வாலைக்கு வாலைரூபன்
வண்மையுள்ள என்பிள்ளை வயதேயாகும்

இன்னெனையா என்பிள்ளை கரிமுகத்தான்
இகத்திலே வினைமுதலாந் தெய்வமாமே.

இ-ள். சொன்னபடியே என் பிள்ளையைப் பூசிப்போர்க்கு சொற்பெரிய பதவியானதும் கொடுப்பார்; ஐஸ்வரியமுள்ளப் பாலனாகும்; ஆனந்தமாகிய அமிர்தத்தையுண்ட நாதன் வாலைக் குவாலை ரூபன் வண்மையுள்ள என்பிள்ளை யோகத்துடையவன் அன்றியும் கரிமுகவன் இகத்தில் வினைமுதலாகியத் தெய்வமாம்.

## விக்நேஸ்பரர் மந்திரம்.

இல்லையப்பா என்பிள்ளை கரிமுகத்தான்
இகத்திலே யிவனில்லாக் கார்யமில்லை
நல்லையப்பா நான்முகனும் முதலாயுள்ள
நல்லதொரு மூவர்கட்கும் முதலாய்நின்றோன்
அல்லையப்பா ஆதிமூலப் பொருள்தானாகும்
அரகரா என்மகன்தான் அறிவதாமே
வல்லமைகள் மெத்தவுண்டாம் பூசித்தோர்க்கு
வண்மையடா சாயுச்சிய பதவியாமே.

இ-ள். என் பிள்ளைக் கரிமுகவன்; இகத்தில் அவனல்லாது காரியம் ஒன்றுமில்லை நான்முகன் முதலாகவுள்ள மூவர்கட்கும் முதலாகத்தானே நின்றோன் ஆதிமூலப்பொருளாகும்; அரகரா வென்னும் அறிவுடையோன் அவரைப்பூசிப்போற்கு வல்லமை யுண்டாம் சாயுச்சியமுண்டாம் எ-று. 69

ஆகுமப்பா அவனுடைய கேசரியைத்தான்
அறிவதனை சொல்லவென்றால் முடியாதப்பா
வாகுமப்பா வஜ்ஜிரமணி பொருளுடையோன்தான்
வளமையாம் என்னாலை அறிந்தபேர்க்கு
தாகுமப்பா தன்பதியில் உள்ளமைந்தன்
தரணியிலே இவன்போலும் பெருமைபெற்றோர்
ஏகுமப்பா என்குருவாம் முனிதானாகும்
என்னசொல்வேன் யோகத்தின் இயல்புதானே.

இ-ள். ஆகும்படியாகிய அவனுடைய கேசரியை அறியச் சொல்ல முடியாது, வச்சிரமணியானப் பொருளுடையோன், வளமையாகத்தானே என்னாலை யறிந்தப்பேர்க்கு தன் பதியில் வாழும்படியான தரணியில் இவன் போலும் பெருமைப் பெற்ற வரில்லை, என்னுடைய குருமுனியாகும் என்சொல்வேன் யோகத்தினுடைய இயல்புகளை எ-று. 70

தானென்ன என்னாலை எவரானாலும்
தாரணியில் கேட்டபேர் பிரமைகொள்வார்
வானென்ற வையகத்தி லிந்தனாலை
வளமையாய் காணரிது வரிசைசொல்வேன்

பாரென்ற பலபொருளை அறிந்தபேர்க்கு
பக்குவமா யென்னூல்தான் தோயும்பாரு
ஊனென்ற உட்பொருளை அறிந்தாரானால்
உண்மையுடன் காணுமடா உறுதிதானே.

இ-ள். தானெனும்படியாகிய என்னூலை எவராகினும் பூமியின்மீதுக்கேட்ட பெயர்களெல்லாப் பிரமைக்கொள்வார். இந்த வையகத்தில் இந்நூலைக்காணவரிதாகும். பலபொருளையும் அறிந்தபேர்க்கு பக்குவமாகத்தானே எந்நூல் விளங்கும் உட்பொருளையறிந்தாராகில் உண்மையாகத்தானே காணும் உறுதியாகும்.

உறுதியாய் என்னூல்கோடியில் ஒருத்தர்
உத்தமர்க்கு கிடைக்குமென்று உறுதிசொன்னேன்
பருதியாய்ப் பாலகர்க்குக் கிடைக்கும் அப்பா
பாங்காக என்னூல்தான் வதனமப்பா
இருதயத்தில் என்னூலை வைத்துநீயும்
இன்மையுடன் பூசித்தால் முத்தியுண்டாம்
சுருதியாய்சூட்சமதைச் சொன்னேன்மைந்தா
சுகமாக என்னூலைப் பதனம்பாரே.

இ-ள். உறுதியாகத்தானே எந்நூலை கோடியில் ஒருத்தர் உத்தமராக விளங்கில் அவர்க்குக் கிடைக்கும் சூரியப்பிரகாசம் போல் துலங்கக்கிடைக்கும் எந்நூல் வதனமாகும். இருதயத்தில் எந்நூலை நினைவாக வைத்து இன்மையாகத்தானே பூசித்துவர முத்தியுண்டாம். சுருதியாகவும் சூட்சமாச்சொன்னேன் சுகமாகத்தானே என்னூலைப்பாரும் எ-று. 72

பாரடா என்னூலை வெளியிலேநீ
பாங்காக பிரபஞ்ச வளவில்போட்டால்
தாரடா அவர்தலையும் வெடித்துப்போக
தரணியிலே சபித்திட்டேன் தாழ்வில்லாமல்
பேரடா பாவிகட்கு யீயலாகாது
பேரின்ப முள்ளவர்கட் கீயலாகும்
கூரடா குணமுள்ள பிள்ளைகட்குக்
கொடுக்கவும்தான் வேணுமப்பா சொல்லுவேனே.

இ-ள். பார்க்க என்னுடைய நூலை வெளியில் நீ பாங்காகத் தானே பிரபஞ்சத்திற் போடுவாயாகில் அவர்கள் தலையும் வெடித்துப்போகும்படி தரணியில் செபித்துவிட்டேன். தாழ்வானது இல்லாமல் அன்றியும் பாவிகட்கு ஈயலாகாது பேரின்பம் பெற்றவர்களுக்கு ஈயலாகும் குணமுடையப் பிள்ளைகட்குங் கொடுக்க வேண்டும் எ-று. 73

சொன்னேனப்பா ரிஷிகளே தேவர்கேளீர்
சொல்லுதற்கு இன்னமும் தான்மதிகமுண்டு

அன்னனப்பா அகஸ்தியரே வதிஷ்டர்காள்நீர்
அரனார்தான் எந்தனுக்கு உபதேசித்தார்
வன்னனப்பா அவர்தவசில் கண்டசேதி
வாகாக எந்தனுடன் சொன்னார்பாரு
முன்னனப்பா பிரமலிபி அமைப்புமைந்தா
முதன்மையுள்ள பிரமாவின் அமைப்புதானே.

இ-ள். சொன்னேன் ரிஷிகளே தேவர்களே கேளீர் சொல்ல வென்றால் இன்னமும் அதிகமுண்டு அகஸ்தியரே வதிஷ்டரே கேளீர் அரனார் எந்தனுக்கு உபதேசித்தனர். அவர் தவசில் கண்டசெய்தியை என்னுடன் சொன்னார். பிரமலிபியும் அமைப் பும் முதன்மையானது பிரமாவின் அமைப்பு எ-று. 74

தானென்ற தத்துவத்தின் ஆத்துமபோதம்
தயவான தவசுகளில் முத்திமெத்த
கானென்ற சரிகையுண்டு கிரிகையுண்டு
கனமான யோகமுண்டு ஞானமுண்டு
ஊனென்ற சப்தரிஷி என்றபேர்கள்
உமைபெற்றார் னூலினிடப் பெருமைதானே
வானென்ற வையகம்தான் பிழைக்கவேண்டி
வண்மையாய்ச் சாஸ்திரத்தை வகுத்திட்டேனே.

இ-ள். தத்துவமாகிய ஆத்மா போதமுடன் தவம் புரிந்து முத்தியானது பெற்ற சரியைகிரியையோகம்ஞானம் என உண்டு சப்தரிஷிகளென்னும் பெயர்கள் உமையானதுப்பெற்றார். நூலி னுடைய பெருமையில் இந்தவையகத்திலுள்ளோர்கள் பிழைக்க வேண்டியும் வண்மையாகத்தானே இச்சாத்திரத்தை வகுத்திட் டேன் எ-று. 75

இட்டதொரு என்னூலைக் கையில்வைத்து
இன்பமுடன் சோடசமும் ஆச்சுதப்பா
தொட்டதொரு கெந்தமுடன் தூபதீபம்
சொர்ணம்போல் சிவபூசை செய்துநீயும்
கிட்டதொரு வேதாந்த கடாட்சத்தாலே
கிருபையுற்று பூசைசெய்து வணங்குவோர்க்கு
இட்டதொரு கட்டளைகள் தவறாமல்தான்
இயல்பான சாயுச்யம் ஆகும்பாரே.

இ-ள். இட்ட என்னுடைய நூலை கையில் வைத்துசோடச மோடு அர்ச்சித்து கெந்தமோடு தூபதீபம் கொடுத்துசிவ பூசை செய்துவரில் வேதாந்தக் கடாட்சத்தினால் கிருபையுற்றும் பூசை யானது செய்து வணங்குவோர்க்கு இட்டக் கட்டளைத் தவறாமல் சாயுச்சிய பதவிகிடைக்கும் எ-று. 76

பாரப்பா பரமபதம் அடையும்பேர்க்கு
பாங்காக என்னூல்தான் கிட்டும்பாரு
காரப்பா அவர்வயற்றில் நானேசென்று
கருணையாய்ப் பிறந்திடுவேன் கருதிச்சொல்லு
சேரப்பா செம்மையுள்ள தேவனுக்கு
செயலான என்னூல்தான் தெரியும்பாரு
ஆரப்பா என்னைப்போல் உலகத்துள்ளே
அருள்செய்வார் பிரமனே அறிந்துசொல்லே.

இ-ள் பார்க்க பரமபதத்தை அடைகின்ற பேர்க்கு பாங்காகிய என்னூல் கிட்டும். அவர்களுடையவயற்றில் நானேசென்று கருணையாகத்தானே பிறப்பேன். பிரமதேவனுக்கு என்னூல்தான் பிரியம்; யாரும் என்னைப்போல் உலகத்துள் அருள்செய்யார்; ஓபிரமனே அறிந்துச் சொல்வாய் எ-று. 77

சொல்லியதோர் சாஸ்திரங்கள் அனந்தங்கோடி
சொற்பெரிய வேதமுதல் அநேகம் உண்டாம்
அல்லியதோர் அந்தநல்ல நூல்கள்தானும்
அடிவணங்கித் தெண்டனிட்டு போற்றிசெய்யும்
வல்லியதோர் நூல்களெல்லாம் வணங்கிநிற்கும்
வாகான குருநூலாய்த் தொழுதுபோற்றும்
மல்லியதோர் மனமகிழு மகத்துவத்தால்
மனோன்மணியாள் கட்டளைகள் மறவாதன்றே.

இ-ள். சொல்லும்படியான சாஸ்திரங்களோ அனந்தங்கோடியுண்டு; வேதமுதலானதும் அனேகமுண்டு; அந்தநூல்களூ யாவும் அடிவணங்கியும்தெண்டனிட்டும் போற்றிசெய்யும். இன்னுமுள்ள நூல்கள்யாவும் வணங்கிநிற்கும். இந்நூலைக் குருநூலாகத்தொழுதுப்போற்றும் மனமகிழும்படியானத் தத்துவத்தினால் மனோன்மணியாள் கட்டளையானது மறவாதாம் எ-று. 78

மறவாத பேர்களுக்கு எந்நூல்வேண்டும்
மகத்துவமாம் இருக்கவென்றால்
இறவாமல் இருக்கவென்றால் எந்நூல்வேண்டும்
இகத்திலே இருப்பவர்க்கு எந்நூல்வேண்டும்
துறவாமல் இருக்கின்ற பேர்கட்கப்பா
துன்பங்கள் அகற்றிவிடும் எந்நூல்மைந்தா
சறவான சற்சனராம் பெரியோரெல்லாம்
சற்குருபோல் நினைப்பவர்கட் கீவர்தானே.

இ-ள். மறவாதபேர்கள் தமக்கு எந்நூல்வேண்டும்; மகத்துவமாகத்தானே யிருக்கும் இறவாமலிருக்க வென்றாலும் எந்நூல்வேண்டும்; இகத்தியிருப்பவருக்கும் எந்நூல் வேண்டும் துற

வாக இருக்கின்றவர்கட்கும் துன்பமானதை யகற்றும் எந்நூல் சர்ச்சனராகிய பெரியோர்களெல்லோரும் சற்குருவால் நினைப் போர்க்கு ஈவார் எ-று. 79

ஈவதுதான் யார்க்கென்றால் சிவயோகிக்கு
இகத்திலே பாவிகளுக் கியலாகா
நோய்வருகும் பாவிகளுக் கீந்தாயானால்
றுதனமா மவர்கட்கு நுண்மைதோன்று
ஆய்வரும்பார் என்னூலைப் பூசித்தோர்க்கு
அரகரா அதிகமுடன் பாக்கியமீவேன்
தீய்வரும்பார் பொல்லாத பாவியுண்டு
திருவருளால் அறிந்துநீ தூரத்துள்ளே.

இ-ள். ஈவது யார்க்கெனில் சிவயோகிக்குமாம். இகத்திலுள்ளப் பாவிகளுக்கு ஈயலாகாது; நோயானது வரும்; பாவிகளுக்கு ஈந்தாயாகில் அவர்கட்கு உண்மையானது விளங்காது; எந்நூலைப் பூசித்தோர்க்கு அரகராவென அதிகமாகியப் பாக்கியங்களீவேன்; தீயானதுப் பற்றும்; பகரும் பாவிகட்கெல்லாம் அதை யறிந்து அவர்களைத் தூரத்தள்ளுவாய் எ-று. 80

தள்ளுவதிங் காரையென்றால் குணமில்லாரை
சற்குருவை அறியாத சமையத்தோரை
கள்ளுடனே அபினிகளைக் கொண்டபேரை
கஞ்சாவும் இறையும்மீன் கொண்டபேரை
உள்ளுணர்ந்து பாராத உலுத்தர்தம்மை
உத்தமரைத் தூஷணமாய் உரைப்போர்தம்மை
நல்லுணர்வு சற்றுமில்லா மூடர்தம்மை
நலமாகக் கண்டறிந்து நயந்துதள்ளே.

இ-ள். தள்ளுவது யாரையெனில் குணமில்லாரையும் சற்குருவையறியாதோரையும் கள்ளு அபினி கஞ்சா இறைச்சி மம்சம் இவைகளை உண்போரையும், உள்ளுணர்ந்து பாராத உத்தமர் தங்களையும் உத்தமர்களைத் தூஷணமாகச் சொல்லுவோர்களையும் நல்லறிவில்லாத மூடர்களையும் கண்டறிந்து தள்ளவேண்டும் எ-று.

அறிந்துநான் சொன்னதொரு ரேகைசாஸ்திரம்
அன்பான நூலுதனைப் படித்துநீயும்
தெரிந்துநான் சொன்னதொரு ரேகைதன்னை
திருவுளத்தின் அருளாலே தெரிந்துகொண்டு
வருந்திநின்றால் வகுத்தப்படி எல்லாம்தோயும்
வண்மையுள்ள லோகத்தில் மாய்கைநீங்கும்
பிரிந்துநான் பிரியாத விடையிருந்து
பிரபலங்கள் ஆக்கிவைப்பேன் பிரியமாயே.

இ-ள். யான் சொல்லிய ரேகை சாஸ்திரமாகிய அன்பான இந்நூலைப் படித்து நான் சொன்னரேகைகளை திருவுளத்தின் அருளால் தெரிந்துகொண்டு வகுத்தபடியாக வகுத்து நிற்பாரா கில் யாவுந்தோற்றும் உலகமாய்கைநீங்கும்; நானும் பிறியாமற் படிக்கு யிருந்து பிரபலமாகத்தானே யாக்கிவைப்பேன் எ-று.

ஆகவே அவருடைய வமிசந்தோறும்
அந்தரத்தில் நிற்கின்ற பேர்களுக்கும்
வாகவே வாலையிட மோட்சமீந்து
வன்மையாம் வைகுண்டம் ஈய்வேன்பாராய்
தாகவே தாழ்வில்லாப் பதவியீந்து
சாயுச்சியம் ஈந்திடுவேன் தாழ்வில்லாமல்
பாகவே பலபொருளும் அருளும்ஈசன்
பாலகர்க்கு மோட்சமதைப் பாலிப்பாரே.

இ-ள். ஆகவும் அவர்களுடைய வம்சந்தோறும் அந்தரமாகத் தானே நிற்கின்றப் பெயர்களுக்கும் வாலையினுடைய மோட்ச மானது ஈந்துவண்மையாகத்தானே வைகுண்டப்பதவி ஈவேன். தாழ்வில்லாமற்படி சாயுச்சியப்பதவி ஈவேன். அன்றியும் பல பொருள்களையும் அருளி ஈசன் பாலர்களுக்கு மோட்சம் பாலிப்பார் எ-று. 83

மோட்சமென்று முன்சொன்னேன்சொன்னேன்மைந்தா
முதல்நமசி வாயவென்று மொழிந்தேயானும்
வாச்சுதடா வாலையிடக் கிருபைதானும்
வண்மையால் அவரிடத்திற் குடியிருப்பேன்
ஆச்சுதடா ஆயுசுதான் வளரவேண்டும்
அண்டரண்ட புவனமெல்லாம் மெய்க்கவேண்டி
பாச்சுதடா பலபொருளை அனுபவிக்கப்
பத்தனைத்தான் காத்திடுவேன் பகர்ந்திட்டேனே.

இ-ள். மோட்சமென்றுஞ் சொன்னேன் முதலாகிய நமசி வாயமென்றும் மொழிந்தேன். வாலையினுடைய கிருபையானது பெருகி அவர்களிடத்தில் குடியாகவிருப்பாள். ஆயுசானது, வளரவேண்டியும் அண்டரெண்ட புவனமெல்லாம் மெய்க்க வேண்டியும் பலபொருளையும் அனுபவிக்க பத்தனையான் கார்த்திடுவன் எ-று. 84

பகருவேன் கேசரியின் வரலாறெல்லாம்
பக்குவமாய் உள்ளபடி பகர்ந்தேன்மைந்தா
நிகருவேன் நீணிலத்தில் மனிதர்க்கெல்லாம்
நிகழ்த்தினேன் சாஸ்திரத்தின் நேர்மைதானே
அகருவேன் ஆதியந்தம் பொருள்களெல்லாம்
அமைத்தபடி முடித்துவிட்டேன் அவனிக்காக

உகருவேன் இன்னம் ஒருவிதிதான்மைந்தா
உண்மையாய்ச்சொல்லுகிறேன் உகந்துகேளே

இ-ள். பகரும்படியான கேசரியின் வரலாறெல்லாம் பக்குவமாகத்தானே உள்ளபடியாகப்பகர்ந்தேன். உலகத்திலுள்ள மனிதர்கள் யாவர்களுக்கும் நிகழ்த்தினேன். சாஸ்திரத்தினுடைய நேர்மைகளையும் ஆதியந்தமாகியப் பொருள்களையெல்லாம் அமைத்தபடியாக முடித்தேன். அவனியோர்களுக்காகவும் சொல்வேன் இன்னம் ஒருவிதியை உண்மையாகத்தானே சொல்கிறேன் உகந்துகேளும் எ-று. 85

கேளப்பா இன்னம் ஒருசேதிமைந்தா
கேவலமாய்ச் செல்லுகிறேன் ரிஷிகள்கேளீர்
நாளப்பா கேசரிமுற் சனனம்நாலாம்
நன்மையுடன் கொடுத்திருந்த பேர்க்குக்கிட்டும்
வாளப்பா வண்மையுள்ள மைந்தர்காக்கும்
வளமான நூல்விதியும் வண்மையாகும்
ஆளப்பா ஐஸ்வரியம் உள்ளபேர்க்கு
அன்பான எந்நூல்தான் கிட்டும்பாரே.

இ-ள். கேளுங்கள் ரிஷிகளே சொல்கிறேன்கேசரியினுடைய முற்சனனம் நான்காகும் பதவிக் கொடுத்திருந்தப் பெயர்களுக்குக்கிட்டும் வண்மையுடைய மைந்தர்கட்கும் கிட்டும் நூலின்விதியும் வண்மையாகும் ஐஸ்வரியமுள்ள பேர்களுக்கு எந்நூல்கிட்டும்

பார்க்கவே ரேகைகளைப் படித்துநல்ல
பாங்கான வரைகளெல்லாம் குறிப்புகண்டு
கார்க்கவே பலவகைகள் சொல்லக்கேட்டு
கருணையாய்ப் பலன்களெல்லாம் சொல்லக்கேட்டு
மார்க்கமாய் அனுபவங்கள் வந்ததாய்ந்து
மகத்தான வாழ்வுமுதல் வரமறிந்து
ஊர்க்கவே சகலதுறை எல்லாம்கண்டு
உற்பனமாய் வெளிஏறி உறுதிசொல்லே.

இ-ள். பார்க்க ரேகைகளைப் படித்தும் வரைகளின் குறிப்பை கண்டும் பலவகையும் அறிந்துபார்த்துங் கருணையாகத்தானே பலன்கள் யாவும் சொல்லக்கேட்டும் அதிலனுபவமாக வந்ததை ஆய்ந்துங் வாழ்வுமுதலாக வரவையும் அறிந்தும் சகலதுறையுங் கண்டும் வெளியேறி உறுதியாகச் சொல்வாய் எ-று 87

உறுதியாய் இந்தநல்ல சாஸ்திரம்தான்
உத்தமமாய்ப் பனிரெண்டாயிர முன்சொன்னேன்
திருதியாய்ச் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
தேறுகின்ற ஆயிரத்திருனூறும் சொன்னேன்

பருதியாய்ச் சாஸ்திரத்தை அதன்பின்மைந்தா
பண்பாகச் சொல்லிவிட்டேன் மைந்தாகேளு
நிருதியாய்ச் சாஸ்திரத்தின் நிலமையெல்லாம்
நிகழ்த்தினேன் உள்ளமட்டும் நீதிதானே.

இ-ள். உறுதியாக இந்த சாஸ்திரம் பனிரெண்டாயிரமும் சொன்னே னதன்பின்பு ஆயிறத்தி ஒருநூறும் சொன்னேன்; அதன்பின்பு சாஸ்திரங்களைப் பண்பாகத்தானே சொன்னேன்; சாஸ்திரத்தின் நிலைமைகள்யாவும் நிகழ்த்தினேன் நீதியாகும் 88

நீதியென்ன சாஸ்திரத்தைப் படித்தாலும்தான்
நிகழ்ச்சியில்லை பெருமையில்லை நீதியில்லை
சோதியென்ன யென்நூலைப் படித்தாலும்தான்
சொல்லவென்றால் அளவற்ற பாடல்மைந்தா
ஆதியென்ன கரங்கள் தன்னைக்கண்டறிந்தால்
அன்பாக என்னுதவி வேண்டுமப்பா
மீதியென்ன என்னுடைய தியானம்வேண்டும்
மேலாகப் படித்ததெல்லாம் விளம்பும்பாரே.

இ-ள். நீதியோடு சாஸ்திரத்தைப் படித்தாலும் நிகழ்ச்சியும் பெருமையும் நீதியும் இல்லை. சோதியாகிய என்நூலைப்படித்தால் சொல்லுதர்க்கு அளவற்றப் பாடலாகும். ஆதியாகத்தானே கரங்களைக்கண்டறிந்தால் என்னுடைய உதவியானது வேண்டும். என்னுடைய தியானமும்வேண்டும். அப்போது மேலாகப் படித்தது யாவும்விளம்பும் எ-று. 89

பாரப்பா தியானமுற்ற வேளைதன்னில்
படித்ததெல்லாம் இருதயத்தில் தோணவைப்பேன்
காரப்பா கருணையுடன் மனதில்நாவில்
கருதியே இருந்துநான் சாஸ்திரம்சொல்லி
கூரப்பா குணம்குறிகள் வாழ்வுயோகம்
குணமாக நடக்கும்வகை நாளும்கோளும்
வீரப்பா வாராமல் மரணமாகி
விவரமதைச் சொல்லிநான் மெலிவுகேளே.

இ-ள். தியானமானது வைப்பாராகில் படித்தது யாவும் இருதயத்தில் தோணும்படியாக வைப்பேன். கருணையாகத்தானே நாவிலிருந்து சாஸ்திரங்களைச்சொல்லிவைப்பேன். குணக்குறியும்

வாழ்வு யோகமும் நடக்கும் வகையும் நாளுங்கோளும் மரணமாதியும் விபரமாகச்சொல்லி மெலிவுதீர்ப்பேன் எ-று. 90

கேளப்பா இப்படிநீ மூலம்கேளு
கேவலமாய் அணுவளவு சூட்சம்உண்டு
ஆளப்பா அந்தநல்ல சூட்சம்கேட்டால்
அரகரா நூலெல்லாம் நிமைக்குள்சித்தி
நாளப்பா இப்படிநீ ஆசானிடத்தில்
நலமுள்ள சத்திபிட குடிசையில்தான்
வாளப்பா கேட்டாக்கால் வருகும்பாரு
வகைதெரியாப் பாவிகட்கும் வருகும்பாரே.

இ-ள். மோக்ஷசாம்ராஜ்யத்தை அடைய விரும்புவதற்கு சூஷம் உண்டு. அந்தவழியே கண்டுபிடித்தால் அரகரா ஒரு நிமைக்குள் எல்லாகாரியமும் வனக்கு சித்தியாகும். நீ ஒரு ஆசானிடமாக அடுத்து தெரிந்து கொள்ளவேண்டும். மேலும் சத்தியைபூசை செய்து வரவேண்டியது இந்தவகை தெரியாத மானிடர்க்கு தெரியாது. தெரியவேண்டுமாகில் அகஸ்தியர் பஞ்சபட்சிமூலமும் உரையுமாக அச்சிட்டிருக்கிறேன் அதைவாங்கிப்பார்த்தால் கண்ணுடியைப் போல்தோற்றும் எ-று. 91

வருவதுதான் குருமூல்யம் வருகவேண்டும்
வாசான் ஆயான சொல்கேட்கவேண்டும்
உருவதுதான் எனைப்பெற்ற பெரியோரெல்லாம்
உத்தமர்க்குத் தொண்டுசெய்து வந்ததப்பா
பருவதுதான் பாலகர்க்குப் பலநாள்தானும்
பாங்காகச் சொல்லியதை அறிவதுண்டோ
அருவதுதான் ஆத்மாவின்பொருள் அறிந்தோர்
அல்லாத பேர்களுக்கும் அறியப்போமோ.

இ-ள். உனக்கு வரவேண்டுமானல் குருமூல்யமாய் வரவேண்டும். நீயும் ஆசான் சொல்தள்ளாமல் இருக்கவேண்டும். தவிர பெரியோராகிய மகான்களுக்கும் யோகிகளுக்கும் தொண்டுபுரிந்தாயாகில் ஆத்மாஒடுங்கும்வழி சொல்வார். போகர் பஞ்சபட்சி மூலமும் உரையும் பார்த்தால் யோக சாதனங்களுக்கு வழி தோற்றும் எ-று. 92

போமென்று சொன்னதொரு உமைபாதத்தில்
போதமுள்ள மகாரிஷிகள் ஆனேரெல்லாம்

வாமென்று வாலையைத்தான் தோத்திரம்செய்து
வணங்கினார் ஆதியந்தம் அண்டபிண்டம்
ஊமென்ற உத்தமியே பராசத்தித்தாயே
உமையவளே சரணம்என்று வணங்கினார்கள்
ஆமென்ற அரகரா ஏழுகாண்டம்
அன்பாக இரேகையதால் அறைந்தேன்முற்றே

இ-ள். உமையவள் பாதாரவிந்தத்தை மகாரிஷிகள் ஆனவர்கள் வாலையைபூசைசெய்து பதவி யடைந்தார்கள். சத்தியானவளை தொழாமல் அநேகம்பெயர் கெட்டார்கள். ஆனதால் சத்தியானவளை பூசை செய்து இரேகைசாஸ்திரம் ஏழுகாண்டமும் மூலமும் உரையுமாக இயற்றினேன் தவிர ரோமரிஷியார் அருளிச்செய்த விஞடி பஞ்சபட்சி மூலமும் உரையுமாக இயற்றியிருக்கும் அதைவாங்கிப் பார்த்தால் சுலபமாகத்தோற்றும் எ-று. 93

**இரேகை சாஸ்திரம் மூலமும்-உரையும் முற்றிற்று.**



உ
சத்திய துணை.

# ஹஸ்த இரேகை சாஸ்திரத்தின் தலைப்புகளின் அட்டவணை.

## முதற் காண்டம்.



## இரண்டாங் காண்டம்.



## மூன்ருவது காண்டம்.

# ஹஸ்த இரேகை சாஸ்திரத்தின் தலைப்புகளின் அட்டவணை.

பக்கம்.



## நான்காவது காண்டம்.



## ஐந்தாவது காண்டம்.



## ஆருவது காண்டம்.



## ஏழாவது காண்டம்.

# சரோஜனி.

## அழகே ஓர் உருவமாய் அமைந்த பத்துச் சித்திரப் படங்கள் அடங்கியது.

"பகற் கொள்ளை! பகற் கொள்ளை!! கௌரமான வியாபாரி கொள்ளைக் காரனாக மாறினான் !!!" என்று இக்கதையின் முதல் அத்தியாயத்தில் அலங்காரமாம ஆரம்பிக்கப்பட்ட இந்நாவலை கையிலெடுத்து வாசிக்க ஆரம்பித்து விட்டால் வேறெவ்விதமான அவசரவேலைகளிருப்பினும் அவைகளை மறந்து இந்த நாவலிற் செறிந்துள்ள சொற்சுவை பொருட் சுவைகளால் வசியமாக்கப் பட்டு வாசித்து முடிவெய்திய பின்னரே அவைகளைச் செய்யு மென்பது நிச்சயம்.

## இதில் அடங்கியுள்ள அத்தியாயங்கள்.

தட்டாரச் சிவப்பிரகாசம்; எண்பதினாயிரம் ரூபாய்க்கொள்ளை
திவான்பகதூர் மதனகோபாலர் நீலநிற இரகசியக்கடிதம்
இந்திரஜாலம்—இரகசியக்கொலை
ரோஜாமலர்! கரியப்பட்டாடை!!
காதற் கடிதங்கள்—தண்ணீர்த்தொட்டி
கமிஷனர் விசாரணை—இன்ஸ்பெக்டர் கஜபதிராவ்
கனகாம்பரம்! நீலாம்பரம்!!
இருபதாம் நூற்றாண்டின் இணையிலா விநோதம்!
புகைப்படம்—கைரேகைகள்
பதினைன்காந்தேதி—சரசகாகசுந்தரி
கண்ணபிரான்—சரோஜனி
மாஜிஸ்ட்ரேட் விசாரணை—அநாம தேயக் கடிதம்
திருவண்ணாமலை—சந்நிதித்தெரு
வஞ்சகவலை—வலியவந்த ஆபத்து
மூன்றுகொலையாளிகள்—நல்லபாம்பு
ஆச்சரியமர்மங்கள்—இன்ஸ்பெக்டரின் சந்தேகம்
தபால்ஆபீஸ்—போலீஸ்டேஷன்.
முப்பட்டைதீர்த்த கந்தி! கொலை செய்வது யார்
திருக்கழுக்குன்றம் அதிசயச்சந்திப்பு
கள்ளக் காதலர்களின் பால்ய லீலை
விவாக மகோச்சவம்—புரொபஸர் நாயகம்.
காதலர்களின் சம்பாஷணை—இன்ப முடிவு.

**இதன் விலை ரூபா 2 0 0**

இப்புத்தகம் ஒன்றே உபாத்தியாயரின் உதவியின்றி
வெகு விரைவில் யாவரையும் ஆங்கிலத்தில் வல்லவராக்கும்.

# ஆங்கிலபோதகன்

**தமிழ் எழுத்துக்களைக்கொண்டே இங்கிலீஷ் கற்றுக்கொள்ளலாம்.**

இதுபோல் இங்கிலீஷ் பாஷையைப் போதிக்கும் நூல் வேறே கிடையாது

இதை வாசித்தால் அதிக சுலபத்தில் இங்கிலீஷ் எழுதவும் பேசவும் நன்றாய்த் தெரிந்துகொள்ளலாம். இதற்கு உபாத்தியாயர் தேவையில்லை. இதில் ஆங்கில எழுத்துக்களையும், பதங்களையும் தமிழில் உச்சரிக்கும்விதங்களைக்காட்டி ஆங்கில பாஷையிலுள்ள இரண்டெழுத்துச் சொற்கள் முதல் பல வெழுத்துச் சொற்களையும் விவரித்து அவற்றிற்குச் சரியான தமிழ் உச்சரிப்புக்களையும், தமிழ் அருத்தங்களையும், அவ்வப்பதங்களைக், கொண்ட வாக்கியங்களையும், படிப்படியாக யாவரும் வெகு சுலபமாய்த் தெரிந்துக் கொள்ளும்படி எழுதப்பட்டிருப்பதுடன் மிருகங்கள் பட்சிகள், வீட்டுச்சாமான்கள், உணவுப்பொருள்கள்; குடும்ப விவகாரங்கள், வியாபாரவிஷயங்கள், தேகாரோக்கியம், சரீரக்கூறுகள், உத்தியோகவிஷயம், நீதிஸ்தானம் முதலிய அரசாங்க விவகாரங்கள், சிநேக சம்பாஷணைகள், கடிதமெழுதும் முறைகள், கிராமாதிசயங்கள், பட்டணவாழ்க்கை, தொழிற் சம்பந்தமான விஷயங்கள் விண்ணப்பங்கள், கலியாண முதலிய சுப விகிதங்கள், வியாசங்கள், சிறு கதைகள், உலக அனுபவத்திற்கான சகல விஷயங்களும் சுலபமான நடையில் இங்கிலீஷிலும், தமிழிலும் எழுதப்பட்டிருக்கின்றன.



இஃது ஆக்கிலம் கற்க அவாவுறும் ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் மாத்திரமன்றி கிராமாதிகாரிகள், கணக்கப்பிள்ளைகள், தோட்டக் கங்காணிகள், கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள், இராணுவ சிப்பாய்கள், வியாபாரிகள், ஐரோப்பியரிடமிருக்கும் தொழிலாளர்கள் முதலிய யாவருக்கும் மிகவும் அவசியமானது.

திக்கு கடிதம் காலிகோ பயிண்டு 832-பக்கங்கள் கொண்ட
பெரிய புத்தகம் விலை ரூபா 2 0 0

---

எமது விலாசம்:— **ஸ்ரீ பாரதி புத்தகசாலை,**
**சூளை போஸ்ட், மதராஸ்.**